# சித்தர் பாடல்கள்- ஆய்வும் அகராதி வடிவமைப்பும்

# (6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை)

முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக

சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு

அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

த.ஜெயந்தி., பி.லிட்.,எம்.ஏ.,எம்.ஃ.பில்.,

முழுநேரமுனைவர்பட்டஆய்வாளர்

மேற்பார்வையாளர்

முனைவர் வ.ச.அபிராமவல்லி., எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர்,தமிழ்த்துறை

தமிழ்த்துறை

எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

சென்னை– 600 008.


ஜனவரி - 2019

**முனைவர் வ.ச. அபிராமவல்லி** **எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி.,**
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை– 600 008

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை)** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காக, திருமதி **த. ஜெயந்தி** 2012 – 2019 ஆம் கல்வியாண்டில் நிகழ்த்திய ஆய்வேடாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு ஆய்வுபட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர் தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

**இடம் : சென்னை**

**தேதி: -2019**

**(வ.ச.அபிராமவல்லி)**

**மேற்பார்வையாளர்**

**திருமதி. த.ஜெயந்தி,எம்.ஏ.,எம்.ஃ.பில்,பி.லிட்.,**

முனைவர் பட்டஆய்வாளர்

தமிழ்த்துறை

எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

சென்னை– 600 008

## ஆய்வாளர் உறுதிமொழி

**சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதிவடிவமைப்பும் (6ஆம் நூற்றாண்டுமுதல் 12ஆம் நூற்றாண்டுவரை)**என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்படிப்பிற்காக ஆய்வு பேராசிரியர் முனைவர் வ.ச. அபிராமவல்லி அவர்கள் மேற்பார்வையில் எத்திராஜ் மகளிர் கல்லூரி, தமிழ்த்துறையில் 2012–2019 வரை ஆய்வு நிகழ்த்தப்பட்டது. இந்தஆய்வுஎன் சொந்தமுயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் இந்தஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**இடம்: சென்னை**

**தேதி:**

**(த.ஜெயந்தி)**

**ஆய்வாளர்**

# நன்றியுரை

**சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதிவடிவமைப்பும் (6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டுவரை)** என்னும் தலைப்பில் ஆய்வுசெய்வதற்கு இசைவுஅளித்தசென்னைப் பல்கலைக்கழகத்திற்கு எனது முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எத்திராஜ் மகளிர் கல்லூரியில் முனைவர் பட்ட ஆய்வாளர் (பிஎச்.டி.) படிப்பினை மேற்கொள்ளஎனக்குவாய்ப்பளித்த மேனாள் **முதல்வர்கள் முனைவர் ஜோதிகுமரவேல்** அவர்களுக்கும், **முனைவர் அ.நிர்மலா**அவர்களுக்கும்,**முனைவர் ரேவதி** அவர்களுக்கும் இந்நாள் முதல்வர் **முனைவர் சு.புவனேசுவரி** அவர்களுக்கும், மற்றும் கல்லூரி **நிர்வாகக் குழுவினர்களுக்கும்** என் மனமார்ந்தநன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எத்திராஜ் மகளிர் கல்லூரி தமிழ்த்துறையில் எனது ஆய்வினை நிகழ்த்த வாய்ப்பளித்த மேனாள் தமிழ்த்துறைத்தலைவர்கள் **முனைவர் எம்.நித்யகல்யாணி** அவர்களுக்கும், **முனைவர் ந.அங்கயற்கண்ணி** அவர்களுக்கும், இந்நாள் தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் சு.புவனேசுவரி** அவர்களுக்கும் என் உளம் கனிந்தநன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்குவழி காட்டியாகவும் இவ்வாய்வுத் தலைப்பைத் தேர்ந்தெடுப்பதற்குத் தூண்டுகோலாகவும், உறுதுணையாகவும் இருந்து ஆய்வுக்கு உகந்த ஆலோசனைகளை வழங்கி, சிறந்தமுறையில் வழி நடத்திச் சென்ற என் நெறியாளர் **முனைவர் வ.ச.அபிராமவல்லி** அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு செம்மையாக நிகழ ஆய்வுசார்ந்த நூல்களையும், கருத்துகளையும் வழங்கிய தோடு ஆய்வேட்டினைச் செம்மைப்படுத்திய முனைவர் **ஜே.ஆர்.இலட்சுமி** அவர்களுக்கும் என்றும் என் நெஞ்சார்ந்தநன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இவ்வாய்விற்குஉதவிய **முனைவர் த.வசந்தாள்** அவர்களுக்கும் **முனைவர்வே.சீதாலட்சுமி** அவர்களுக்கும் முனைவர் **அரங்க.மல்லிகா** அவர்களுக்கும் மற்றும் **தமிழ்த்துறைப் பேராசிரியர் பெருமக்களுக்கும்**என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னைப் பல்கலைக் கழகம் அகராதித்துறையைச் சார்ந்த **முனைவர். வ.ஜெயதேவன்** அவர்கள் ஆய்வுத்தலைப்பினைத் தேர்ந்தெடுத்துக்கொடுத்தும் அகராதிவடிவமைக்கும் முறையையும் கற்றுக் கொடுத்த ஐயா அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்விற்குத் துணைபுரிந்த **முனைவர் அ.வனிதா, முனைவர் ப.வனிதா** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மேலும் ஆய்வுப் பணிக்குத் துணை நின்றஎனது பெற்றோர் **பா.தண்டபாணி, த.மோகனா,** அவர்களுக்கும் பாட்டி **கிருஷ்ணவேணி**, சிறியத்தந்தை **பெ. இளங்கோ, இ. மகேஸ்வரி, சி.சேகர்**, **சே.ஜனதா** அத்தை **ஏ.செல்லம்மாள் ஏழுமலை** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்கு துணைபுரிந்த எனது கணவர் **ஏ.சுரேஷ்** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். ஆய்வேட்டினைச் சமர்ப்பிக்கப் பெரிதும் ஒத்துழைத்த என் மகள் **ஜெ.சு.தாரணி** அவர்களுக்கும் நன்றி.

ஆய்வுக்குத் துணைபுரிந்த அக்கா **சு.பவானி சுப்பிரமணி**, **ச.முத்துலெட்சுமி சரவணன்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

களஆய்வுப் பணிக்கும், ஆய்வுப் பணி, தட்டச்சு பணிக்குபெரிதும் துணைநின்ற சகோதரர், **த.தினகரன்,** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வுக்கு உதவிபுரிந்த சகோதரர் **த.ஜெயக்குமார் ஜெ.மாலதி, ஜெ.ஜெஷ்வந்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சகோதரர் **இ. ஜெகசந்திரன், சே. அஸ்வின்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிந்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்காக உதவிபுரிந்தஎன் **தோழிகள் கூ.லதா, ரா.சுபா,**மற்றும் முனைவர்பட்ட ஆய்வுமாணவிகள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கியஎத்திராஜ் மகளிர் கல்லூரி நூலகம், கன்னிமாராநூலகம், தேவநேயப்பாவாணர் நூலகம், உலகத் தமிழாராய்ச்சிநிறுவனம், உ.வே.சா.நூலகம், ரோஜாமுத்தையா நூலகம் ஆகியஅனைத்து நூலகங்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டைச் சிறந்த முறையில் வடிவமைத்துத் தந்த டுடேகிரா∴பிக்ஸ் உரிமையாளர் **திரு. ரெ.பாபு** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வு நன்முறையில் நிகழ உதவிய அனைத்து உள்ளங்களுக்கும் மனமார்ந்தநன்றி.

**த. ஜெயந்தி**

## பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
| --- | --- | --- |
| | முன்னுரை | 1-13 |
| ஒன்று | சித்தர்களின் வாழ்வும் வரலாறும் | 14-104 |
| இரண்டு | மொழி நோக்கு | 105-153 |
| மூன்று | இலக்கிய நோக்கு | 154-218 |
| நான்கு | சமய நோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடுகள் | 219-267 |
| | நிறைவுரை | 268-269 |

துணைநூற்பட்டியல்

பின்னிணைப்புகள்

1. சித்தர் பாடல்கள்
2. பொருளகராதி
3. களஆய்வுகள்
   - பட்டினத்தார் கோயில்
   - பதினெண் சித்தர் கோயில்
   - சதுரகிரி
   - புகைப்படங்கள்

## சுருக்கக்குறியீட்டுவிளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்தியர் |
| அகத்தியர்.ஞா | - | அகத்தியர்ஞானம் |
| ஆறா.ப. | - | ஆறாம்பதிப்பு |
| இர.ப. | - | இரண்டாம்பதிப்பு |
| ஒன்.ப | - | ஒன்பதாம்பதிப்பு |
| கொ. | - | கொங்கணர் |
| சிவ. | - | சிவவாக்கியர் |
| ஞா.வெ. | - | ஞானவெட்டியான் |
| திருமூ. | - | திருமூலர் |
| திருவள். | - | திருவள்ளுவர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நந்தீ. | - | நந்தீசர் |
| நன். | - | நன்னூல் |
| நா.ப. | - | நான்காம்பதிப்பு |
| ப . | - | பக்கம் |
| ப.க் | - | பக்கங்கள் |

| | | |
|---|---|---|
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பட்டின. ஐந்.வரி.பா. | - | பட்டினத்தார்ஐந்துவரிகள் பாடல்கள் |
| பட்டின. நா.வரி.பா. | - | பட்டினத்தார்நான்குவரிகள் பாடல்கள் |
| பட்டின. இர.வரி.பா. | - | பட்டினத்தார்இரண்டுவரிகள் பாடல்கள் |
| பட்டின.உட.கூ.வ.பா. | - | பட்டினத்தார்உடல்கூறுவண்ணம் பாடல்கள் |
| பட்டின.திரு.ஏக.மா. | - | பட்டினத்தார்திருஏகம்பமாலை |
| பட்டின. கோ .திருஅக. | - | பட்டினத்தார்கோயில்திருஅகவல் |
| பட்டின.திரு.ஏக.மா. | - | பட்டினத்தார்திருஏகம்பமாலை |
| பட்டின.தாய்.உட.தீ.பாடி. | - | பட்டினத்தார்தாய்உடலுக்குதீ மூட்டியபாடியது |
| பட்டின.நெஞ்.புலம். | - | பட்டினத்தார்நெஞ்சுபுலம்பல் |
| பட்டின.உடல்.வண்ண. | - | பட்டினத்தார்உடல்வண்ணம் |
| பட்டின.முதல்.முறை. | - | பட்டினத்தார்முதல்வன்முறையீடு |
| பட்டின.பூரண.மா. | - | பட்டினத்தார்பூரணமாலை |

| | | |
|---|---|---|
| பட்டின.நெஞ்.மகிழ். | - | பட்டினத்தார்நெஞ்சொடுமகிழ்தல் |
| பத்திர. | - | பத்திரகிரியார் |
| பூர.மா | - | பூரணமாலை |
| பொரு. | - | பொருளதிகராம் |
| மறு.ப. | - | மறுபதிப்பு |
| மூ.ப. | - | மூன்றாம்பதிப்பு |
| வால்மீகி. | - | வால்மீகனார் |

# முன்னுரை

'சித்து' என்ற சொல்லுக்கு அறிவு என்பது பொருள். சித்தர் என்பது அறிவுடையோர் என்ற பொருள்படும். சித்து என்பதற்குச் சித்தி மற்றும் இரசவாதம் என்ற வேறு பொருளும் உண்டு.

**சித்துகற்கும் ஆசை சிதையேனே என்குதே**

முதல் முறையீடு - 7

என்னும் பாடல் பட்டினத்து சித்தர் முதல்வன் முறையீடு என்னும் பாடலில் அமைந்துள்ளது.

5ஆம் நூற்றாண்டு, 6ஆம் நூற்றாண்டில் தோன்றி விளங்கிய சித்தர்களின் பாடல்கள் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் தொகுக்கப்பட்டுள்ளன.

சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை) உள்ள சித்தர் பாடல்கள் ஆய்வின் தலைப்பாக அமைந்துள்ளது. திருமூலர், வால்மீகனார், பதஞ்சலி, கொங்கணர், திருவள்ளுவர், சிவவாக்கியார், பட்டினத்தார், போகர், பத்திரகிரியார், அகத்தியர், கருவூரார், நந்திதேவர் ஆகியவரின் பாடல்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. இவர்களின் பாடல்கள் அனைத்தையும் வகைதொகை செய்து அகராதி வடிவமைப்பில் செய்யப்பட்டுள்ளது. இவ்வாய்வு முன்னுரை நிறைவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை,

**ஆய்வுப்புகுப்பு**

**முன்னுரை**

1. சித்தர்களின் வாழ்வும் வரலாறும்

2. மொழிநோக்கு

3. இலக்கிய நோக்கு

4. சமய நோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடுகள்

நிறைவுரை ஆகியன ஆகும்.

**முன்னுரை**

முன்னுரையில் அகராதி பற்றிய விளக்கம், அகராதி குறித்த ஆய்வுகள், அகராதி மேற்கொண்ட விதம் ஆகியவை விளக்கப்பட்டுள்ளது.

**முதல் இயல்**

"சித்தர்களின் வாழ்வும் வரலாறும்" என்னும் முதல் இயலில் சித்தர்கள் பற்றிய அறிமுகம், நூற்றாண்டு அடிப்படையில் பிரிக்கப்பட்ட சித்தர்களின் பெயர் பட்டியல் மற்றும் பாடல் எண்ணிக்கைகள், திருமூலர், வால்மீகர், பதஞ்சலி, கொங்கணர், திருவள்ளுவர், சிவவாக்கியார், பட்டினத்தார், போகர், பத்திரகிரியார், அகத்தியர், கருவூரார், நந்திதேவர் இவர்களின் வாழ்வும் வரலாறும் விளக்கப்பட்டுள்ளன.

**இரண்டாம் இயல்**

"மொழிநோக்கு" என்னும் இரண்டாவது இயலில் மொழிநோக்கு அடிப்படையில் சித்தர்கள் திருமூலர், வால்மீகர், கொங்கணர்,

திருவள்ளுவர், சிவவாக்கியார், பட்டினத்தார், பத்திரகிரியார், அகத்தியர், கருவூரார், நந்தீசர் பாடல்களில் அமைந்துள்ள மொழிக்கு முதலில் வரும் சொற்கள், மொழிக்கு முதலில் வராத சொற்கள், சொல்லின் இலக்கணம், அதன் வகைப்பாடுகள், சொல்லாக்கங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**மூன்றாவது இயல்**

"இலக்கிய நோக்கில்" சித்தர்களின் பாடல்களில் அமைந்துள்ள சந்தநயம், தொடைநயம், வருணணை, அணிகள், சொல்லாட்சி ஆகியவை இலக்கிய நோக்கும் என்னும் மூன்றாம் இயலில் விளக்கப்பட்டுள்ளன.

**நான்காவது இயல்**

சித்தர்பாடல்களில் சமயம், கடவுள் கோட்பாடுகளும், சமயநோக்கில் உயிர், ஆன்மா, உருவவழிபாடு இவற்றைப்பற்றிய கருத்துக்களும், கடவுள் கோட்பாடுகளை மறுத்தும் அதன் அடிப்படையில் எழும் மூடநம்பிக்கை பற்றியும் சமயநோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடு என்னும் இயலில் ஆராயப்பட்டுள்ளன.

**ஆய்வின் எல்லை**

சித்தர்களின் எண்ணிக்கை பலராக இருப்பினும் அவர்களில்,

1. **திருமூலர்**
2. **வால்மீகனார்**
3. **பதஞ்சலி**
4. **கொங்கணர்**
5. **திருவள்ளுவர்**

6. சிவவாக்கியார்

7. பட்டினத்தார்

8. போகர்

9. பத்திரகிரியார்

10. அகத்தியர்

11. கருவூரார்

12. நந்திதேவர்

ஆகிய சித்தர்களின் பாடல்கள் ஆய்வின் எல்லையையும், பக்கவரையறையைக் கருத்தில் கொண்டு பிண்ணிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளன.

**ஆய்வு ஆதாரங்கள்**

ஆய்வு ஆதாரங்கள் இரண்டு வகையாகக் கொள்ளலாம். அவை, முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் ஆகும்.

**முதன்மை ஆதாரங்கள்**

பூம்புகார் பிரசுரம் வெளியிட்ட 'சித்தர் பாடல்கள்', வர்த்தமானன் பதிப்பகம் வெளியிட்ட 'சித்தர்பாடல்கள் மூலமும் உரையும்' முதன்மை ஆதாரங்களாக அமைந்துள்ளன.

**துணைமை ஆதாரங்கள்**

சாகித்திய அகாடமி வெளியிட்ட பாடல்கள், பிற பதிப்பகம் வெளியிட்ட சித்தர் பாடல்கள், அதன் தொடர்பான ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வுநூல்கள், ஆய்வேடுகள் ஆகியவை துணைமை ஆதாரங்கள் ஆகும்.

**ஆய்வின் நோக்கம்**

இவ்வாய்வு ‘சித்தர்பாடல்கள்’ (6ஆம் நூற்றாண்டு முதல் 12 ஆம் நூற்றாண்டு வரை) உள்ள சித்தர்களின் வாழ்வையும் வரலாற்றையும் அவர்களின் பாடல்களில் அமைந்துள்ள சொற்களில் உள்ள பெயர், வினை, மொழிநடை மற்றும் சமயக் கோட்பாடுகள் ஆகியவற்றை ஆய்வதேயாகும். சித்தர்பாடல்களில் அமைந்துள்ள சொற்களைப் பிரித்து அவை வரும் இடங்களை எண்களுடன் அகர வரிசைப்படுத்தித் தரும் அகராதி வடிவமைப்பும் உருவாக்குவதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வு ‘சித்தர்பாடல்களில்’ தொகுப்பு முறை, பகுப்புமுறை, விளக்கமுறை, வரலாற்றுமுறை, திறனாய்வுமுறை ஆகிய ஐந்து வகையான அணுகுமுறையில் நிகழ்த்தப்பட்டுள்ளது. முதல் இயலான சித்தர்களின் வாழ்வும் வரலாறும், நான்காவது இயலான சமயக்கோட்பாடும் வரலாற்று முறையிலும் அமைந்துள்ளன. மொழிநோக்கு, இலக்கியநோக்கு ஆகிய இயல்களில் திறனாய்வுமுறை, பகுப்புமுறை, விளக்கமுறைஎன ஆய்வு அணுகுமுறையில் ஆய்வு அமைந்துள்ளது.

**ஆய்வின் முன்னோடிகள்**

சித்தர் பாடல்கள் பல்வேறு ஆய்வாளர்களால் ஆராயப்பட்டுள்ளன. அகராதி வடிவமைப்பில் சில ஆய்வுகளே நிகழ்த்தப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு, :

வ. ஜெயதேவன். - 'தமிழ்அகராதியில் வளர்ச்சி வரலாறு' 1979ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளித்துள்ளார்.

அ. செந்தில் நாராயணன் - 'அகராதி நோக்கில் தொல்காப்பிய உரைகள்' 2010ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளித்துள்ளார்.

அ. வனிதா - 'கயாதரநிகண்டு - ஆய்வும் அகராதி வடிவமைப்பும்' என்னும் ஆய்வேட்டை 2005 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளித்துள்ளார்.

**அகராதி**

அகராதி பணி நீண்ட வளர்ச்சியையும் வரலாற்றையும் கொண்டது. இப்பணி கடின உழைப்பையும் நீண்ட கால தேவையையும் உள்ளடக்கியது. இது ஒரு கூட்டுப்பணியாக உள்ளது எனினும் தொடக்ககால அகராதிகள் தனிமனிதர்களால் உருவாக்கப்பட்டவையாகும். பல அகராதிகள் ஆசிரியரின் மறைவுக்குப்பின்னரே வெளியிடப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. அகராதிகள் மொழி, அளவு, காலம் என்பனவற்றின் அடிப்படையில் வகைப்படுத்தப்படுகின்றன. சொல்லுக்குரிய பொருளை விளக்குவதற்கு

அகராதிகளில் காலந்தோறும் பல்வேறு உத்திகளும் நெறிமுறைகளும் கையாளப்பட்டு வருகின்றன.

**சொல்லடைவு**

ஓர் இலக்கியத்தில் ஒரு சொல் அந்நூல் முழுவதும் எந்த எந்த இடங்களில் பயின்று வருகின்றது. மொத்தம் எத்தனை வகையான சொற்கள் எத்தனை முறைகளில் எத்தகுப் பொருள்களில் ஆட்சி பெற்றுள்ளன என்பதை வடித்தெடுத்து, பகுத்தும் கூறப்படுவது சொல்லடைவு ஆகும்.

சொல்லடைவு மேற்கொள்ளும் போது மூல நூலை நன்குபுரிந்து கொண்டு, அந்நூலில் பயின்று வந்துள்ள சொற்களை அறிந்து கொண்டு, அச்சொற்களின் பொருளைச் சரியாக விளங்கிக் கொள்ள வேண்டும். பொருளுடைய சொற்களாகப் பகுத்தபின், சொற்களுடன் கூடிய முன்னொட்டு, பின்னொட்டுகளையும் ஆராய்ந்து பகுத்தமைக்க வேண்டும். முன்னொட்டு பின்னொட்டுகளை இணைத்தும், பிரித்தும் அமைக்கப்பட்ட சொற்கள் அகர வரிசைப்படுத்தப்பட்டு, சொற்களுக்குரிய இலக்கணத்தை அறிந்து சொற்களின் பொருளை அறிதல் என்பன போன்ற பணிகள் அகராதி வடிவமைப்பு பற்றிய ஆய்வுக்கு இன்றியமையாததாகும். ஆய்வு மேற்கொண்ட விதத்தைப் திருமூலர் எழுதிய சித்தர் பாடல் ஒன்றின் மூலம் அறியலாம்.

**திருமூலர்**

திருமூலர் சிவபெருமானிடமும் நந்தீசரிடமும் உபதேசம் பெற்று, இவர் அனைத்துச் சித்திகளையும் பெற்றவர். இவர் நந்தியின் முதன்மையான மாணவர். இயற்பெயர் ‘சுந்தரநாதர்’ என்றும் ‘சுந்தரர்’

என்றும் அழைக்கப்பட்டார். இவர் திருக்கயிலாய பரம்பரையைச் சேர்ந்தவர். வடதிசையில் இருந்த இவர் அகத்தியரின் மீதுள்ள அன்பின் காரணமாக தென் திசையில் அமைந்துள்ள பொதிகை மலையை அடைந்தார்.

**சொல்லடைவு மேற்கொண்ட விதம்**

திருமூலர் எழுதிய சித்தர் பாடல்கள் தனிதனிச் சொற்களாக முதலில் பிரிக்கப்பட்டு பாடல் எண்ணிக்கையுடன் வகைதொகை செய்யப்பட்டன.

**சான்று**

***அடியாகி அண்டரண்டத் தப்பால் ஆகி***
***அகாரமெனும் எழுத்ததுவே பாதமாகி***
***முடியாகி நடுவாகி மூலந் தன்னில்***
***முப்பொருளுந் தானாகி முதலுமாகிப்***
***படியாய்முப் பாழாற்று படிக்கும் அப்பாற்***
***படிகடந்த பரஞ்சோதி பதியுமாகி***
***அடியாகும் மூலம்மதே அகாரமாகி***
***அவனவளாய் நின்றநிலை அணுவ தாமே***

**(திருமூலர் :1)**

**அகராதி மேற்கொண்ட விதம்**

சித்தர் பாடல்கள் சொல்லடைவு செய்யப்பட்டு அறியப்பட்ட சொற்களைக் கொண்டு அகராதி செய்யப்பட்டு அதற்கான இலக்கணத்தை அறிந்து பொருள் கொள்வது மற்றும் பெயர்ச்சொல், வினைச்சொல் அறிவதும் எவ்வாறு ஆய்வு மேற்கெள்ளப்பட்டன என்பதை அறியலாம்.

அகாரம் (2) திருமூலர்-1:1இ1:4

அடி (2) திருமூலர்-1:1இ1:4

அண்ட (2) திருமூலர்-1:1இ1:1

அணுவ (1) திருமூலர்-1:4

அதுவே (1) திருமூலர்-1:1

அதே (1) திருமூலர்-1:4

அப்பால் (2) திருமூலர்-1:1இ1:3

அவளாய் (1) திருமூலர்-1:4

அவன் (1) திருமூலர்-1:4

அற்று (1) திருமூலர்-1:3

ஆகி (8) திருமூலர்-1:1இ1:1இ1:1இ1:2இ1:2இ1:2இ1:3இ1:4

ஆகும் (1) திருமூலர்-1:4

ஆய் (1) திருமூலர்-1:3

எழுத்து (1) திருமூலர்-1:1

எனும் (1) திருமூலர்-1:1

கடந்த (1) திருமூலர்-1:3

தன்னில் (1) திருமூலர்-1:2

தாமே (1) திருமூலர்-1:4

தானாகி (1) திருமூலர்-1:2

நடுவு (1) திருமூலர்-1:2

நிலை (1) திருமூலர்-1:4

நின்ற (1) திருமூலர்-1:4

படி (2) திருமூலர்-1:3இ1:3

படிக்கு (1) திருமூலர்-1:3

பதியும் (1) திருமூலர்-1:3

பரஞ்சோதி (1) திருமூலர்-1:3

பாதம் (1) திருமூலர்-1:1

முடி (1) திருமூலர்-1:2

முதலும் (1) திருமூலர்-1:2

முப்பாழ (1) திருமூலர்-1:3

முப்பொருளும் (1) திருமூலர்-1:2

மூலம் (2) திருமூலர்-1:2இ1:4

இவ்வாறு பிரிக்கப்பட்ட சொற்கள் அகரவரிசைப்படுத்தப்பட்டன. அனைத்துப் பாடல்களின் சொற்களும் இவ்வாறு பிரிக்கப்பட்டு, பாடல்களின் எண்ணிக்கையுடன் அகரவரிசைப் படுத்தப் பட்டுள்ளன. பாடல்களைப் பிரித்து அகரவரிசைப்படுத்திய சொற்களில் பல சொற்கள் கூட்டுச் சொற்களாக இருந்தன. அச்சொற்களின் பொருளை அறிந்து தனிச் சொற்களாகப் பிரிக்க வேண்டியவற்றைப் பிரித்தும், பிரிக்க முடியாத சொற்களை இணைத்தும் வழங்கப்பட்டுள்ளன. சான்றாக, சில சொற்களைக் காணலாம்.

அண்டரண்டத் (1.1)

அண்ட அண்ட (1.1)

இவ்வாறு பிரிக்கப்பட்ட சொற்கள் அகரவரிசைப்படுத்தப்பட்டன. அனைத்துப் பாடல்களின் சொற்களும் இவ்வாறு பிரிக்கப்பட்டு, பாடல்களின் எண்ணிக்கையுடன் அகரவரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

**இணைப்பு**

படியாய்முப் பாழாற்று (1.3)

முப்பாழாற்று (1.3)

இவ்வாறு சொற்களைப் பிரித்தும், இணைத்தும் அமைத்ததால் சொற்களின் எண்ணிக்கைக் கூடியது.

திருமூலர் சித்தர் பாடல்களைப் பிரித்து அகரவரிசைப் படுத்திய அனைத்துச் சொற்களும் இலக்கண விதிமுறைப்படி அகராதி வடிவமைப்பு செய்யப்பட்டன.

இலக்கண விதிமுறைப்படி பிரிக்கப்பட்ட சொற்களுக்குப் பொருள் கொள்ளும்போது பெயர்ச் சொற்களோடு சேர்ந்து வந்த சுட்டுப்பெயர், இடைச்சொல், ஆகியவைத் தனித்தனியாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

**சான்று**

**சுட்டுப்பெயர்**

அதுவே திருமூலர்-1:1

அதேதிருமூலர்-1:4

**பெயரோடு இடைச்சொல்**

முதலும் திருமூலர்-1:2

முப்பொருளும் திருமூலர்-1:2

**பெயர்ச்சொற்கள்**

பொதுச் சொல்லடைவு செய்த பிறகு ஆய்வினைச் செம்மைப்படுத்தப் பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள் எனப் பிரித்துச் சொல்லடைவு செய்யப்பட்டன.

**பெயர்ச்சொற்கள்**

அகாரம் திருமூலர்-1:1இ1:4

அடி திருமூலர்-1:1இ1:4

அண்ட திருமூலர்-1:1இ1:1

அணும் திருமூலர்-1:4

பரஞ்சோதி திருமூலர்-1:3

பாதம் திருமூலர்-1:1

**வினைச்சொற்கள்**

**வினைச் சொல்லடைவில் வினைச் சொற்களின் வடிவங்கள் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன.**

அற்று திருமூலர்-1:3

கடந்த திருமூலர்-1:3

நின்ற திருமூலர்-1:4

படி திருமூலர்-1:3இ1:3

பதியும் திருமூலர்-1:3

ஆகிய சொல்லடைவுகள் தயாரித்த பின்பு அதன் அடிப்படையில் பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள், மொழிக்கு முதலில் வரும் சொற்கள், சந்தநயம், உருவகம், உவமை, அணி, வருணணை, சமய நோக்கில் உயிர், ஆன்மா, உருவவழிபாடு, மூடநம்பிக்கை என்னும் அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

சித்தர் பாடல்களில் இருந்து அகராதி வடிவமைப்பு முறையில் பாடல்கள் பிரிக்கப்பட்டு ஆய்வு அமைந்துள்ளது. மேலும் சித்தர்களின் வாழ்வும் வரலாறும், மற்றும் இவர்களின் பாடல்களின் மூலம்

மொழிநோக்கு, இலக்கியநோக்கு, சமயநோக்கு அடிப்படையில் ஆய்வுமேற்கொள்ளப்பட்டு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மேலே கூறப்பட்ட இயல்களில் இருந்து பெறப்பட்ட முடிவுகள் நிறைவுரையில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. சித்தர் பாடல்களின் அகராதி வடிவமைப்பு, பொருளகராதி, மற்றும் கள ஆய்வு, வாயு, நாடி, புகைப்படம் ஆகியவை பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளன.

# சித்தர்களின் வாழ்வும் வரலாறும்

**சித்தர்கள்**

**பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந் திட்ட பிச்சைஎல்லாம்**
**நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கை யரைத்**
**தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்மை சொல்லிச்**
**சேய்போல் இருப்பார்கண்டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே [1]**

**பட்டினத்தார் திருஏகம்பமாலை - 119**

என்னும் பாடலின் மூலம் சித்தர்களின் தோற்றத்தையும், அவர்களின் உணவு அருந்தும் நிலையையும், பெண்களைத் தாய் போல் கருதும் நிலையும் இப்பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

“சித்தன் போக்கு சிவன் போக்கு” என்னும் பழமொழியின் படி சித்திபெற்ற சித்தர்களைச் சிவனோடு இணைந்தவர்கள் என்று கூறலாம்.

சித்தர்களை ஞானி, யோகி, ரிஷி, சாமி, முனி, குரு முதலிய பெயர்களைக் கொண்டு அழைக்கின்றனர்.

சித்தர்கள் உலகமெங்கும் உள்ளனர்.எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் இருக்கின்றனர்.அவர்கள் உலக மக்கள் அனைவருக்கும் பொதுவானவர்கள்.சாதி சமய வேறுபாடுகள் இன்றியும் நாடு மொழி இனம் எனக் குறுகிய எல்லைக்குள் அடங்காதவர்கள்.அவர்கள் எங்கும் எப்போதும் தோன்றி மக்கள் இன்புற்று வாழ நல்வழி காட்டுகின்றனர்.

"யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பதே இவர்கள் குறிக்கோள்.ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பது இவர்களின் சமயக் கோட்பாடு ஆகும்.

**சித்தர்கள்**

சித்தர் பாடல்களின் மூலம் சித்தர்களை அடையாளம் காட்டியுள்ளனர்.

**"ஊதியேதோ ரூதறிந்தா லவனே சித்தன்"[2]**

**அகத்தியர் - 27**

**"ஆமிவளை அறிந்தவர்கள் சித்தர் சித்தர்"[3]**

**கரூவூரார் - 2,3**

**ஆச்சென்றா லதனாலே வருவ தேது**
**ஆத்தாளைப் பூசித்தோன் அவனே சித்தன் [4]**

**கரூவூரார் - 18.3**

என்று சித்தர்களின் பாடல்களின் மூலம் அறியமுடிகின்றன.

**தொல்காப்பியத்தில்**

***மறுபிறவி செய்தி மூவகைக் காலமும்***
***நெறியின் ஆற்றிய அறிவன்[5]***

**தொல்- பொரு.**

என்னும் நூற்பாவில் கூறப்பட்டுள்ள மூவகைக் காலமும் காமம், வெகுளி, மயக்கம் இவை அற்றவர்கள் என்றும் இறப்பும், நிகழ்வும், எதிர்வும் என மூவகைக் காலத்தையும் அறிந்தவர்கள் "சித்தர்கள்" ஆவார், என்று கூறப்பட்டுள்ளது.

**முதல் சித்தர்**

சித்தர்களில் முதல் சித்தர் ‘சிவபெருமான்’ ஆவார். இவரே முதல் சித்தர் என்ற செய்தினை அகத்தியர் பாடல்களின் மூலம் அறியலாம். அவை,

*பொதிகையிலே எனைப் பார்க்கச் சிவனும் வந்தார்*
*பூரணனே தெய்வமெதன்று போற்றிச் செய்து*
*இதமாமகம் கற்ப முறை யாவும் கேட்டேன்*[6]

**அகத்தியர் கற்ப முப்பூ குறு நூல் - 100**

*சொல்லவே தேவிக்குச் சதாசிவன்தான்*
*சொல்லிடவே தேவியும் நந்திக்குச் சொல்*[7]

**தன்வந்தரி வைத்திய சிகாமணி - 150**

சித்தர்கள் பலரை அறிந்துள்ளோம். அவர்களின் மூல குருவாய் சிவபெருமான் இருந்து ஞானத்தைப் போதித்துள்ளார் என்பது அவர்களின் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது.

முதல் சித்தரும் சிவ வழிபாட்டில் மூலக் கடவுளாக இருக்கும் சிவபெருமானும் ஒருவரே என்று அறியமுடிகின்றது.சித்தர்களின் ஜீவசமாதி பலவற்றுக்கும் சிவலிங்கப் பிரதிஸ்டை செய்வதன் காரணம் முதல் சித்தருக்கும் குருவுக்கும் முதல் வணக்கம் செலுத்தும் முறையாலும் அறியமுடிகின்றது.

**பதினெண் சித்தர்கள்**

*சித்தர்கள் தான் பதினெண்பே ராத்தாள் சொன்ன*
*செயலெல்லாம் கண்டுணர்ந்து தெளிந்திட்டார்கள்*[8]

**ஞான வெட்டியான் - 229**

என்னும் பாடலின் மூலம் சித்தர்கள் பதினெட்டுப் பேர் என அறியமுடிகின்றது. சித்தர்கள் பற்றியும் அவர்களின் எண்ணிக்கை பற்றியும் யுகம் கடந்து வாழ்ந்த சித்தர்கள் எனப் பின்வரும் பாடல் மூலம் அறியமுடிகின்றது.

***பாரப்பா கிரேதாயுகம் சித்தரப்பா***
***பலமான பெருக்கினுடை கணக்கைக் கேளு***
***நேரப்பா கோடியடா இரண்டு இலட்சம்***
***நிலையான திரேதாயுகம் இலட்சம் கோடி***
***தூரப்பா துவாபரத்தில் கோடி கேளு***
***தூக்கானது ஐம்பதென்ற ஆயிரந்தான்***
***காரப்பா கலியுகத்தில் கோடி கேளு***

***கணக்கு இருபத்தையாயிரந்தான் பாரே*** [9]

தேரையரின் பாடல் மூலம் கிரேதாயுகத்தில் இரண்டு இலட்சம், திரேதாயுகத்தில் ஓர் இலட்சம், துவாபரயுகத்தில் ஐம்பது ஆயிரம், கலியுகத்தில் இருபத்து ஐயாயிரம் ஆகமொத்தம் 3,75,000 சித்தர்கள் தோன்றினர்என அறியமுடிகின்றது.

நான்கு யுகங்களில் தோன்றிய மூன்றே முக்கால் இலட்சம் சித்தர்களுள் ஆய்வில் அறியப்பட்ட சித்தர்கள் பற்றிய பெயர்ப்பட்டியல்:

1. திருமூலர்
2. போகர்
3. கருவூர்சித்தர்

4. புலிப்பாணி

5. கொங்கணர்

6. மச்சமுனி

7. சுந்தரானந்தர்

8. சட்டைமுனிசித்தர்

9. அகத்தியர்

10. தேரையர்

11. கோரக்கர்

12. பாம்பாட்டிசித்தர்

13. சிவவாக்கியர்

14. உரோமரிஷி

15. காகபுசுண்டர்

16. இடைக்காட்டுச்சித்தர்

17. குதம்பைச்சித்தர்

18. பதஞ்சலிசித்தர்

19. புலத்தியர்

20. திருமூலம்நோக்கச்சித்தர்

21. அழகண்ணச்சித்தர்

22. நாரதர்

23. இராமதேவசித்தர்

24. மார்க்கண்டேயர்

25. புண்ணாக்கீசர்

26. காசிபர்

27. வரதர்

28. கன்னிச்சித்தர்

29. தன்வந்தரி

30. நந்திசித்தர்

31. கடுவெளிசித்தர்

32. விசுவாமித்திரர்

33. கௌதமர்

34. கமலமுனி

35. சந்திரானந்தர்

36. சுந்தரர்

37. காளங்கிநாதர்

38. வான்மீகி

39. அகப்பேய்சித்தர்

40. பட்டினத்தார்

41. வள்ளலார்

42. சென்னிமலைசித்தர்

43. சதாசிவப்பிரம்மேந்திரர்

44. ராமகிருஷ்ணர் சாரதாதேவியார்

45. ராகவேந்திரர்

46. ரமண மகரிஷி

47. குமரகுருபரர்

48. நடன கோபால நாயகி சுவாமிகள்

49. ஞானானந்த சுவாமிகள்

50. ஷிரடி சாயிபாபா

51. சேக்கிழார் பெருமான்

52. ராமானுஜர்

53. பரமஹம்ச யோகானந்தர்

54. யுக்தேஸ்வரர்

55. ஜட்ஜ் சுவாமிகள்

56. ஆதி பராசக்தி

57. கண்ணப்ப நாயனார்

58. சிவப்பிரகாச அடிகள்

59. குரு பாபா ராம்தேவ்

60. ராணி சென்னம்மாள்

61. பூஜ்ய ஸ்ரீ சித்த நரஹரி குருஜி

62.குழந்தையானந்த சுவாமிகள்

63. முத்து வடுகநாதர்

64. இராமதேவர்

65. அருணகிரிநாதர்

66. பாடசேரி தவத்திரு

67. மௌன சாமி சித்தர்

68. சிறுதொண்டை நாயனார்

69. ஒடுக்கத்தூர் சுவாமிகள்

70. வல்லநாட்டு மகாசித்தர்

71. சுப்பிரமணிய சித்தர்

72. சிவஞான பாலசித்தர்

73. கம்பர்

74. நாகலிங்கம் சுவாமிகள்

75. அழகர்சுவாமிகள்

76. சிவஞான பாலைய சுவாமிகள்

77. சித்தானந்த சுவாமிகள்

78. சக்திவேல் பரமானந்த குரு

79. ஸ்ரீராம் பரதேசி சுவாமிகள்

80. அக்கா சுவாமிகள்

81. மகான் படே சுவாமிகள்

82. கம்பளி ஞானதேசிக சுவாமிகள்

83. பகவந்த சுவாமிகள்

84. கதிர்வேல் சுவாமிகள்

85. சாந்த நந்த சுவாமிகள்

86. தயானந்த சுவாமிகள்

87. தட்சிணாமூர்த்தி சுவாமிகள்

88. ஞானகுரு குள்ளச்சாமிகள்

89. வேதாந்த சுவாமிகள்

90. லட்சுமண சுவாமிகள்

91. மண்ணுருட்டி சுவாமிகள்

92. பாரதி சுவாமிகள்

93. விசிறி சுவாமிகள்

94. கோட்டூர் சுவாமிகள்

95. தகப்பன் மகன்

96. நாராயணசாமி அய்யா

97. போதேந்திர சுவாமிகள்

98. அவதூர ரோக நிவர்தீஸ்வரர்

99. வன்மீக நாதர்

100. தம்பிக்கலையான் சித்தர்

101. மெய்வரத் தம்பிரான் சுவாமிகள்

102. குகை நாச்சியார் மகான்

103. வாலைகுருசாமி

104. பாம்பன் சுவாமிகள்

105. குமாரசாமி சித்தர்

106. பெரியாழ்வார் சுவாமிகள்

107. மாயம்மா

108. பரமாச்சாரியார்

இவர்கள் அனைவரும் சித்தர்களின் வரிசையில் இருக்கின்றனர். ஆனால் அபிதான சிந்தாமணியிலும், நம் நாட்டுச் சித்தர்கள் என்னும் நூலிலும் சித்தர்களின் பெயர்ப்பட்டியல் மாறுபடுகின்றன. இதனடிப்படையில் 6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை சித்தர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்களுள் சித்தர்களின் பாடல்களும், நூற்றாண்டும் அறியபடத் தெளிவான விவரம் இல்லை.கிடைத்த அச்சித்தர்களின் பாடல்கள் மூலமே அறியப்பட்ட நூற்றாண்டு அடிப்படையில் சித்தர்களின் பெயர்கள் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. அவை,

| எண் | சித்தர்கள் | நூற்றாண்டு | பாடல்கள் |
|---|---|---|---|
| 1. | திருமூலர் | 6 | 11 |
| 2. | வால்மீகர் | 6 | 16 |
| 3. | பதஞ்சலி | 7 | 32 |
| 4. | கொங்கணர் | 7 | 111 |
| 5. | திருவள்ளுவர் | 7 | 19 |
| 6. | சிவவாக்கியர் | 9-10 | 534 |
| 7. | பட்டினத்தார் | 10 | 662 |
| 8. | போகர் | 10 | |
| 9. | பத்திரகிரியார் | 10 | 234 |
| 10. | அகத்தியர் | 11 | 48 |
| 11. | கருவூரார் | 11 | 30 |
| 12. | நந்தீசர் | 11 | 12 |

என்று சித்தர்கள் பட்டியல் நூற்றாண்டு அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளன. பாடல்கள் அறியப்பட்டு அவர்களின் நூற்றாண்டு அறியப்படாத சித்தர்கள்:

1. சட்டை நாதர் - 207
2. சட்டை முனி - 95
3. ஏனாதிச் சித்தர் - 3
4. அவ்வையார் - 310
5. சுப்பிரமணியர் - 32

இவர்களின் நூற்றாண்டு அறியமுடிய வில்லை. இன்னும் பல சித்தர்களின் பாடல்களும் நூற்றாண்டு அறியமுடியாத சித்தர்கள்:

1. **கூனர்**
2. **கண்ணர்**
3. **கோரக்கர்**
4. **கமலமுனி**
5. **சண்டிகேசர்**
6. **மச்சமுனி**
7. **பிண்ணாக்கீசர்**
8. **காலாங்கி**
9. **கும்பமுனி**
10. **தன்வந்திரி**
11. **கைலாசநாதர்**
12. **வாசமுனி**
13. **கூர்மமுனி**
14. **புலத்தியர்**
15. **தேரையர்**
16. **கபிலர்**

மேலே அறியப்பட்ட சித்தர்கள் நூற்றாண்டு அறியப்பட்டும், சில சித்தர்களின் நூற்றாண்டு அறியப்படாமலும் பாடல்கள் அறியப்படாமலும் உள்ளன. மேலும் சித்தர்கள் பற்றிய தகவல்கள் திரட்டப்பட்டு நூற்றாண்டு அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப் படுகின்றது.

மேற்கண்ட சித்தர்கள் அபிதானசிந்தாமணி, அகராதி, லெக்சிகன், சாகித்திய அகாடமி, சித்தர் பாடல்கள் போன்ற நூல்களை அடிப்படையாகக் கொண்டு பட்டியல் செய்யப்பட்டு அதனடிப்படையில் இவர்கள் வரலாறு அறியப்படுகின்றன.

**திருமூலர்**

திருமூலர் சிவபெருமானிடமும் நந்தீசரிடமும் உபதேசம் பெற்று, இவர் அனைத்துச் சித்திகளையும் பெற்றவர். நந்தியின் முதன்மையான மாணவர். இவரின் இயற்பெயர் ‘சுந்தரநாதர்’ என்றும் ‘சுந்தரர்’ என்றும் அழைக்கப்பட்டார் இவர் திருக்கயிலாய பரம்பரையைச் சேர்ந்தவர், வடதிசையில் இருந்த இவர் அகத்தியரின் மீதுள்ள அன்பின் காரணமாக தென்திசையில் அமைந்துள்ள பொதிகை மலையை அடைந்தார்.

**தரிசனம் செய்த கோயில்கள்**

திருமூலர் கைலாயத்தில் இருந்து அகத்தியரைக் காணச் சென்ற வழிகளில் இவர் பல கோயில்களுக்குச் சென்று தரிசனம் செய்தார்.அவை திருக்கேதாரம், பசுபதி நேபாளம், அவிமுத்தம் (காசி) விந்தமலை, திருப்பருப்பதம், திருக்காளத்தி, திருவாலங்காடு ஆகிய திருத்தலங்களைக் கண்டு வணங்கி பின் காஞ்சி நகரை அடைந்தார். அங்கு திருவேரகப்

பெருமானைப் போற்றி வணங்கி அங்குள்ள சிவயோகியர்களைக் கண்டு உரையாடினார்.

இவரின் பயணம் நின்று விடாமல் தொடர்ந்து பின் திருவதிகைக்கு வந்து புரமெரித்த பெருமானைக் கண்டு வழிபட்டு வணங்கினார்அதன்பின் பெரும்பற்றப்புலியூரைச் சென்றடைந்தார். அங்கு சிவயோகியாரின் தில்லைத் திருநடம் கண்டு மகிழ்ந்தார். பின்பு காவிரியில் நீராடி தென்கரையிலுள்ள திருவாவடுதுறையினை வந்தடைந்தார் என்பதை,

*கயிலாயத் தொரு சித்தர் பொதியிற் சேர்வார்*
*காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்*
*பயிலா நோயுடன் வீயத் துயர நீடும்*
*பசுக்களைக் கண்டு அவனுடலில் பாய்ந்து போத*
*அயலாகப் பண்டையுடல் அருளான் மேவி*
*ஆவடுதண் டுறையாண்டுக் கொரு பாவாகக்*

*குயிலாரும் அரசடியிலிருந்து கூறிக்*
*கோதிலா வடகயிலை குறுகினாரே* [10]

**- திருத்தொண்டர்புராணம்**

என்னும் பாடலின் மூலம் அவர் செய்த மூன்று அற்புதங்களையும் கூடுவிட்டுக் கூடு பாய்ந்த நிகழ்வையும் இப்பாடல் குறிக்கிறது.

**திருமூலர் செய்த முதல் அற்புதம் (மூலனாக மாறியது)**

சுந்தரர் திருவாவடுதுறையில் இறைவனை வழிபட்ட இவருக்குக் காவிரிக் கரையில் பசுக்கள் அழும் சத்தம் கேட்டுச் சென்றார்.அங்கு பசுக்களை மேய்த்துக் கொண்டு இருந்த மூலன் என்ற இடையன் விதி முடிந்து நிலத்தில் வீழ்ந்து கிடந்தான்.

பசுக்கூட்டங்கள் அவனைச் சுற்றி வந்து கண்ணீர் விட்டதைக் கண்ட திருமூலர் பசுக்களின் துயர்நீங்க வேண்டும் என்றால் மூலன் உயிரோடு எழுந்தால் தான் நீங்கும் என்பதை அறிந்தார். பின்பு தமது உடலை மறைவான இடத்தில் கிடத்தி விட்டு கூடுவிட்டுக் கூடு பாய்தல் வழியிலே தம் உயிரை இடையனது உடம்பினுள் புகுமாறு செலுத்தித் திருமூலராய் எழுந்தார்.

மூலன் எழுந்தவுடன் பசுக்கள் மகிழ்ச்சி அடைந்தன. பசுக்கள் வயிறார உண்டு காவிரியில் நீர் பருகி அதன் வீட்டிற்குச் சென்றன. இதைத் தொலைவில் இருந்து பார்த்த மூலன் பசுக்கள் சென்றதைப் பார்த்த பின் அவர் செல்லத் தொடங்கினார்.அதற்குள் மூலனின் மனைவி இவரை மூலன் என்று எண்ணி அவரை வீட்டுக்கு அழைத்தாள். அதற்கு நான் உன்னுடைய கணவன் அல்லன் மூலன் இறந்து விட்டார். ஆனால் அவள் நம்பவில்லை. என் கண் எதிரே கணவன் இருக்கும் போது அவர் இறந்து விட்டார் என்பதை நம்ப மறுத்து, உடனே அருகில் இருந்த சான்றோர்களை அழைத்து நடந்ததைக் கூறினாள். அதற்குச் சான்றோர்கள் வீட்டுக்குள் போகும்படி கூறினர். இவர்களுக்கு உண்மையை அறியசெய்ய மூலன் உடம்பில் இருந்து

உயிர் பிரிந்து செயலற்றதாக்கினார்.அப்போதுதான் உண்மையை அறிந்தனர்.

சிவயோகியார் தான் உடலை வைத்த இடத்தில் சென்று பார்த்தார்அங்கு உடல் இல்லை அதனால் மூலனின் உடலிலேயே இருக்கும் நிலை ஏற்பட்டது.

**திருமூலர் செய்த இரண்டாவது அற்புதம் (பாண்டிய மன்னனாக மாறியது)**

திருமூலர் ஆகாய மார்க்கமாகச் சென்று கொண்டு இருந்த போது கீழே சில காட்சிகளைக் கண்டார். பாண்டிய நாட்டின் அரண்மனையில் அமைந்துள்ள நந்தவனத்தில் ஒரு கொடிய பாம்பு ஊர்ந்து சென்று கொண்டிருந்த வழியில் ரோஜா செடியின் முட்கள் அந்த பாம்பைக் கீறியது. இதனால் தன் கோபத்தை அந்த ரோஜாவின் மேல் தன் விஷத்தைக் கொட்டியது.இதனால் அந்த மலரில் விஷம் இறங்கி நீல நிறமாக மாறியது.

பாண்டிய நாட்டை ஆட்சி செய்துவந்த மன்னன் வீரசேனன் மாலை நேரத்தில் மன அமைதிக்காக அரண்மனையில் உள்ள நந்தவனத்திற்கு வந்தான். நிலவின் அழகையும் தென்றலின் இனிமையையும் கண்டு நந்தவனத்தில் உலாவிக் கொண்டு இருந்தான். அப்போது ரோஜா செடியில் ஒரு மலர் மட்டும் நீல நிறமாக மாறியுள்ளதைக் கண்டு, இது அபூர்வமான மலர் என்று பறித்து அதன் வாசனையை முகர்ந்தான்.முகர்ந்தவுடன் அவன் மயங்கி விழுந்தான். அரசன் விழுந்து கிடப்பதைப் பார்த்த அவரது மனைவி குணவதியும் காவலர்களும் கலக்கம் உற்றனர். மருத்துவ சிகிச்சை ஏதும் பலன் அளிக்கவில்லை.அரசர்மரணம் அடைந்தார்.

திருமூலர் இதை எல்லாம் ஆகாயத்தில் இருந்து பார்த்தார்.இறந்த மன்னனைக் கண்டு அவன் மனைவி, நாடு, நகர மக்கள் அழுவதைக் கண்ட திருமூலர்பரிதாபம் கொண்டு மன்னனின் உடலில் (பரகாயப் பிரவேசம்) செய்தார். அதாவது கூடுவிட்டுக் கூடு பாய்ந்த உடனே இறந்த மன்னன் உயிர்பெற்று விழித்தெழுந்தான். அதுவரை அழுது கொண்டிருந்த அரண்மனையில் இருந்த அனைவரும் மகிழ்ச்சி அடைந்தனர்.

மன்னன் வீரசேனனின் நடவடிக்கையில் மாறுதல்களைக் கண்டாள் குணவதி. இதனால் மாற்றத்திற்குக் காரணம் என்ன என்று கேட்டாள். அதற்கு எந்த நடவடிக்கையும் மாறவில்லை என்றான் மன்னன். இதே சந்தேகம் அவையில் உள்ள அனைத்து அமைச்சர்களிடமும் ஏற்பட்டது.

இவரின் செயல் அனைத்தும் ஆன்மிக விஷயத்தைச் சுற்றியே அமைந்தது. இவரின் செயல் மட்டும் அல்லாமல் ஆன்மிகத்தைப் போதிக்கவும், பொன், பெண், பொருள் இவற்றின் மீதுள்ள ஆசையை விலக்க வேண்டும் என்றும் மனதை ஒரு நிலைப்படுத்தி தினமும் தியானம் செய்ய வேண்டும் என்று கூறியதும் அவர்களுக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது.

முன்பு இவ்வாறு அரசர்பேசியது இல்லை. குணவதி மன்னனிடம் தாங்கள் யார் உண்மையைக் கூறுங்கள் என்றார்இதனால் அரசனின் உருவில் உள்ள திருமூலர் உண்மையைக் கூறினார். தான் சித்தர் என்பதையும் கூடுவிட்டுக் கூடு பாய்ந்த விளக்கத்தையும் குணவதியிடம் சொன்னார்.

**குணவதியின் தீய எண்ணம்**

குணவதி திருமூலரிடம் தங்கள் உடல் எங்கு உள்ளது அதை யாராவது எடுத்து அழித்து விட்டால் என்ன செய்வதென்று கேட்டாள்.அப்படி எதுவும் செய்ய முடியாது. எனது சீடரான குருராஜரிஷியிடம் எனது உடலைப் பாதுகாக்க வேண்டும் எனச் சொல்லி விட்டு வந்தேன். குணவதி, அவர் எரித்து விட்டால் என்றாள். அவ்வாறு எளிதில் எரித்து விட முடியாது எனது சரீரம் கற்ப சரீரம் அதை எரிக்க வேண்டும் என்றால் அச்சரீரத்தை வெடியுப்பு, குங்கிலியம், பொரிகாரம் நிரப்பி விராலி இலையோடு அகிற்கட்டையை அடுக்கி நெருப்பிலிட்டால் தான் அழிக்க முடியும் என்றார்.

குணவதி தனது கணவனின் உருவில் இருக்கும் சித்தர் எப்போது வேண்டும் ஆனாலும் தன்னை விட்டுப் போய்விடுவார் என்றும், அவ்வாறு சென்று விட்டால் தன் அரசி பதவி போய்விடும். பின் பெண்களிடையே கற்புக்கரசி என்ற தன் பெயருக்கு பங்கம் வந்து விடும் என்றெண்ணி திருமூலரின் சடலத்தைத் தீயிட்டுக் கொளுத்திவிடுமாறு அமைச்சர்களிடம் கட்டளை இட்டாள். குருராஜரிஷி வெளியில் சென்ற நேரம் பார்த்து செய்து முடித்தனர்.

குணவதியின் செய்கைகள் சித்தருக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. திருமூலர் வேட்டைக்குச் செல்வதாக கூறி சதுரகிரியில் உள்ள குகைக்குச் சென்றார். செல்லும் வழியில் குருராஜரிஷியைப் பார்த்தார். அவரையும் அழைத்துக் கொண்டு குகைக்குள் சென்றார். ஆனால் அங்கு திருமூலரின் உடல் காணவில்லை. குணவதியின் சூழ்ச்சி அவருக்குப் புலனாயின. பின் அரண்மனைக்குச் சென்று தனக்கு உடல்நிலை சரியில்லை என்றும் இதனால்

சில காலம் மகாராணி ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்துவார் என்றும் கூறினார். இதைக் கேட்ட குணவதி திடுக்கிட்டு தான் விரும்பியது அரசனின் துணையை மட்டும்தான் அரச போகத்தை அல்ல ஏனிந்த திடீர் முடிவு என்று கேட்டார். திருமூலர் எதுவும் கூறாமல் மௌனமாய் இருந்தார்தான் செய்த செயலை அறிந்திருப்பார்தன்னை மன்னிக்குமாறு கண்ணீர் வடித்தாள். குணவதியின் கண்ணீர் திருமூலரின் மனதை வருத்தியதனால் வரம் நல்க, தான் என்றைக்கும் தீர்க்க சுமங்கலியாக இருக்க அருள வேண்டும் என்றாள். சித்தரும் விரும்பியதை அளித்தார் இதனால் குணவதிக்கு மன்னன் தன்னை விட்டு விலகமாட்டார் என்ற மகிழ்ச்சியில் இருந்தாள்.

**ஜம்புகேஸ்வரராக மாறியது**

ஒரு நாள் நள்ளிரவில் யாருக்கும் தெரியாமல் அரண்மனையை விட்டு திருமூலர் சதுரகிரியை நோக்கிச் சென்றார். அங்குள்ள நதியில் நீராடி கரை ஏறினார் அப்போது ஒரு பிராமணன் அசையாமல் கற்சிலை போல் உட்கார்ந்திருப்பதைக் கண்டு வியப்படைந்தார் கண்கள் நிலைத்துப் போயிருந்ததையும் மூச்சு இயங்கவில்லை. அருகில் சென்று தொட்டவுடன் அவன் உடல் கீழே சாய்ந்தது.

**ஜம்புகேசுவரர் உயிர் பிரிந்தநிலை**

திருமூலர் சித்தரானதால், அவர் ஜம்புகேசுவராம் என்னும் திருவானைக்காவல் கோயிலில் இருந்த ஜம்புகேசுவரர் என்ற அந்தணர் பிராணாயாமப் பயிற்சியில் தேர்ச்சி பெற சதுரகிரிக்கு வந்து குருவின் துணையில்லாமல் முரட்டுத்தனமாக பிராணாயாமப் பயிற்சியை

மேற்கொண்டதால் அவரின் உயிர்பிரிந்தது.  அவன் இறந்ததும் உடலில் சூடு இருந்தது. இதனால் அவன் இறந்து சில மணித்துளிகள் ஆகியிருக்ககூடும் என்பதை அறிந்தார். இதனால் வீரசேனன் உடலில் இருந்து அந்தணர் உடலில் நுழையத் தீர்மானித்தார். அப்போது குணவதிக்கு அளித்த வரம் நினைவுக்கு வந்தது. வீரசேனனின் உடலை சிரஞ்சீவித் தன்மையுடையதாக்க நினைத்தார்.

அரசனின் உடலை எங்கு வைப்பது என்று சிந்தித்தார்.அருகில் 'யானை உண்டி' என்னும் பெருத்தமரம் இருந்தது. அந்த மரத்தின் பொந்தில் வீரசேனன் உள்ளே நுழைந்து உட்கார்ந்தார் மன்னனின் உடலை அங்கே விட்டு விட்டு ஜம்புகேஸ்வரர் உடலில் புகுந்தார்அதாவது கூடுவிட்டுக் கூடு பாய்ந்தார் அவ்வாறு, செய்வது இவருக்கு மூன்றாவது முறையாகும்.

மன்னனின் உடலைச் சிரஞ்சிவி தன்மையுடையதாக்க சில மூலிகைகளைச் சேர்த்து, அக்கலவையில் மந்திர சக்தியை ஏற்றி அக்கரைசலை மரப்பொந்தில் இருந்த மன்னனின் உடலில் தடவினார்அந்த மரத்தின் மேற்புறத்தை பட்டைகள், இலை கிளைகளால் மூடச் செய்தார்.

**அரசமரமானது**

யானை உண்டி என்னும் மரப்பொந்தில் அரசனின் உடலை வைத்துப் பின்பு சில மந்திரங்களை உச்சரித்தார்மரப்பொந்து நன்றாக மூடிக் கொண்டது. அரசர்உடலைத் தன்னுள் அடக்கியுள்ள அந்த மரம் 'அரசமரம்' என வழங்குவதாக வாழ்த்திவிட்டு, தவ வாழ்க்கையைத் தொடங்க சதுரகிரி மலைக்குச் சென்றார்.

குணவதி தன் தவறை உணர்ந்து திருமூலரை வந்து வணங்கினாள்.உன் கணவன் தவசக்தியால் அரசமரமாகி உருமாறி விட்டார்நீ அவரை அரசமர வடிவிலே காண இயலும். நீ அந்த அரசமரத்திற்குப் பூசை செய்தால் பதிசேவை செய்த பலனை அடைவாய் என்று கூறினார்.

குணவதி தான் செய்த செயலை எண்ணி கண்ணீர் வடித்தாள். அவள் அரச மரத்தை வணங்கி நாடு திரும்பினாள்.

**புராணச் செய்திகள்**

திருமூலர் துவாரகை கிருஷ்ணனுக்கு, மார்க்கண்டேயருக்கும் உபதேசம் செய்த செய்தியை அகத்தியர்கூறுகின்றார்அவை,

***.....யட விக்கும் சென்று தானும்***
***பண்டுளவு கிருஷ்ண பூபாலனுக்கு***
***பார்தனில் உபதேசம் செய்தார்***[11]

இவ்வாறு அகத்தியர்குறிப்பிடும் செய்தி புராணங்களில் எங்கும் குறிப்பிடப்படவில்லை.

**திருமூலரின் சீடர்கள்**

திருமூலருக்கு ஏழு பிரதான சீடர்கள் இருந்தார் அதற்கான சான்று: அவை,

***நந்தியருள் பெற்ற நாதனை நாடிடின்***
***நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி***
***மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்***

***என்றியர்என்னோ டெண்மருமாமே*** [12]

**திருமந்திரம்**

என்று சிவலோகத்தில் ஈசனிடம் உபதேசம் பெற்றார் என்பதை, திருமூலரின் பாடல் மூலம் அறியலாம்.

***மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்***
***இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்***
***கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ***
***டிந்த எழுவரும் என் வழியாமே*** [13]

**திருமந்திரம்**

இப்பாடலின் மூலம் மாலாங்கன், இந்திரன், சோமன், (சந்திரன்) பிரமன், உருத்திரன், காலாங்கி, கஞ்சமலையன் என இவர்கள் எண் சீடர்கள் ஆவார்கள் என்று கூறியுள்ளார்.

**திருமூலரின் காலம்**

இராமாயண காலமும் திருமூலரின் காலமும் ஒன்றே; அஃது 6ஆம் நூற்றாண்டாகும்.

***மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்***
***என்றியர்என்னோ டெண்மருமாமே*** [14]

என்ற பாடலின் வழி பதஞ்சலியும் வியாக்ரமரும் தம்மோடு தில்லையில் திருநடனம் கண்டவர்கள் என்று திருமூலர் கூறியுள்ளார்.பதஞ்சலியின் காலம் கி.பி.ஏழாம் நூற்றாண்டு என்றும் திருமூலரின் காலத்தை கி.பி ஆறாம் நூற்றாண்டு என்பதையும் அறியமுடிகின்றது.

### திருமூலரின் ஜீவசமாதி

சிதம்பரத்தில் நடராஜர்கோயிலில் உள்ள மூலவர் சந்நிதியிலுள்ள லிங்கம் சுயம்புவாகத் தோன்றி இருப்பவர் திருமூலர் ஆவார்இதனை,

*நானென்ற மேலச் சிதம்பரத்தில்*

*நாடிநின்ற திருமூலர் நாட்டந் தானே*[15]

**போகர்ஜனன சாகரம் - 312**

என்ற பாடலின் மூலம் திருமூலர் சமாதியில் விற்றிருக்கும் இடம் தில்லை கோயில் சந்நிதி, மூலர் சந்நிதி எனக் கூறியுள்ளார். அதற்கு பாண்டிய மன்னன் கட்டளையின் படி திருமூலரின் சமாதியை மூலவராகக் கொண்டு சிதம்பரம் கோயில் கட்டப்பட்டது. இதை, கருவூரார் முன்னின்று நடத்தி வைத்தார்.திருமூலர் இலிங்கமாக எழுந்திருப்பதைக் காலபோக்கில் மறைக்கப்பட்டது. பின்பு சிவபொருமானே சுயம்புலிங்கமாக எழுந்தருளி உள்ளார் என்று சொல்லி வருகிறார்கள். இதனுடன் உமாதேவியின் சந்நிதியையும் சேர்த்து விட்டனர்.

### திருமூலர் இயற்றிய நூல்கள்

1. **திருமந்திரம் என்னும் திருமூலப் பெருநூல் 3000**
2. **திருமூலர் காவியம் கிரந்தம் - 8000**
3. **திருமூலர் பச்சை நூற்காவியம் - 24**
4. **திருமூலர் விதிநூல் - 24**

என்பனவாகும்.

**வால்மீகர்**

வால்மீக சித்தர் பெயரில் மூவர் இருந்தனர்என்றும் ஒருவர் வடமொழியில் இராமாயணம் பாடியவர், தென்னாட்டில் வாழ்ந்தவர், மற்றொருவர் முதற்சங்க காலத்தில் வாழ்ந்த வால்மீகனார் என்றும் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. ஆனால் முதலில் இருவரும் ஒருவரே என்றும் முதற்சங்க காலத்தில் இருந்த வால்மீகனார் பாடல்கள் மூலம் மூவரும் ஒருவரே என்பதை அறியமுடிகிறது.

*தோற்றமுடன் வால்மீகர்என்றசித்து*

*தெளிவாக மார்க்கமது சொல்வேன் பாரிர்*

*மாற்றமயம் நீக்கியல்லே வையகத்தில்*

*வளமையுடன் வெகுகாலம் இருந்த சித்து*

*ஆற்றலுடன் வால்மீகி ராமாயணத்தை*

*அவனிதனில் மாந்தருக்குச் செய்திட்டாரே* [16]

**போகர் 7000 - 5834**

என்ற போகரின் பாடல் வழி அறியமுடிகின்றது, தோற்றமுடன் வால்மீகர்என்ற சித்து என்று போக முனிவர் பாடுவதால் இவர் சித்தராகவே அறியப்படுகிறார்.

*செய்த தொரு வால்மீகர்வயதே தென்றால்*

*செப்பமுடன் எழுநூற்றுச் சொச்சமப்பா*

*துய்ய தமிழ்ப் பண்டிதனாம் கல்வி வானாம்*

*தூய்தான அகப்பேறு கொண்ட சித்து*

*பையவே சமாதிமுகம் சென்றதில்லை*

*பாங்குடனே காயாதி கொண்டுதானும்*

*வெய்யவே நெடுங்காலம் இருந்த சித்து*

*வேதாந்த வால்மீகர்தானுமாமே* [17]

**போகர் 7000 - 5835**

வால்மீகர்வேடர்குலத்தைச் சேர்ந்தவர் என்றும் புரட்டாசித்திங்கள் அனுஷம் நட்சத்திரத்தில் பிறந்தவர் என்றும் போகர்சித்தர்களின் வயது, சாதி, பிறந்தமாதம், நட்சத்திரம் முதலிய விவரங்கள் போகர்ஏழாயிரம் என்ற நூலில் ஆறாம் காண்டத்தில் கூறியுள்ளார்.

வேடர்குலத்தில் பிறந்த இவர் தனது குடும்பத்தைக் காப்பாற்ற வழிப்போக்கர்களைக் கொள்ளையிடும் தொழிலில் ஈடுபட்டு, தன் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார். ஒரு நாள் சப்தரிஷிகள் அந்தக் காட்டின் வழியே போய்க்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களை வழிமறித்துப் பொருட்களைக் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள் என்றார்.அதற்கு சப்தரிஷிகள் ஏன் இப்படிச்செய்கிறீர்கள் என்றனர். அதற்கு அவர்தன் குடும்பத்தைக் காப்பாற்ற இப்படிச் செய்கிறேன் என்றார்.

இதற்கு சப்தரிஷிகள், “நீ உன் குடும்பத்தைக் காப்பாற்ற இப்படிச்செய்கிறாய் கொள்ளையடிக்கும் சொத்தில் அவர்கள் பங்கு கொள்கிறார்கள். அதைப்போல் கொள்ளையடித்தால் வரும் பாவத்தில் அவர்கள் பங்கு கொள்வார்களா? என்றார். அதற்கு அவன் நான் என் குடும்பத்தைக் கேட்டுத்தான் சொல்லமுடியும் என்றார். வால்மீகர்வீட்டுக்கு வந்து வீட்டில் உள்ளவர்களிடம் கேட்டார்.அதற்கு அவர்கள் எங்களைக்

காப்பாற்றுவது உன் பொறுப்பு. வரும் பாவங்களில் எங்களுக்குப் பங்கு கிடையாது என்றனர்குடும்பத்தினர்".

வால்மீகர்க்கு ஞானம் ஏற்பட்டு ரிஷிகளின் காலில் விழுந்து வணங்கி ஞான வழி கூறுமாறு கேட்டுக் கொண்டார் அதற்கு ராமநாமத்தைப் போதித்து அதையே எப்போதும் தியானம் செய்யும்படி கூறிச்சென்றார்கள்.

**வால்மீகர் என்ற பெயர்ஏற்படக்காரணம்**

இவரது இயற்பெயர் ஏற்படக் காரணம், இவர் ராமநாமத்தையே ஊன் உறக்கம் யாவற்றையும் மறந்து பல ஆண்டுகள் தியானம் செய்தார். அவரைச் சுற்றி கரையான் புற்று (வால்மீகம்) மூடிவிட்டது. பல ஆண்டுகள் கழித்து அந்த வழியே வந்த சப்தரிஷிகள் புற்றை இடித்தனர். வால்மீகத்திலிருந்து வெளிவந்ததால் மீகர்என்ற பெயர்ஏற்பட்டது.இவர் இராமநாமத்தை நீண்டகாலம் தியானம் செய்ததால் இவருக்கு பிரம்மஞானம் ஏற்பட்டு மகரிஷியாக விளங்கினார் "தமஸா நதிக்கரையில்" ஆசிரமம் அமைத்துக்கொண்டார்.

**வால்மீகர்முதன் முதலில் பாடிய செய்யுள் (சுலோகம்)**

வால்மீகர்அழகிய காட்சியாக ஒரு ஆண்பறவையும் பெண்பறவையும் மகிழ்ச்சியாக இருந்ததைப் பார்த்துக் கொண்டு இருந்தார்.அப்போது ஒரு வேடன் அம்பெய்தி ஆண் பறவையைக் கொன்றான்.இதனைக் கண்ட பெண் பறவை மிகுந்த துயரம் அடைந்து புலம்பியதைக் கண்ட வால்மீகர்அவரின் உள்ளத்தில் துயரமும் கருனணயும் தோன்றி ஒரு சுலோகத்தினைப் பாடினார்.

அவை,

*மா நிஷத பிரதிஷ்டாம் த்வம்*

*அகம சாஸ்வத் ஸமா*

*யத் கிரௌஞ்ச மிதுனா தேகம்*

*அவத் காம மோஹிதம்* [18]

இப்பாடல் தான் வடமொழியில் முதல் சுலோகம் ஆகும். இப்பாடலின் பொருள் வேடன் குலவிக் கொண்டிருந்த கிரௌஞ்சப் பறவை இணையில் ஒன்றை அடித்துக் கொன்றதால் வெகுகாலம் சுகவாழ்வை அனுபவிக்க மாட்டாய் என்பதுதான்.

**இராமாயணத்தை எழுதியது**

"வால்மீகியின் முன் பிரம்மா தோன்றி நீ விரும்பியபடியே சரஸ்வதியின் அருளாலும் உன் வாயிலிருந்து இந்த சுலோகம் வெளிவந்துள்ளது. இந்த சந்தத்திலே இராமகதை எழுது. இராமருடைய கதை நடந்தது நடந்தபடி ஒன்றன்பின் ஒன்றாக உன் உள்ளத்தில் தோன்றும் நாரதரும் ராமகதையைச் சுருக்கமாக வால்மீகிக்குக் கூறினார். அதன்படியே இராமகதை வால்மீகர் 2400 சுலோகங்களில் (செய்யுளில்) இராமாயணத்தைப் புனைந்தார். வால்மீகர்சித்தராலே இந்நூல் புண்ணிய நூலாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**இராமனுடைய காலம்**

**"ஒரு சதுர்யுகம் - 43.20.000 வருடங்கள்**

**திரேதாயுகம் - 12.96.000 வருடங்கள்**

**துவாபராயுகம் - 8.64.000 வருடங்கள்;**

அவதாரிகை வால்மீகி ‘தமஸா’ நதிக்கரைக்குச் சென்று வேடன் பறவையைக் கொன்றது.வால்மீகியின் சாபம் பிரம்மாவின் வருகை இராமாயணத்தைச் செய்யும்படி ஆக்ஞை - ஞான திருவடியைப் பொய்யாத மொழியும் அழியாத கீர்த்தியும் அளிக்கப்பட்டது.”

**முதற்சங்க காலத்தில் வால்மீகனார்**

முதற்சங்க காலத்தில் வால்மீகனாரின் பெயரை ஆரிய வால்மீகனார் என்றும் புறநானூற்றில் ஒரு பாடலைப் பாடியவர் இவர் என அறியமுடிகின்றது. இப்பாடல்,

***பருதி சூழ்ந்த இப் பயங்கெழு மாநிலம்***
***ஒருபகல் எழுவர் எய்தி யற்றே***
***வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு***
***ஐயவி அனைத்தும் ஆற்றாது ஆகலின்***
***கைவிட் டனரே காதலர் ஆதனால்***
***விட்டோரை  விடா அள் திருவே***
***விடா அ தோர் இவள் விடப்பட் டோரே*** [19]

**புறநானூறு - 358**

இப்பாடலின் மூலம் சூரியனைச் சுற்றிவரும் இந்தப்பூவுலகம் பலரால் ஆளப்படும். ஆனால் ஒரு பகல் பொழுதில் ஏழுபேர் கூட ஆளும் தன்மை உடையது.  இந்த நில உலகம் நிலையானது அல்ல; உலக வாழ்வையும் தவவாழ்வையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த உலகம் தவத்திற்குக் கடுகளவுகூட ஈடாகாது. எனவே தான் காதல் வாழ்வையும்

இல்லறவாழ்வையும் கைவிட்டனர். அனைத்தையும் கைவிட்டவர்களைத் திருமகள் விடாது பற்றி இருப்பாள் என்று

இப்பாடலில் உலகியலிலும் உயந்தது தவமே என்பதை அழகுற விளக்கிப் பாடியுள்ளார், வான்மீகனார்.இதன் திணை - காஞ்சி, துறை - மனையறம், துறவறம் என்று அமைந்துள்ளது.

இதன் மூலம் சங்க இலக்கியத்திலும் இராமாயணத்தை எழுதியவரும் சித்தர் வால்மீகனார் இந்த மூன்று பேரும் ஒரே கருத்தான தவம், துறவறம், இல்லறவாழ்க்கையில் பற்றற்று உள்ளமை என்கிற கருத்தை முன்வைப்பதால் மூன்று பேரும் ஒருவரே என்று கருதமுடிகின்றது.

**பதஞ்சலி**

பதஞ்சலி முனிவரின் தந்தை அத்திரி, முனிவர் தாய் கோணிகா என்பதால் இவரை ஆந்திரேயர்என்றும் கோணிகா புத்திரர் என்றும் அழைப்பார்கள்.பதஞ்சலி முனிவர் ஆதிசேடனின் அவதாரமாகவும் ஸ்ரீமத் நாராயணன் படுக்கையான அந்தகனே ஆதிசேடன் ஆவார்.

ஆதிசேடன் மீது பற்றி கொண்டிருந்த விட்ணு (விஷ்ணு) சிவதாண்டவம் கண்டதை நினைத்துப் புளகாகிதமடைந்து புரள அந்தப்பாரம் தாங்கமுடியாமல் ஆதிசேடன் காரணம் கேட்டிருக்கிறார்.

இவருக்குச் சிவதாண்டவம் காணும் ஆவல் தூண்ட கயிலாய மலைக்குச் சென்று தவம் செய்யத் தொடங்குகிறார். சிவபெருமானும் சிவதாண்டவத்தைக் காணும் பேற்றினை அளிப்பதாகக் கூறினார்.

திரு பதஞ்சலி முனிவரின் தலையில் இருந்து இடுப்பு வரை மனித உருவமும் இடுப்புக்குக் கீழே பாம்பு உருவமும் கொண்டது.ஆதிசேடனின் அவதாரம் ஆகும். இருமை நிலைகளைக் கடந்ததற்கு அடையாளமாகவும் உடலினுள்ளே உறையும் பாம்புச் சக்தியாகிய குண்டலினியின் குறியீடாகவும் இந்தப் பாம்பின் தோற்றத்தில் அமைந்துள்ளன.

**முனிவர் செய்த சூத்திரங்கள்**

வேத உண்மைகளைப் பிரும்ம சூத்திரமாக வியாசரும், பக்தி சூத்திரமாக நாரதரும் செய்தது போல யோக சூத்திரத்தைப் பதஞ்சலி முனிவர் செய்துள்ளார். பதஞ்சலி தன்னுடைய யோக சூத்திரங்களை 196 சூத்திரங்களாகத் தொகுத்துள்ளார். அவற்றை நான்காகப் பிரித்துள்ளார் அவை,

1. **சமாதி பாதம்**
2. **சாதனா பாதம்**
3. **விபூதி பாதம்**
4. **கைவல்ய பாதம்**

இவையே யோக சூத்திரத்தில் தொகுத்துக் கூறியுள்ளார்இவர் யோக சூத்திரங்களின் தந்தை எனப் போற்றப்படுகிறார்.

**சமாதி பாதம்**

சமாதி பாதத்தில் ஒழுங்காக செய்யப்பட்ட தியானத்தின் மூலம் அடையும் சமாதிகள் பற்றி கூறப்பட்டுள்ளது.

**சாதனா பாதம்**

இதில் சமாதியை நோக்கி செய்ய வேண்டிய கிரியைகள், ஒழுக்க விதிகள், எது எப்படி சாதிக்கப்பட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

**விபூதி பாதம்**

விபூதி பாதத்தில் இந்த யோக வழிதரும் பலன்கள் கூறப்பட்டுள்ளன.

**கைவல்ய பாதம்**

இதில் யோகப் பயிற்சியில் இறுதி முடிவான மோட்சம், விடுதலை அல்லது சமாதி பற்றி கூறப்பட்டுள்ளது.

**பதஞ்சலியின் சீடர்கள்**

“பதஞ்சலி முனிவர் ஆதிசேடனின் வடிவம் கொண்டவர்.இவரின் உடல் முழுவதும் கடும் விஷம் பாயும்.அவரின் மூச்சுக்காற்று பட்டால் அனைவரும் சாம்பலாகி விடுவார்கள் என்பதால் இவர் சீடர்களுக்கு அரூபமாக நின்று உபதேசித்து வந்தார்.ஆனால் நேருக்கு நேராக உபதேசிக்க வேண்டும் என்றும், தமக்கும் தமது சீடர்களுக்குமிடையே ஒரு கனமான திரையைப் போட்டுக்கொண்டு ‘வியாகரண’ சூத்திரத்தை உபதேசிக்கத் தொடங்கினார்.

சீடர்கள் குரு நாதரின் திரு முகத்தை எப்படியாவது பார்த்து விட வேண்டும் என்று ஆர்வத்தின் மிகுதியால் கனமான திரையைப் பிடித்து இழுக்க அடுத்த நொடியில் அனைத்து சீடர்களும் எரிந்து சாம்பலாயினர். அதில் ஒருவர் மட்டும் குருநாதரின் பணியின் நிமித்தமாக வெளியில் சென்ற

கௌடபாதர் என்ற சீடர்மட்டும் எரிந்து சாம்பலாகாமல் தப்பித்தார்.இதனால் கௌடபாதர் ஒருவருக்கு மட்டும் சகல கலைகளையும் கற்றுக் கொடுத்தார்.

**பதஞ்சலி யோக சூத்திரம்**

பதஞ்சலி யோகத்தை அட்டாங்க யோகம்; எனும் அங்கயோகமாத் தொகுத்துள்ளார்அவை,

1. **இயமம் : பொது ஒழுக்கம்**
2. **நியமம் : சுய ஒழுக்கம்**
3. **ஆசனம் : இருக்கை நிலை**
4. **பிராணாயாமம் : மூச்சுக்கலை**
5. **பிரத்தியாகரா : மனதை உள்வாங்குதல்**
6. **தாரனம் : தியானத்துக்கு**
7. **தியானம் : ஒன்றில் கரைதல்**
8. **சமாதி : பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள், பார்த்தல், உறக்கநிலை**

இந்த எட்டு அங்கயோகத்தின் மூலம் முக்திக்குச் செல்ல முடியும் என்று யோகத்தைச் செய்ய வேண்டிய நேரம், திசை பற்றி அவர் சூத்திரத்தில் விளக்கிக் கூறியுள்ளார்.

**தியானம் செய்யும் முறைகள்**

தியானம் கைகூடியதும் அடுத்த நிலை சமாதிதான்.இடைவிடாத ஒரே பொருளைப் பற்றி நினைவு தியானமாகும்.

தியானம் காலி வயிற்றில் செய்யப்பட வேண்டும்.அதாவது உணவு எதுவும் உட்கொள்ளாமல் செய்வது. பிரும்ம முகூர்த்தமான காலை நான்கில் இருந்து ஆறு, சந்திப்போதான மாலை ஐந்திலிருந்து ஏழு அல்லது எட்டு மணியளவிலும் சூரியன் சக்தி குறைந்த வேளை தியானத்திற்கு ஏற்றது.

தியானம் செய்ய திசையை வடக்கு அல்லது கிழக்கு பார்த்து அமர வேண்டும்.மனதை வெறுமையாக்கிக் கொள்வது தியானமில்லை. சமாதியிலும் ஒரு விருத்தி ஓடிக் கொண்டிருக்கிறது என்று பதஞ்சலி முனிவர் கூறுகின்றார். மனதை ஒருமுகப்படுத்த முடியாதவருக்குத் தியானமே வராது என்கிறார்.

**பதஞ்சலியின் கூடுவிட்டுக் கூடுபாயும் சூத்திரம்**

பரகாயப் பிரவேசம் எனப்படும் கூடுவிட்டுக் கூடுபாய்தல் எனும் சித்து குறித்த சூத்திரமாக

***'பந்த காரண சைதில்யாத் ப்ரசார ஸம்வே தனாச்ச***
***சித்தஸ்ய பரசரிராவேச'***[20]

என்ற பாடலின் மூலம் கூடுவிட்டுக் கூடுபாயும் சூத்திரத்தை விளக்கியுள்ளார்.

**பதஞ்சலி கூறியுள்ள ஆசனங்கள்**

பதஞ்சலி முனிவர் ஆசனங்கள் குறித்து தமது 46-வது சூத்திரத்தில் விரிவாகக் கூறியுள்ளார்.

வையகத்தில் எண்பத்து நான்கு லட்சம் ஜீவராசிகள் இருப்பதாகவும் ஒவ்வொரு உயிருக்கும் ஒரு ஆசனமாக எண்பத்து நான்கு லட்சம் ஆசனங்கள் இருப்பதாக பதஞ்சலி முனிவர் கூறியுள்ளார்.

**ஆசனங்கள்**

1. **திரிகோணாசனம்**
2. **சவாசனம்**
3. **விபரித கரணி**
4. **ஹலாசனம்**
5. **மகராசனம்**
6. **புஜங்காசனம்**
7. **சிரசாசனம்**
8. **வஜ்ராசனம்**
9. **பத்மாசனம்**
10. **யோகமுத்ரா**

பதஞ்சலி முனிவரால் இயற்றப்பட்ட சூத்திரத்திலிருந்து சில ஆசனங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**ஜீவசமாதி**

பதஞ்சலி சித்தரின் சொரூபம் தாங்கிய சிலைகள் தில்லையில் நடராஜப் பெருமான் கோவிலில் உள்ளது.இக்கோயிலில்தான் பதஞ்சலியும் இவரின் சீடர்வியாக்ரபாதரும் திருமூலரும் நடராஜப் பெருமானின் நடனத்தைக் கண்டுகளித்தது.பதஞ்சலி சித்தர் தவம் செய்த இடமும் உள்ளது.கருவறையின்

முன்பாக பதஞ்சலியும் அவரது சீடர்என இருவருடைய சிலையும் அங்கு இருப்பதே இதற்குச் சான்று. இவரின் ஜீவசமாதி இராமேஸ்வரத்தில் அமைந்துள்ளது.

**கொங்கணர்**

கொங்கணர் கொங்கு நாட்டில் பிறந்ததால் கொங்கணர் என்று அழைக்கப்பட்டார்.இவர் சித்திரைமாதம் உத்திராடம் நட்சத்திரத்தில் சங்கரகுலத்தில் பிறந்தவர். இதனை,

***திட்டமுடன் கொங்கணர் பிறந்த நேர்மை***
***தீர்க்கமுடன் யானுரைப்பேன் சுகந்த மாரா***
***வட்டமுடன் சித்திரையாம் திங்களப்பா***
***வளமான உத்திராடம் முதற்கால் தன்னில்***
***அட்டதிசை தான் புகழப் பிறந்த பாலன்***
***அன்பான கொங்கணர் கணவர் என்னலாமே*** [21]
***என்னவே அவர் பிறந்த நேர்மையப்பா***
***எழிலான சங்கர குலத்து தித்த***
***பன்னவே கானீனன் பெற்ற பாலன்*** [22]

என்ற பாடல் வழி அறியமுடிகின்றது.

**காலம்**

“கொங்கணர் திருமழிசை ஆழ்வாரைச் சந்தித்து அவருடன் வாதாடி ஆழ்வாரின் பெருமையை உணர்ந்தார் என்னும் செய்தி மூலம் இவர்

திருமழிசை ஆழ்வார் காலத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம். ஆழ்வாருடைய காலம் ஏழாம் நூற்றாண்டு என்று கருதமுடிகின்றது.”

**பெற்றோர்**

இவருடைய பெற்றோர் இரும்பை உருக்கிக் கலங்கள் செய்து கோவில் வாசலிலே வைத்து விற்றுப் பிழைத்து வந்தனர்என்பதும், அவர்கள் ஏழ்மையில் வாழ்ந்த போதிலும் யோகிகளையும் சாதுக்களையும் கண்டால் அவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்தும் ஏவல் கேட்டும் விருந்தோம்பல் செய்தும் பண்போடு வாழ்ந்தனர் என்பதும் அறியலாகும் செய்தியாகும். இதனை,

***ஆச்சப்பா கொங்கணவர் இருந்த வண்ணம்***
***அப்பனே அவர்பாடு முறைபாடெல்லாம்***
***மூச்சடங்கித் தவநிலைக்குச் செல்லா முன்னம்***
***மூதுலகி லிவர் தந்தை தாயின் வள்ளல்***
***பேச்சரிய முழுமக்கள் இருவர் தானும்***
***வேறுலகில் ஈசரது கோட்டை வாசல்***
***மாச்சலுடன் இரும்புருக்கிக் கலங்கள் செய்து***
***மன்னவனே விற்றுண்ட புனிதராமே*** [23]

**அக.12000-4-406**

என்ற பாடல் வழி அறியமுடிகின்றது.

**இளமைப் பருவம்**

கொங்கணரின் பெற்றோர் வாணிபம் செய்தது போலவே இவரும் அத்தொழிலையே மேற்கொண்டு உயர்ந்த நிலை பெற்றார். இதனை,

***பூணவே கொங்கணர் வயதுமாகி***

***பூவுலகில் பதினாறு பாலனாகி***

***தோணவே கைத் தொழிலாங் கலங்கள் செய்து***

***தோராமல் வர்த்தகத்தில் நிபுணனாகி***

***ஆவணங்கள் உள்ளடக்கி அரிய பாலன்***

***அவனிதனில் வர்தகனாயிருந்தார் தாமே*** [24]

என்னும் பாடல் மூலம் அறியக்கிடக்கிறது

**கொங்கணர் மெய்ஞ்ஞானம் பெற்றமை**

கொங்கணரின்விருந்தோம்பலில் மனம் மகிழ்ந்த முனிவர்கள் கொங்கணருக்கு அஞ்ஞானத்தை அழித்து மெய்ஞ்ஞானத்தை உணர்த்தினர்.

மெய்ஞ்ஞானத்தை உணர்த்துவதாக

***தெள்ளமிர்த மானதொரு பால் பழத்தால்***

***தோற்றமுடன் கொங்கணற்கு மனதுவந்து***

***உள்ளபடி மெய்ஞ்ஞானப் பாலை ஐயா***

***உத்தமற்கு உபதேசம் செய்தாலே***

***கள்ளமிலாக் கொங்கணரும் மனதுவந்து***

***காசினியில் சமுசாரம் துறந்திட்டாரே*** [25]

என்ற பாடல் அமைகின்றது.இப்பாடலில் காசினியில் சமுசாரம் துறந்திட்டாரே என்ற வரியினால் கொங்கணர் இல்வாழ்க்கையில் ஈடுபட்டு, பின் துறவு மேற்கொண்டார் என்பது தெரியவருகின்றது.

**கூடுவிட்டுக் கூடுபாய்தல்**

மெய்ஞ்ஞானம் பெற்ற கொங்கணர், மலைகாடுகளில் சுற்றிக்கொண்டிருந்த போது ஒரு பளிங்கன் இறந்து கிடந்ததைக் கண்டார்.பளிங்கனின் உறவினர்களின் துயரத்தைப் போக்க தன் உடலினைத் துறந்து கூடுவிட்டுக் கூடு பாய்ந்தார் என்பதை,

***வந்திடும் போதங்கே தான்***
***மலைப் பளிங்கனுமே செத்து***
***விந்தையாய்ப் போகப் பார்த்து***
***மிகவேதான் இரக்கம் கொண்டு***
***சந்தோசமாகத்தான் தம் தன்***
***சரிரத்தை வைத்து விட்டு***
***இந்த நற் சரிரந் தன்னில்***
***இயல்புடன் பாய்ந்து விட்டார்***[26]

என்ற பாடலால் அறியமுடிகின்றது.

பளிங்கன் எழுந்து விட்டதைக் கண்ட பெரியவர்கள் ஏதோ மர்மம் உள்ளதை அறிந்து, சித்தரின் உடலுக்குத் தீ மூட்டி எரித்துவிட்டனர்என்று கொங்கணர் பளிங்கருடலுடன் சேர்ந்து மலைக்காடுகளில் வாழ்ந்தார். அவ்வாறு வாழ்ந்து கொண்டிருக்கையில் போகரைச் சந்தித்தார். அவருடைய

சீடரானார் போகர்பலமுறை யாகம் நடத்துவதை நீக்கி தவம் இயற்றுக என்று கூறினார். அதனால் கொங்கணர் அதற்கு உடன்பட்டு எச்செயலையும் செய்யவில்லை. ஆனால் போகரிடமிருந்து முற்றும் கற்றுணர்ந்து சித்தராக வெளியேறிய பிறகு தான் கொங்கணர் வாழ்க்கையில் இரண்டு சோதனைகள் ஏற்பட்டன.

**கொங்கணர் ஓர் அறிவியல் அறிஞர்**

கொங்கணர் பாடல்களில் அறிவியல் செய்தி காணப்படுகிறது. பல அரிய வேதியியல் இரகசியங்கள் இவரது பாடலில் அமைந்துள்ளன என்பதை,

**செம்பு மூலிகை**

*காணப்பா மூலிகை செம்பு சொல்வேன்*

*1கலந்தவுரி 2ஓரிதழ்தாமரையும் கேளு*

*பூணப்பா 3 புளியரனை 4 கோவை யோடே*

*புகழ் 5 சிவந்த கொடிவேலி 6சிறியகீரை*

*ஆனப்பா 7 செந்திராயிப் 8 பிடாரடுக்கி*

*யப்பனே 9கரிசாலை 10 அங்கபாதி*

*தோணப்பா 11 செவ்வல்லி 12 கருத்தசெம்பை*

*சுகமான 13 செங்கீரை 14 கொளதும்பையாமே* [27]

*தும்பையோடு பொற்றலையுங் கேளு மக்காள்*

*சுகமாகப் பதினஞ்சும் வெவ்வேறு சாறு*

என்னும் பாடலின் மூலம் மூலிகைச் சாற்றிலிருந்து செம்பு என்ற உலோகத்தைப் பிரித்து எடுக்க முடியும் என்று கூறுவதை அறியமுடிகின்றது.

**கொங்கணர் இயற்றிய நூல்கள்:**

| | | |
|---|---|---|
| **வாத காவியம்** | **-** | **3000** |
| **முக்காண்டங்கள்** | **-** | **1500** |
| **தனிக்குணம்** | **-** | **200** |
| **வைத்தியம்** | **-** | **200** |
| **வாதசூத்திரம்** | **-** | **200** |
| **தண்டகம்** | **-** | **120** |
| **ஞானசைத்தன்னியம்** | **-** | **109** |
| **சரக்கு வைப்பு** | **-** | **111** |
| **கற்பசூத்திரம்** | **-** | **100** |
| **வாலைக்கும்மி** | **-** | **100** |
| **ஞானமுக்காண்டசூத்திரம்** | **-** | **80** |
| **முதற்காண்ட சூத்திரம்** | **-** | **50** |
| **நடுக்காண்ட சூத்திரம்** | **-** | **50** |
| **கடைக்காண்ட சூத்திரம்** | **-** | **50** |
| **ஞானவெண்பா** | **-** | **49** |
| **ஆதியந்த சூத்திரம்** | **-** | **45** |
| **மூப்பு சூத்திரம்** | **-** | **40** |
| **உற்பத்தி ஞானம்** | **-** | **21** |
| **சுத்தஞானம்** | **-** | **16** |

**இவற்றுள்**

**கொங்கண தேவர் கலை**

**கொங்கணர் தியானம்**

**கொங்கணர் வாக்கியம்**

**துருசுகுரு முப்பத்தொன்று**

**கொங்கணர் குளிகை**

**ஞானம் நூறு**

**கொங்கணர் திரிகாண்டம்**

**மூப்பூதீட்சை**

முதலியவை சிறப்புடையதாகும். இவற்றால்,

கொங்கணர் சித்தரின் வாழ்வும் வரலாறும் பற்றியும் சித்தரின் பிறப்பு, பெற்றோர், இளமைப்பருவம், சமாதிஅடைந்த இடம்பற்றியும், வேதியியல் இரகசியங்களை அறிந்த அறிவியல் அறிஞராக கொங்கணர் திகழ்ந்தார் என்பதையும் அறியமுடிகின்றது.

**திருவள்ளுவர்**

திருக்குறளை இயற்றிய திருவள்ளுவரும் திருவள்ளுவர் சித்தரும் இருவரும் ஒருவரே. திருவள்ளுவர் திருக்குறளை மட்டும் இயற்றவில்லை பல நூல்களை இயற்றியுள்ளார்

**திருவள்ளுவர் பிறந்த ஊர்**

***முத்தமிழால் பூர்வத்தில் கருவூரர் நாட்டில்***

***மூலமெல்லாம் வெளிதிறந்து முன்னே சொன்னேன்*** [28]

**ஞா.வெ.361**

இப்பாடலின் மூலம் திருவள்ளுவர் பிறந்த ஊர் கருவூர் என்று அறியமுடிகின்றது. திருவள்ளுவர் பிறந்து வளர்ந்து வாழ்ந்து ஞானம் எய்திய

பின்னர்கருவூரை விட்டு நீங்கி திருவரங்கம், திருப்பெருந்துறை முதலிய இடங்களிலும் அவர் தங்கினார் என்பதை, கீழ்வரும் பாடல் மூலம் அறியலாம்.

*திருப்பெருந்துறையை விட்டேன் புஸ்கரணி*

*தீர்த்தம் விட்டேன் தெய்வ நதியும் விட்டேன்*

*இருகரை நாடும் விட்டேன் மண்டபத்தடி*

*ஈசன் இருக்கும் கொடுமுடியும் விட்டேன்* [29]

**ஞா.வெ.408**

என்பதாகும்.

**திருவள்ளுவரின் பெற்றோர்**

இவரது பெற்றோரை,

*அம்புவியாலும் அநேக உயிர்களும்*

*அண்டபிண்டம் அதிலாச்சு அநேகமும்*

*தப்பில்லையே பரை அம்பிகை தன்குலம்*

*சாம்பசதாசிவன் தந்தைகாண் ஆண்டையே* [30]

**ஞா.வெ.566**

*சாந்தமாய் என்னைச் சுமந்த அன்னையர்க்கு*

*சரிரமதன் வடிவு நிறம் தங்கம் போலாம்*

*ஆய்ந்தமதி பூரணம்போல் முகமேயாகும்*

*அழகுமதி ஒளிர்வதுபோல் புருவமாகும்* [31]

**ஞா.வெ.316**

இப்பாடல்களின் மூலம் தன்னுடைய தந்தை சந்திர வம்சத்தைச் சேர்ந்தவர். பரைஅம்பிகை குலம், சாம்பசதாசிவன் என்பது தந்தையின் பெயரை மட்டும் குறிப்பிட்டுள்ளார். தாயின் பெயரைக் குறிப்பிடவில்லை. ஆனால் அவரின் தாயின் நிறத்தைத் தங்கம் போலும் என்றும், முகத்தை மதி போன்ற அழகுடையவர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

**திருவள்ளுவர் குலம்**

***சாதியிலும் எனைப் பறையன் என்றே சொல்லும்***
***சண்டாளர்க்கு இந்நூலைச் சாற்றுவேனே*** [32]

**ஞா.வெ. 58**

***அவ்வையார் குலத்தில் வந்த வள்ளுவன் என்னும்***
***ஆதி பீடமும் நான் காணும்*** [33]

**ஞா.வெ.31**

இப்பாடல்களின் மூலம் திருவள்ளுவர் பிறந்த குலம் வள்ளுவர் குலமே என்று அறியமுடிகின்றது.

**திருவள்ளுவரின் இயற்பெயர்**

திருவள்ளுவரின் இயற்பெயரை அறிய அவரின் பாடல்கள் மூலமே அறியமுடிகின்றது. அவை,

***சத்தியும் நான் காணும் சிவசிவ***
***சாம்புவ மூர்த்தியும் நான் காணும்***

*புத்தியில் அதீதவன் காண் சிவசிவ*

*புவனமதில் புகழ் திருவள்ளுவன் காண்* [34]

**ஞா.வெ. 41**

*அந்தணர்கள் வேதியர்கள் என்குலத்தை*

*அசட்டுப் பறையனெனத் தள்ளினார்காண்*

*சந்தியும் சடங்கறுத்து வள்ளுவன் என்னை*

*சாம்புமூர்த்தி என்றேதான் தொழுதார்*[35]

**ஞா.வெ.42**

இப்பாடல்களின் வழி திருவள்ளுவரின் இயற்பெயர்சாம்புவன் என்றும் சாம்புவமூர்த்தி என்றும் அறியமுடிகின்றது.

திருவள்ளுவர் கல்வியில் சிறந்து விளங்கினார்.இவரின் தந்தையின் விருப்பத்தின் படி வேதியருடைய பள்ளியில் சேர்ந்து கணிதமும், சாத்திரமும் எழுதக்கற்றுக் கொண்டார். குருகுலக் கல்வி முடித்த பின்னர்யோகம் பயின்று சகல கலைகளையும் கற்றுக் கொண்டார்இதை,

*வேதமுதல் யாவையுமே பார்த்துத் தேறி*

*வேதாந்தத் தாயருளால் வயதுஈரெட்டில்*

*சாதகமாய் யோகம் முதல் செய்தறிந்து*

*சகலகலைக்ஞான கற்பம் கொண்டேன்* [36]

கற்பம். 41

என்பதனால் அறியமுடிகின்றது.

**திருவள்ளுவரின் தொழில்**

திருவள்ளுவர் நெசவுத் தொழில் செய்தார் என்பதை,

*அறுந்தது நூல்பிணைக்கும் சிவசிவ*

*அச்செனும் பாவது கண்டமட்டும்*

*சிறந்தது நூல்பிணைக்கும் சிவசிவ*

*சித்திரச் சாம்புவன்நான் காணும்* [37]

**ஞா.வெ.33**

என்ற பாடலினால் சித்திரக் கம்பளம் நெய்வதில் திருவள்ளுவர் சிறந்தவர் என்று அறியமுடிகின்றது.

**திருவள்ளுவர் குருநாதர்**

திருவள்ளுவர் அகத்தியரிடம் உபதேசம் பெற்று மெய்ஞ்ஞானத்தையும் பெற்றார்.

*கருவுயர்ந்த வளநாடு தில்லை நதிக்*

*கரையோரம் கருதி வாழ்ந்தேன்*

*அருவுருவாய் மெஞ்ஞானம் அருளியே*

*அகத்தியர்எனக்கருள் தந்தாரே* [38]

**ஞா.வெ. 541**

இப்பாடலின் மூலம் திருவள்ளுவருக்கு அகத்தியர்மெய்ஞ்ஞானம் அருளினார் என்பது காணக்கிடக்கின்றது. அகத்தியரின் மூலம் யோகம், வாதம், வைத்தியம் முதலான பல கலைகளையும் திருவள்ளுவர் பயின்று பல நூல்களை எழுதியுள்ளார்அவை,

| | | |
|---|---|---|
| 1. | ஞானவெட்டியான் | 1500 |
| 2. | நவரத்தின சிந்தாமணி | 800 |
| 3. | நவரத்தின சிந்தாமணி சூத்திரம் | 100 |
| 4. | பஞ்சரத்தினம் | 500 |
| 5. | கற்பம் | 300 |
| 6. | குரு நூல் | 50 |
| 7. | வாத சூத்திரம் | 16 |
| 8. | முப்பு சூத்திரம் | 30 |
| 9. | முப்பு | 10 |
| 10. | நாதாந்தசாரம் | 100 |

இப்பத்து நூல்களையும் வழக்குத் தமிழிலேயே இயற்றியுள்ளார்.

*கேளப்பா ஈரடியால் வேதம் சொன்னேன்*

*கெடியாக இவ்வுலகோர் பிழைக்கவேண்டி*

*கேளப்பா பரிபாஷை ஒன்றில்லாமல்*

*கொட்டினேன் ஆயிரத்து ஐந்நூற்றினுள்ளே*

*தாளப்பா அதைக் குறுக்கி எண்ணூறு சொன்னேன்*

*தயவாக அதைக் குறுக்கி ஐந்நூறு சொன்னேன்*

*மூளப்பா அதைக் குறுக்கி முன்னூறு சொன்னேன்*

*முக்கியமாய் நாதாந்தம் நூறு சொன்னேன்* [39]

-வாத சூத்திரம் - 2

இப்பாடலின் மூலம் ஈரடியில் வேதம் சொன்னேன் என்பதிலும் பத்து நூல்களை திருவள்ளுவர் தான் இயற்றினார் என்பதையும் அறியமுடிகிறது.

ஞானவெட்டியான் முதலான பத்து நூல்களை இயற்றிய திருவள்ளுவரும் திருக்குறள் இயற்றிய திருவள்ளுவரும் ஒருவரே என்று அறிவதற்கு போகர்,

*கொண்டிட்ட வள்ளுவனார் நூலும் கண்டேன்*

*கூரான நந்தியுடை நூலும் கண்டேன்* [40]

**போகர்ஏழாயிரம் 2.994**

என்ற பாடல் வரிகள் அரணாக உள்ளன.

திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர்தான் பத்து நூல்களையும் இயற்றி இருக்க வேண்டும் என்பதனை ஞானவெட்டியானில் அமைந்துள்ள பாடல் மூலம் அறியலாம்.

*முன்னமேயான் பாடிவிட்டேன் ஆயிரத்து முன்னூறு*

*முடித்து வைத்தேன் குறளதுவாய் உலகோர்க்கு* [41]

**ஞா.வெ. 1737**

*அம்புவியில் குறள் அடியேன் பாடும் நாளில்*

*அநேகம்பேர் என்னை எதிர்த்து உரைதான் கேட்க*

*வம்புலையர்க்கு அருளவில்லை பெரியோர் கேட்டு*

*மனமகிழ்ந்து ஆண்டைஎனை வாழ்த்தினாரே* [42]

**ஞா.வெ. 1636**

ஞானவெட்டியான் பாடலில் இருந்து திருக்குறளை அரங்கேற்றம் செய்தபோது எதிர்ப்பு இருந்ததை அறியமுடிகின்றது.

**சிவவாக்கியர்**

"சிவவாக்கியம்" என்ற நூலை செய்தமையால் இவருக்குச் சிவவாக்கியர் என்ற பெயரைப் பெற்றார் என்பது இவரின் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

***அரியதோர் நமச்சிவாயம் ஆதி யந்தமா னதும்***
***ஆறிரண்டு நூறுதேவர் அன்றுரைத்த மந்திரம்***
***கரியதோர்எழுத்தை உன்னிச் சொல்லுவேன் சிவவாக்கியம்***
***தோஷ தோஷ பாவமாயை தூரதூ ஓடவே*** [43]

**சிவாவாக்கியர்காப்பு - 1**

என்ற பாடலின் மூலம் 'சிவவாக்கியம்' என்பது இவரே தம் நூலுக்கு இட்டப் பெயர்இவருக்குக் காரண பெயராக அமைந்துள்ளது. இவரின் இயற்பெயர் தெரியவில்லை. ஆனால் பதினெண் சித்தர்கள் என்ற பட்டியல்போட்டு காட்டப்பட்டுள்ள எதிலும் இவர் பெயர்இடம் பெறவில்லை. மற்ற சித்த வைத்திய நூல்களை ஆராய்ந்தவர்களும் சிவவாக்கியரின் பெயரைக் குறிப்பிடவில்லை. ஆனால் 'கரூவூரார் பலதிரட்டு என்னும் நூலில் இடம் பெற்றுள்ள பதினெண் சித்தர்கள் வணக்கப்பாடலில் 'சிவவாய சித்தர்' என்ற பெயர்இடம் பெற்றுள்ளது. அஃதாவது

***பார்த்திடவே நந்தீசர்மூலத்தீசர்***
***பண்பான அகத்தீசர்சட்டைநாதர்***
***போர்த்திடவே பதஞ்சலியும் கூனக்கண்ணர்***
***கோரக்கர்கமலமுனி சண்டிகேசர்***
***கூர்த்திடவே இடைக்காடர்சிவாயசித்தர்***

*கொங்கணவர் தந்தை போகநாதர்*

*கார்த்திடவே மச்சமுனி பிண்ணாக்கீசர்*

*காலங்கி சுந்தரும் காப்பு தானே* [44]

**கருவூரார் பலதிரட்டு - காப்புச் செய்யுள்**

என்பதாகும்.

**சிவவாக்கியர்பெற்றோர்**

இவர் தை மாதத்தில் மகம் நட்சத்திரத்தில் பிறந்தார் என்பதையும் குலத்தையும் போகர்தமது சத்த காண்டத்தில் கூறியுள்ளார்.

*வகுத்தேனே சிவ வாக்கியர்சாதி பேதம்*

*வளமான சங்கர குலம் என்னலாகும்*

*தொகுப்புடனே தலைமுறைகள் இருபதாகும்*

*தோறாமல் சாத்திரங்கள் புகன்றவாறே.* [45]

**போகர்7000 - 5704**

இப்பாடலின் மூலம் சிவவாக்கியர்சங்கர குலத்தில் பிறந்தார் என்பதைப் போகரின் பாடலினால் அறியமுடிகின்றது.

சிவவாக்கியர்தாய் தந்தை யார் என்று சரியாகத் தெரியவில்லை. ஆனால் குழந்தையாக இருந்த போதே இவரை விட்டுவிட்டுச் சென்றனர்என்றும் பிள்ளை இல்லாதவன், திருவாளன் என்னும் வேடன் அக்குழந்தையை எடுத்து வளர்த்து வந்தான் என்றும் கூறுவர். திருமழிசை என்னும் ஊரில் பிறந்ததால் 'திருமழிசையான்' என்ற பெயர்வைத்தனர்.

இதனால் திருமழிசையாழ்வார் சிவவாக்கியர்இருவரும் ஒருவரே என்ற கருத்தும் உள்ளது.

*திருந்தவே சிவவாக்கியர்தந்தை தாய்மார்*
*சிற்பரனே யவருடைய வள்ளல் கேண்மோ*
*அருந்ததிக் கொப்பான சிவவாக்கியர்தாய்தான்*
*அப்பனே யவருடைய பணிகள் கேளே*
*பணியான பணியதுவு மேதொன்றாக்கால்*
*பாலகனே சித்தருடய மரவுக்கல்லோ*
*அணி அணியா யவருடைய வுறவின்மார்கள்*
*அப்பனே பணிவிடைகள் செய்வார் பாரு* [46]
*மணியான கருவதுதான் மண்ணினாலே*
*மன்னவனே யுருச்செய்து கருக்கள் கட்டி*
*துணிவுடனே சிலைசெய்து கருக்கள் வார்த்து*
*துப்புரவாய் பனிதிமிகச் செய்வார் பாரே* [47]

**அகத்தியர்12000 பெருநூல் காவியம்.434,435**

இப்பாடலின் மூலம் சிவவாக்கியரின் தாய் தந்தை யார் என்ற தெளிவான குறிப்பு ஏதும் இல்லை. ஆனால் அவர்கள் செய்த தொழிலை மட்டும் அகத்தியர்தமது 12000 பெருநூல் காவியத்தில் குறிப்பிட்டுள்ளார்.

**சிவவாக்கியர்குரு**

சிவவாக்கியரின் பெற்றோர் கல்வியைக் கற்பிக்க தக்க குருவைத் தேடினார்கள் என்பதை

*தானான சிவவாக்கியர்நாதருக்கு*

*சதுரான ஞானமென்ற பீடந்தானும்*

*கோனான பஞ்சணத்தின் கூட்டத்தார்கள்*

*கொற்றவனார் சிவவாக்கிய நாதருக்கு*

*மானான மதியமிர்தங் கொள்வதற்கும்*

*மகத்தான கல்விநூ லறிவதற்கும்*

*தேனான குருக்கள்மார் கூட்டந்தன்னில்*

*தேற்றமுடன் குருபரனைத் தேடினாரே* [48]

**அகத்தியர்12000-437**

என்ற பாடல் வழி அறியமுடிகின்றது. “சிவவாக்கியரே கல்வியை மட்டும் அல்லாமல் தீட்சை பெறவேண்டியும் அதற்கான குருவைத் தேடினார் என்பதையும் அறியமுடிகின்றது. தனக்கான குருவைக் காசிக்குச் சென்றால் கிடைப்பார் என்று காசிக்குச் சென்றார். அங்கு ‘காசிநாதசித்தரைச்’ சந்தித்தார்.சிவவாக்கியரைச் சோதிக்க முடிவுசெய்த அச்சித்தர் இவரிடம்; பக்குவம் உள்ளதா என்பதையும் அறிய முயன்றார். அச்சோதனையில் அவர் தேறிவிட்டார். இதனால் ‘உனக்கு முத்தி சித்திக்கும் வரையில் நீ இல்லத்தில் சிலகாலம் இரு’ என்று சொல்லி அவரிடம் கொஞ்சம் மணலும் பேய்ச்சுரைக்காயும் இந்த இரண்டையும் எந்தப்பெண் சமைத்துத் தருகிறாளோ அவள்தான் உன் மனைவி என்றார் அதன்படி பல இடங்களுக்குச்சென்று பெண்களைச் சந்தித்து சமைக்கச் சொன்னார் ஆனால் அவர்களால் சமைக்கமுடியவில்லை. அதன்பின் நரிக்குறவர்கள் இருக்கும் இடத்திற்குச் சென்றார். அங்குள்ள ஒரு பெண் சிவவாக்கியரை வணங்கினாள். அவர் கையில் இருப்பதை என்ன என்று கேட்டாள். அதற்குச்

சிவவாக்கியர்நடந்ததை எல்லாம் கூறினார் மணலையும் பேய்ச்சுரைக்காயையும் சமைக்க ஒப்புக்கொண்டாள்.

உலை வைத்த அடுத்த நொடியில் மணல் அருமையான சோறாகியது. சுரைக்காய் சுவை மிகுந்த கறியானது.அவளுக்கு வியப்பு ஏற்பட்டது. உணவு தயாரானதும் சாப்பிட வாருங்கள் என்று பணிவோடு அழைத்தாள். உணவையும் நன்கு உண்டார்அந்தப் பெண்ணின் தாய் தந்தையரிடம் அவர்களின் மகளைத் திருமணம் செய்து தரவேண்டும், அவர்களும் அதற்குச் சம்மதம் தெரிவித்தனர். திருமணமும் நடந்து முடிந்தது, சிவவாக்கியர்தனது குருநாதனின் கட்டளையின் படியே திருமணம் செய்து கொண்டதில் மனநிறைவாக இருந்தார்.

*தொல் உலகில் புகழும் சிவ வாக்கியர்தாமும்*
*தோறாத வையகத்தில் வெகுநாளப்பா*
*புல்லவே சமுசார வாழ்க்கை யற்று*
*புகழான அன்பத்தோ ராண்டு மட்டும்* [49]

**போகர்சத்த காண்டம் 7000 - 5759**

இப்பாடலின் வழி சிவவாக்கியர்ஐம்பத்தொரு வயதுவரை திருமணம் செய்து கொள்ளாமல் தனியனாக இருந்தார்அதன்பின் திருமணம் செய்து கொண்டார் என்பது தெரியவருகிறது.

**சிவவாக்கியரின் காலம்**

சிவவாக்கியரின் காலம் குறித்து பல்வேறு மாறுபட்ட கருத்துக்கள் வழங்கப்படுகின்றன. கி.பி.7 ஆம் நூற்றாண்டு தொடங்கி கி.பி 10-ஆம்

நூற்றாண்டு  வரை நீள்கின்றன. தமிழகத்தில் சமயப்பூசல் உச்சத்தில் இருந்த காலத்தில் இருந்தவர் என்றும், இவரது பாடல்களில் இருசமயங்களையும் (சைவ, வைணவ) கடவுள்களைச் சமமாக கருதும் நிலையும் அமைந்துள்ளன என்றும் அறியமுடிகின்றது.

**சிவவாக்கியரின் பாடலில் உள்ள சமூகக்கருத்துக்கள்**

இவர் பாடல்களில் கடவுள் சிந்தனைகள், கோயில் மறுப்பு, மறுபிறப்பு இல்லை, சாதி மறுப்பு, தெய்வ வழிபாடு என்ற சிந்தனையிலும் பேச்சு வழக்குச் சொற்களும், வடமொழிச்சொற்களும் மிகுதியாக உள்ளன. அழகிய நடையில் எல்லோராலும் புரிந்து கொள்ளும் நடையில் பாடியுள்ளார்.

**சிவவாக்கியரைப் பூசிக்கும் முறை**

மக்களின் மேன்மைக்காக உருகிய இவரை சங்கு, தும்பைப்பூவினாலும் வில்வ இலையினாலும் அர்ச்சனை செய்யவேண்டும்.  பின் ஓம்  சிவவாக்கிய சித்தர் பெருமானே போற்றி என்று 108 முறை உச்சரிக்கவேண்டும். நிவேதனமாக பழங்களுடன், தீப ஆராதனை செய்யவேண்டும்.

**கிரக தோஷங்களைப் போக்கும் சிவவாக்கிய சித்தர்**

இவர் சந்திர கிரகத்தைப் பிரதிபலிப்பவர். ஜாதகத்தில் உள்ள சந்திரகிரக தோஷங்களை நீக்குபவர். இவரை வழிபட்டால் மனஅழுத்தம், மனச்சஞ்சலங்கள் நீங்கும் படிப்பிலும், தொழிலிலும் வரும் இடையூறுகள் அகன்றுவிடும்.இவருக்கு வெள்ளை நிற உடை அணிந்து பூசை செய்தால் நினைத்த காரியம் நிறைவேறும் என்பர்.

சிவவாக்கியர் பாடல்கள் சிவவாக்கியம் என்று தொகுக்கப் பட்டுள்ளது. சிவவாக்கியர் கும்பகோணத்தில் சித்தியடைந்தார். இன்றும் பௌர்ணமி நாட்களில் அவர் சமாதி பூஜை நடைபெற்று வருகிறது.

**பட்டினத்தார்**

பட்டினத்தாரின் இயற்பெயர்'திருவெண்காடர்' ஆவார்இவர் பெற்றோர் தந்தை சிவநேசன், தாய் ஞானகலை.

**பட்டினத்தாரின் இளமைப் பருவம்**

இளம் வயதிலே மிகுந்த சிவன் பக்தி கொண்டவராக இருந்தார். ஒரு யோகி பட்டினத்தாரிடம் ஒரு பேழையில் சிவலிங்கம், பிள்ளையார் சிலையைக் கொண்டு வந்து தந்தார். இதனால் அவருக்குச் சிவபக்தி மேலும் அதிகமாகியது. அவ்விரு சிலைகளையும் ஆகமவிதிப்படி (பூஜித்து) வழிபட்டு வந்தார்.

**பட்டினத்தாரின் திருமணம்**

பட்டினத்தாருக்குத் திருமண வயது வந்ததும் பெற்றோர் அவருக்கு ஏற்ற பெண்ணாகத் தேடினர். சிதம்பரம் செட்டியாரின் மகள் சிவகலையைப் பட்டினத்தாருக்குத் திருமணம் செய்து வைத்தனர். மனம் ஆன்மிகத்தில் இல்லாமல் இல்லற வாழ்வை நடத்திவந்தார். ஆனால் அவருக்குப் பிள்ளை இல்லாத குறை மனதை வருத்தியது.

ஒரு நாள் சிவசர்மா என்னும் ஆதிசைவர் ஒருவர் பட்டினத்தாரைச் சந்திக்க வந்தார். அவரின் கையில் அழகான ஆண்குழந்தையை

எடுத்துக்கொண்டு வந்து ஐயா இக்குழந்தையை இறைவன் மருதவாணர் கொடுத்தது.குழந்தை மருதவாணர் என் கனவில் தோன்ற என் ஆலயத்தில் வில்வமரத்தடியில் ஒரு ஆண் குழந்தை இருக்கிறது. இதை எடுத்துக் கொண்டுபோய் பட்டினத்தாரிடம் கொடுத்தால் அவர் எடைக்கு எடை தங்கம் கொடுப்பார்.உன் வறுமை தீரும் என்றார். அதனால் அந்தக் குழந்தையை எடுத்துக்கொண்டு வந்தேன் என்றுகூற அதற்கு பட்டினத்தாரும் தன் கனவிலும் இறைவன் இவ்வாறே கட்டளையிட்டார்.இக்குழந்தையின் எடைக்கு எடை தங்கம் கொடுத்தார். மருதவாணன் அருளால் கிடைத்ததால் அக் குழந்தைக்கு மருதவாணன் என்று பெயர்சூட்டினார்

**மருதவாணனின் அற்புதம்**

மருதவாணன் தந்தையின் தொழிலுக்கு மிகவும் உறுதுணையாக இருந்தான்.தொழிலுக்காக கப்பலில் பிற நாடுகளுக்குப் பயணம் மேற்கொண்டான் அங்கிருந்து ஊர்திரும்பும்போது கப்பல் நிறைய அவலும் விரட்டியையும் எடுத்துக்கொண்டு வந்தான். ஆனால் வரும்வழியில் திடீரென்று நடுக்கடலில் கடும் புயலும் மழையுமாக இருந்தது. கப்பலில் பயணம் செய்தவர்களுக்குப் பசியும் குளிரும் தாங்கமுடியவில்லை. உடனே பயணம் செய்தவர்கள் மருதவாணனிடம் இருக்கும் அவலையும், விரட்டியும் தாருங்கள் என்றார்கள். அதற்கு அவர் ஊருக்குச் சென்றவுடன் அவலையும் விரட்டியையும் திருப்பித் தருகிறோம் என்று எழுதிக்கொடுங்கள் நான் தருகிறேன் என்றார். அதற்குப் பயணிகள் சம்மதித்து எழுதிக்கொடுத்தார்கள். மருதவாணனும் அவர்களுக்கு விரட்டியையும் அவலையும் கொடுத்தார்.

**பட்டினத்தார் ஞானம் பெற்றமை**

மருதவாணர் வீட்டிற்குப் போனதும் தந்தையிடம் நடந்ததையெல்லாம் கூறி கையில் மீதமிருந்த மூன்று விரட்டியையும் தன்னிடம் கடன் வாங்கியோர் எழுதிக்கொடுத்த ஓலையையும் தந்து வீட்டின் உள்ளே சென்றார்.

பட்டினத்தாருக்கு ஒன்றும் புரியவில்லை. வாணிபம் செய்ய போனால் அங்கு உள்ள விலையுயர்ந்த பொருட்களை வாங்காமல் விரட்டியையும் அவலையும் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறானே என்று பட்டினத்தார் சிந்தித்தார். உடனே மகன் தன் கையில் கொடுத்த விரட்டியைத் தூக்கியெறிந்தார் அதிலிருந்து பொன்னும் மணியும் சிதறிக் கண்ணைப் பறித்தன. அதன்பின் தான் தன் மகன் எவ்வளவு புத்திசாலி என்று எண்ணினார்.

மருதவாணன் தன் தாயிடம் ஒரு பெட்டியைக் கொடுத்து அம்மா இதனைத் தந்தையிடம் கொடுத்துவிடுங்கள் என்றான்.

“நீயே உன் தந்தையிடம் கொடு” என்றாள் தாய்.அதற்கு மருதவாணன் இதனுள் இருப்பது அகப்பொருள். அகத்துக்கு உரியவர் தான் கொடுக்கவேண்டும் என்று கூறினான்.அவள் மருதவாணன் கொடுத்த பெட்டியைப் பட்டினத்தாரிடம் கொடுத்தாள்.மருதவாணன் எங்கே என்று பட்டினத்தார் கேட்டார்அதற்கு வீட்டினுள்ளே இருக்கிறான் என்றாள். உடனே பட்டினத்தார் வீட்டினுள் சென்று பார்த்தார், எங்கும் அவன் இல்லை. அப்படியென்றால் அந்தப் பெட்டியைப் திறந்து பாருங்கள்

என்றாள். அதில் ‘காதில்லாத ஊசியும் ஒரு ஓலைத்துணுக்கும் இருந்தன.ஓலை துணுக்கில் காதற்ற ஊசியும் வாராது காணும் கடை வழிக்கே’ என்று எழுதியிருந்தது. அதைக்கண்ட பட்டினத்தார் அதன் பொருளை உணர்ந்து ஞானம் என்ற தீ அவரைப் பற்றிக்கொண்டது.

பட்டினத்தார் சொத்துக்கள் எதுவும் நிரந்தரம் அல்ல, காதில்லாத ஊசி கூட கடைசியில் வராது என்று தெளிவுபடுத்திய மருதவாணனின் சொல்லைக் கேட்டு ஞானம் பெற்றார்.

**பட்டினத்தாரின் தவ வாழ்க்கை**

பட்டினத்தார் துறவு கோலம் பூண்டது அவரின் சகோதரிக்குப் பிடிக்கவில்லை. இதனால் சூழ்ச்சியால் அவரை அழிக்க முடிவு செய்தார். ஆனால் முடியவில்லை.மன்னிப்பு கேட்டாள்; இதனால் அந்த ஊரில் இருந்து ‘திருவாரூர்’ சென்றார்அங்குப் பல அற்புதங்களைச் செய்தார். திருமணமான இளைஞன் திடீரென இறந்துபோக அவனைப் பிழைக்க வைக்க மனமுருகி ஒரு பாடல் பாடியதும் அவன் தூங்கி எழுந்ததுபோல் எழுந்தான்.பின் அங்கிருந்து ‘பேரையூர்’ என்னும் இடத்திற்குச் சென்றார். பின் அங்கிருந்து தவ வாழ்க்கையை உஜ்ஜயினி எனும் நகரத்திற்குச் சென்று பிள்ளையார் கோவிலில் தியானத்தில் அமர்ந்தார்.

**பட்டினத்தாரின் சீடனாக மாறிய மன்னர்பத்திரகிரியார்**

பத்திரகிரியாரின் அரண்மனையில் கொள்ளையடித்த கொள்ளையன் கொள்ளையில் ஒரு பங்கை பிள்ளையார் கோயிலில் உள்ள உண்டியலில் போடுவதாக தூக்கி எறிந்த தங்கப் பதக்கம் தியானத்தில் இருந்த

பட்டினத்தாரின் கழுத்தில் வீழ்ந்தது. வீழ்ந்தது கூட தெரியாமல் தியானம் நிலையில் இருந்தார் பட்டினத்தார்.அப்போது திருடர்களைத் தேடிவந்த காவலாளி பட்டினத்தாரின் கழுத்தில் உள்ள தங்கப் பதக்கத்தைப் பார்த்ததும் அவர்தான் திருடன் என்று முடிவு செய்து மன்னர்பத்திரகிரியாரிடம் அழைத்துச் சென்றனர்.

மன்னர்ஏதும் விசாரிக்காமல் அவர்தான் கொள்ளையடித்தவர் என்று கழுவில் ஏற்றுங்கள் என்றார்.கழுவில் ஏற்றும் நேரத்தில் ‘என் செயலாவது ஒன்றும் இல்லை’ என்று பாட கழுமரம் தானே தீப்பற்றி எறிந்து சாம்பலானது.

பத்திரகிரியார் பட்டினத்தார் ஓர் மகா சித்தர் என்று உணர்ந்து அவர் காலில் விழுந்து வணங்கினார்.பட்டினத்தார் அவரைக் கரம் பிடித்து தூக்க அவருக்குள் உடலில் மின்சாரம் பாய்ந்த உணர்வு ஏற்பட்டு அடுத்த நொடியில் உலக மாயையே வாழ்க்கை என்பதை உணர்ந்து தானும் துறவறம் பூண்டு உங்களுடன் வந்துவிடுகிறேன் என்றார். அதற்குப் பட்டினத்தார் முதலில் திருவிடைமருதூர் செல்லுங்கள் என்றார்.பிற திருத்தலங்களுக்கும் சென்று தரிசனம் செய்து விட்டு பத்திரகிரியார் திருவிடைமருதூரை அடைந்தார்.

**போகர்**

போகர்சித்தர்களில் முதன்மையானவராகக் கருதப்படுகிறார்.சீன நாட்டிற்குச் சென்றவர் என்றும், இவருக்கு போ - யாங், போகரிஷி, போக

மகரிஷி, சித்தர் போகநாதர் என்றும் பல்வேறு பெயர்களைக் கொண்டவராகக் கருதப்படுகிறார்.

**போகரின் குருநாதர்**

*சித்தான சிதுமுனி போகநாதன்*

*சிறந்த பதினெண்பேரில் உயர்ந்த சீலன்*

*கத்தனென்னும் காலாங்கி நாதர் சீடன்*

*கனமான சீனபதிக் குகந்த பாலன்*

*முத்தான அதிசயங்கள் யாவற்றுந்தான்*

*மூதுலகில் கண்டறிந்த முதல்வன் சித்தன்*

*நித்தமுமே மாசிலாக் கடவுள் தன்னை*

*நீணிலத்தில் மறவாத போகர்தானே* [50]

**அகத்தியர்12000**

இப்பாடலின் மூலம் இவரின் குரு காலங்கி நாதர் என்பதையும் இவருக்குச் சீடனாக போகர்விளங்கினார் என்பதையும் அறியமுடிகிறது.

**போகரின் சீடர்கள்**

போகர்சீன தேசத்துக்குச் செல்வதற்கு முன்பு கொங்கணர், கருவூரார், இடைக்காடர், சட்டைமுனி, போன்ற சீடர்கள் இருந்தனர்என்றும் சீன தேசத்திலிருந்து திரும்பி வந்த போது ‘புலிப்பாணி’ மட்டுமே சீடராக இருந்தார் என்பதையும் அறியப்படுகின்றது.

**நவநாத சித்தர்களைச் சந்தித்தார்**

போகர்நவநாத சித்தர்களைச் சந்தித்து இறந்தவர்களைப் பிழைக்க வைக்கும் சஞ்சீவினி மந்திர வித்தையைக் கற்றுத் தருமாறு கேட்டார். அதற்கு நவநாத சித்தர்கள் இறந்து போனவர்கள் அவரவர் செய்த பாவபுண்ணியங்களுக்குத் தக்க படி மறுபடியும் பிறப்பார்கள்.அவர்களுக்காக வருந்தாமல்போகர்உலக மக்களின் நலவாழ்விற்காக பாடுபட்டதற்குப் பலன் இது தான் என்றால் இங்கேயே இறந்து விடுவதாகக் கூறினார்.இதனால் நவநாத சித்தர்கள் போகர்இறந்து போனால் பொதுமக்களுக்கு மட்டுமல்ல சித்தர்களுக்கும் உலகத்திற்கும் பேரிழப்பு.அதனால் தகுதி உள்ளவர்களுக்குக் காயகல்ப முறையைச் சொல்லிச் கொடுக்க போகருக்குக் காயகல்ப முறையை அருளினார்.

**போகரின் பிறப்பு**

போகரின் பிறப்பு பற்றியும் அவரின் சாதி பற்றியும் பல்வேறு மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. அவரின் பாடல்களின் மூலமும் மற்ற சித்தர்களின் பாடல்கள் மூலமும் அறியப்படுகின்றன.

*உரைத்தோமே எந்தனிட சாதிமார்க்கம்*
*உத்தமனே விஸ்வகர்மன் என்னலாகும்*
*திரைத்ததொரு எத்தனது தலைமுறை தானப்பா*
*திரளான பதினெட்டுத் தலைமுறையேயாகும்* [51]

**போகர்7000**

இப்பாடலில் போகர்விஸ்வகர்ம குலத்தில் ஐந்து பிரிவுகளில் ஒருபிரிவில் பிறந்ததாகவும் பொற்கொல்லர் குலத்தில் பிறந்தவர் என்றும், கருவூரார் சித்தர் தமது பாடலில் விளக்கியுள்ளார்.

*பாரப்பா போகநாதர் பண்புள மட்குலாலர்*

*நேரப்பா ஜெனித்து யிந்த நீணிலமதனி லேதான்* [52]

**அமுதகலைஞானம் 1200**

இப்பாடலின் மூலம் போகர்'குயவர்' என்ற குலத்தைச் சார்ந்தவர் என்று அறியமுடிகின்றது.

சித்தர்கள் சாதி சமய வரையறைக்குள் அடங்காதவர்கள் இதில் பல முரண்பாடுகள் இருப்பதற்குக் காரணம் சித்தர்கள் கூடு விட்டு கூடு பாய்ந்து வெவ்வேறு உடலில் புகுந்து (பிரவேசித்து) வாழும் பழக்கம் உடையவர்களாக இருந்தனர்என்று கருவூரர்ச் சித்தர் கூறுகின்றார்.

*பிரியமுடன் பரகாயப் பிரவே சந்தான்*

*பெரியோருஞ் சித்தாக்களுஞ் செய்து கொள்வார்*

*உரியடி கூடுவிட்டுக் கூடுபாய்தல்*

*உலகத்தில் சித்தருக்கு வழக்கமாமே* [53]

இப்பாடலின் மூலம் சித்தர்கள் கூடுவிட்டுக் கூடு பாயும் வித்தையை அறிந்தவர்கள் என்று அறியமுடிகின்றது.

**போகர்தவ நிலை**

போகர்பழனி மலையில் தவத்தை மேற்கொண்டார்.அதன் பயனாக முருகப் பெருமான் அவர் முன் தோன்றி காட்சி அளித்தார்.போகரிடம்

முருகப்பெருமான் தன்னை மூலவராக வடிவமைத்துச் சிலையைச் செய்து, (பிரதிஷ்டை) செய்து உன்னைப் போன்று அனைவரும் வணங்கிப் பயன் அடைய வேண்டும் என்றார். (நவபாஷாண சிலை) ஒன்பது விதமான கூட்டுப்பொருட்கள் அடங்கிய சிலை.பாஷாணம் என்றால் விஷம், நவம் என்றால் ஒன்பது, அதாவது 1008 விஷங்களைக் கட்டி ஒன்பதாக ஆக்கப்பட்டதுதான் நவபாஷாணம்.

'விஷத்துக்கு விஷமே முறிவு' 'முள்ளை முள்ளால் எடு' என்பதன் பழமொழிபடி பாம்பு கொத்திவிட்டால் பாம்பில் இருந்து எடுக்கப்பட்ட விஷத்தைத் தான் செலுத்தி ஆற்றுப்படுத்துவார்கள். அதே போல் இந்த நவபாஷாண சிலையில் பஞ்ச அமிர்தங்களாகிய வாழைப்பழம், நெய், கற்கண்டு, பேரிச்சம்பழம், தேன் இவ்வைந்தையும் சேர்த்துக் கட்டிய திரவத்தை அபிஷேகம் செய்து வரும் அபிஷேகப் பஞ்சாமிர்தம் நோய் நீக்கக் கூடிய தன்மை பெறுகிறது. இச்சிலை கல்போல் காட்சி அளித்தாலும் நகம் பதித்தால் அதில் பதியும் சுரண்டி எடுக்கும் தன்மையதாக இருக்கும் ஒரு முறை நகத்தால் எடுக்கப்பட்ட பாஷாண பகுதி பல லட்சம் பேர்களுக்கு ஒரு மருந்தாகப் பயன்படும்.

போகர்பழனி ஆண்டவர் தண்டாயுதபாணியின் மூன்று பாஷாண சிலைகள் செய்தார்அதில் ஒன்று இப்போது பழனியில் இருக்கிறது.பீடத்தில் மற்ற இரண்டு சிலைகளும் போகரின் சமாதியில் உள்ளது.தற்போது இருக்கும் சிலை சிதிலம் அடைந்து வருகிறது.

**போகரின் பிறதலங்கள்**

பழனி, திருக்கழுக்குன்றம், கதிர்காமம், பரங்கிப்பேட்டை, பாபாஜிகுகைகள், அல்மோரா மாவட்டம், இமயமலை, பத்ரிநாராயணனுக்கருகில் நந்தாதேவி மலையில் இருக்கும் கௌரிசங்கர்பீடம் ஆகியவை இவரது சிறப்புபெற்ற தலங்கள் ஆகும்.

**போகரின் ஜீவசமாதி**

பழனியில் சிலகாலம் தங்கியிருந்த போகர்அங்கேயே சமாதி அடைந்தார் அவரது சமாதி பழனி ஆண்டவர் ஆலயத்தின் உட்பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் உள்ளது. போகர்பூசித்து வந்த புவனேசுவரி அம்மையின் திருவுருவம் பழனியாண்டவர் சந்நிதியில் இன்றும் உள்ளது.போகரின் சமாதி அமைந்துள்ள இடத்திற்கும் புவனேசுவரி அம்மன் சந்நிதிக்கும் இடையே ஒரு சுரங்கப்பாதை இருப்பதாகக் கூறப்படுகிறது.

போகரின் வரலாற்றுச் செய்திகள் மாறுபட்ட தகவலைத் தந்தாலும் அவற்றில் உண்மைகளும் கட்டுக்கதைகளும், இரண்டும் கலந்துள்ளது.இதில் உண்மையை மட்டும் அறிய முடியாமல் கட்டுக் கதைகளுடன் அமைந்துள்ளன.

**பத்திரகிரியார்**

“பத்திரகிரியார் அரசர்குலத்தில் தோன்றியவர்.இவர் அறநெறி தவறாது ஆட்சி செய்து வந்த இவரது அரசாட்சியில் ஒரு நாள் அரண்மனையில் உள்ள விலையுயர்ந்த தங்க ஆபரணங்களைக் கொள்ளை அடித்துச் சென்றனர்.

**திருடர்களின் செயல்**

அரண்மனையில் களவாட செல்வதற்கு முன்பு திருடர்களில் ஒருவர் அந்த நகர்ப்புறத்தில் வீற்றிருந்த விநாயகக்கடவுள் சந்நிதியை அடைந்து கடவுளே இன்றிரவு அரசர்மாளிகையில் களவாட செல்லஉள்ளேன்.திருவருள் செய்ய வேண்டும் என்று வேண்டிக்கொண்டு.அரண்மனையில் இருந்து பல தங்க ஆபரணங்களைக் களவாடிச் சென்றனர்.இதன் பயனாக திருவருள் புரிந்த விநாயகக் கடவுளுக்கு ஒரு தங்க ஆபரணத்தை எடுத்து ஆலயவெளியில் இருந்து கடவுளின் கழுத்திற்கு வீசிச் சென்றனர்.இரவு என்பதால் விநாயகர்கழுத்தில் விழாமல் அங்கு தியானத்தில் அமர்ந்து இருந்த பட்டினத்தார் சித்தர் கழுத்தில் வீழ்ந்ததும் தெரியாமல் தியானத்தில் இருந்தார்.

**பத்திரகிரியாரின் தவம்**

பத்திரகிரியாருக்கு விடிந்ததும்தான் அரண்மனையில் களவுபோன செய்தியை அறிந்தார். பணியாளர்களை அழைத்துத் தேடும்படி கட்டளையிட்டார் அதன்படி அனைத்து இடங்களுக்கும் சென்று தேடினார்கள்; எங்கும் இல்லை.அதன்பின் நகர்ப்புறத்தில் அமைந்துள்ள விநாயகர்ஆலயத்தில் தேடினர்.திருடர்கள் யாரும் அகப்படவில்லை. ஆனால், அங்கு தியானத்தில் அமர்ந்துள்ள பட்டினத்தார் கழுத்தில் அரசனின் மாலையைக் கண்டவுடன் இவரை அரசன் முன்னிலையில் நிறுத்தினார்கள். பத்திரகிரியார் தீர விசாரிக்காமல் பட்டினத்தாரைக் கழுவேற்றுமாறு கட்டளையிட்டார்பணியாளரும் அவ்வாறே செய்ய முற்பட்டனர். பட்டினத்தார் ‘என்செய லாவதுதொன்று மில்லை’ என்னும் திருப்பாசுரத்தைப்

பாடினார்உடனே கழுமரம் தீப்பற்றி எரியுண்டு சாம்பலாயின. இதனை அறிந்த அரசர்பட்டினத்தாரின் திருவடிக் கமலங்களில் அடியற்ற பனைபோல் விழுந்து தங்குற்றத்தை மன்னித்தருளும்படி வேண்டினார்காலில் விழுந்தவுடன் உலகஞானத்தை அனைத்தையும் அறிந்து அரசப்பதவியை விட்டு துறவு மேற்கொள்ள ஞானத்தை அருளுக, சீடனாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றார்பட்டினத்தார் அவ்வாறே ஏற்றுக் கொண்டார்

**பட்டினத்தாரின் கட்டளை**

பட்டினத்தார் பத்திரகிரியாரை நோக்கி சிவதலங்களுக்கு யாத்திரைக்குச் செல்லஉள்ளேன். 'திருவிடை மருதூருக்குச் செல்க' என்று கட்டளையிட்டு யாத்திரையைத் தொடர்ந்தார்.

**குருவிற்குப் பணிகள் செய்த மன்னர்**

"பத்திரகிரியார் குருவின் ஆணைப்படி திருவிடை மருதூரை அடைந்தார் பட்டினத்தாரும் யாத்திரையை முடித்து. திருவிடைமருதூரை அடைந்தார்பத்திரகிரியார் தினமும் அங்குள்ள வீடுகளில் உணவைப் பிச்சையாக ஏற்று குருவிற்கு அளித்துவிட்டு மீதம் உள்ளதை, தாம் உண்டு வந்தார் பத்திரகிரியார் உணவு உட்கொள்ளும் போது ஒரு பெட்டைநாய் பசியால் வாலைக் குழைத்துக் கொண்டு வந்தது அதற்குச் சிறிது உணவு அளித்தார்அதை உண்ட நாய் அவரை விட்டுப் பிரியாமல் அவரிடமே தங்கிவிட்டது.

மருதவாணர் சிவனடியார் வடிவத்தில் பட்டினத்தாரிடம் ஐயா பசியால் வருந்துகிறேன் அன்னமிடும் என்று கேட்டேன், அதற்கு மேலைக் கோபுர

வாயிலில் ஒரு குடும்பஸ்தன் இருக்கிறான்.அவன் உனக்கு உணவு வழங்குவான். அவ்வாறே மேலைக் கோபுரத்திற்குச் சென்று பத்திரகிரியாரிடம் கீழைக் கோபுர வாயிலில் ஒருவரிருக்கின்றார் அவரை என் பசிக்கு அன்னமிடுமாறு கேட்டேன் அவர் தான் மேலைக் கோபுர வாயிலில் ஒரு குடும்பஸ்தன் இருக்கின்றான், அங்கே செல்க என்றார்அவர் சொல்படியே யான் வந்தேன். இதைக் கேட்ட பத்திரகிரியார் பிச்சை யேற்கும் இந்த வோடும், எச்சில் தின்னும் இந்த நாயும் என்னைக் குடும்பஸ்தன் ஆக்கிவிட்டதா என்று கையில் இருந்த ஓட்டை எறிந்தார் அது நாயின் தலையில் பட்டு ஓடும் உடைந்தது நாயும் மாண்டது மருதவாணரும் மறைந்தார்.

**பத்திரகிரியாரின் முக்தி நிலை**

மாண்ட நாய் ஞானி எச்சிலுண்ட விசேடத்தால் காசிமகாராஜனுக்கு பெண்ணாய்ப் பிறந்து. தம் மகவிற்கு ஞானவல்லி என்று பெயர்வைத்து அழைத்து வந்தார். ஞானவல்லிக்குத் திருமணப்பருவமும் வந்தது. அரசன் ஞானவல்லியின் அறிவுக்கும் குணத்திற்கும் ஏற்ற ஒரு நாயகனைத் தேடினான்.அப்போது ஞானவல்லி 'ஐயனே யான் யாருடைய வாழ்க்கைக்கும் உரியவளல்லள். திருவிடைமருதூரிலே மேலக் கோபுர வாயிலிலே எழுந்தருளியுள்ள தவசிரேஷ்டருக்கே உரியவள்' என்று கூறினாள்.மன்னன் பெண்ணின் மன உறுதியைக் கண்டு தெளிந்து, அவள் விரும்பியவாறே அவளைத் திருவிடைமருதூருக்கு அழைத்துச் சென்றான். அங்கே ஞானவல்லி பத்திரகிரியாரைக் கண்டு வணங்கி, 'அடிநாய் மீண்டுந் திருவடி நாடி வந்தது' என்றாள். பத்திரகிரியார் அவளது பக்குவ நிலையை

அறிந்து, அவளது கையைப் பற்றிக்கொண்டு சென்று, கீழைக் கோபுரவாயிலில் வீற்றிருந்தருளுந் தமது ஞானகுருவின் முன் நிறுத்தி, ‘சுவாமி தேவரீர் எச்சிலுண்ட நாயினுக்கு இவ்விழிபிறவி யெய்தலாமோ’ என்று விண்ணப்பித்தார்பட்டினத்தடிகள் ‘எல்லாம் சிவன் செயல்’ என்று திருவருளைத் தியானஞ் செய்ய, ஆண்டு ஒரு பெருஞ் சோதி தோன்றிற்று. அதில் பத்திரகிரியார் ஞானவல்லியுடன் புகுந்து இரண்டறக் கலந்தார்.”

**அகத்தியர்**

அகத்தியர்பதினெண் சித்தர்களுள் தலைச்சிறந்தவராக விளங்கியவர். இவர் பாடல்களின் மூலம் சித்தர்கள் எவ்வாறு இருக்க வேண்டும் என்ற கருத்தைப் பின் பற்றி வரும் பாடல் :

***மதியொடுங்கி வளர்கின்ற சூட்சந் தன்னை***
***வணக்கமுடன் தானிருந்து வணங்கினாக்கால்***
***பதிதலத்தில் எட்டிரண்டும் ஒன்றாய்க் கூடி***
***பத்தான தசவாய்வு அகாரபீடம்***
***விதிஎழுத்தை யார் அறிந்து கூடப்போறார்***
***விமலனே புலத்தியனே அந்தம் பாரு***
***கதிமுகத்தில் காயசித்திக்கு அடுத்தவாறு***
***கண்டு கண்டு கொண்டவனே சித்தனாமே*** [54]

**-அகத்தியர்அமுத கலைக்ஞானம், 416**

என்னும் பாடலின் மூலம் சித்தர்கள் மெய்ஞ்ஞான குருவிடம் உபதேசம் பெற்று, தவம் செய்து ஊன் உடம்புக்குள்ளே உறுபொருளைக் காண்பவர்கள் சித்தர்கள் என்ற கருத்தை அகத்தியரின் பாடலின் மூலம் அறிய முடிகின்றது.

**அகத்தியரின் வேறு பெயர்கள்**

அகத்தியருக்கு 'அகத்தியர்' என்ற பெயர்மட்டும் இல்லாமல் பல பெயர்கள் வழக்கில் உள்ளன அப்பெயர்களை விளக்கும் விதமாக இவர் பாடல்களின் மூலமே அதை அறியமுடிகின்றன அவற்றிற்கான சான்று பாடல்கள் பின்வருமாறு:

பொதிகைமுனி, அகத்தீசர், தெட்சிணாமூர்த்தி முனி, கும்பமுனி, கும்பமூர்த்தி ஆகிள பெயர்கள் வழக்கில் உள்ளதாக தமது நூலிலே விளக்கியுள்ளார் அவை,

*பதிவான பொதிகைமுனி அகத்தீசர்என்றும்*

*புத்தியுள்ள தெட்சிணாமூர்த்தி என்றும்*

*போதமிக உண்டாகும் பூரணமே பாரே* [55]

**-அகத்தியர்அமுத கலைக்ஞானம், 1068**

*பாங்குபெற அவர்களிடம் சென்றேன் அப்போ*

*பரமான அகத்தீசர்வா என்றார்கள்* [56]

**- அகத்தியர்அமுத கலைக்ஞானம், 210**

கூறுவது அகத்தீசன் என்று கூறு

*கும்பமுனி தஞ்சமெனக் குறித்து நில்லே* [57]

**-அகத்தியர்அமுத கலைக்ஞானம், 379**

இப்பாடல்கள் மூலம் இவருக்குப் பல பெயர்கள் இருந்தன என்பதை அறியமுடிகிறது. இப்பெயருக்காண காரணம்,

ஆதியிலே மேருபூசை செய்ததால் ‘பொதிகைமுனி’ என்ற பெயர்பெற்றார்.

அதன் பின் ஓராண்டுக்காலம் மேருவின் அமிர்தம் கொண்டதால் ‘அகத்தியன்’ என்ற பெயர்பெற்றார்.

கயிலையை அடைந்து கற்பம் கொண்டு முத்தி நிலை எய்தியதாலும் கும்பத்தில் பாய்ந்ததாலும் கும்பமுனி என்ற பெயரைப் பெற்றார் என்பதை,

*கேளப்பா ஆதியிலே மேருபூசை*

*கெணிதமுடன் செய்ததினால் பொதிகை முனியானேன்*

*நாளப்பா ஆண்டொன்றில் அகத்தியனுமானேன்*

*நலமான மேரினுட அமிர்தம் கொண்டேன்*

*காலப்பா விசையறிந்து கயிலை தன்னில் சென்றே*

*கலங்காமல் காயாதி கற்பம் கொண்டேன்*

*ஆளப்பா அதினாலே கும்பமுனி யானேன்*

*அரகரா மேரினுட ஆண்மைதானே* [58]

**-அகத்தியர்அமுத கலைக்ஞானம், 1151**

என்ற பாடல் வழி அறியமுடிகிறது.

**அகத்தியரின் குருநாதர்கள்**

அகத்தியரின் குருநாதர்கள் யார் என்பதையும் அவரின் பாடல்களின் மூலமே அறியமுடிகிறது. அவை,

*ஆதிகுரு வேதியர்தன் பாதம் போற்றி* [59]

**-வாத சௌமியம் -5**

ஆதியில் வேதியராக இருந்த வசிட்ட முனிவரிடம் இருந்து அனைத்துவித உபதேசத்தைப் பெற்றார்பின்னர்பதஞ்சலி முனிவரிடம் சென்றார் அதற்கான சான்று,

*தாகமதாய்ப் பதஞ்சலியைச் சென்னி மீதில்*

*தான் வைத்து ……………… [60]*

**-பரிபாஷைத்திரட்டு - 5:1**

என்பதாகும்.

*காணவே கண்டு தெளிந்திடு மாறாக்*

*கருணைமொழி என்குருவாம் குமரவேளும் [61]*

**- பரிபாஷைத்திரட்டு - 5:99**

இப்பாடலின் மூலம் ஞானஉபதேசம் செய்து அனைத்தையும் தெளிவுப்படுத்தியவர் முருகவேள் என்பது புலப்படுகிறது.

*எந்தனுக்கு உபதேசங்கள் இயம்பினார் ஈசந்தானே [62]*

**-பரிபாஷைத்திரட்டு - 300, 4:1**

இதனால் ஈசனிடமும் ஞான உபதேசங்களையும் பெற்றதாக அகத்தியர் கூறியுள்ளார்.

**அகத்தியரின்சீடர்கள்**

அகத்தியரிடம் ஓராயிரத்திற்கும், மேற் பட்ட சீடர்கள் உபதேசம் பெற்றதாகவும் அவர்களுள் நாற்பத்தெட்டு சீடர்கள் சிறந்து விளங்கினர்என்பதையும் போகர்ஏழாயிரம் என்ற நூலால் அறியமுடிகின்றது.

*பானான தலைமுறைகள் ஏதென்றக்கால்*

*பதமுடனே நாற்பத் தெட்டேயாகும்* [63]

**- போகர்ஏழாயிரம், 6: 703**

என்ற பாடலின் மூலம் நாற்பத்தெட்டு சீடர்கள் தலைசிறந்தனர்என்பதும்,

*சென்றிட்ட நந்திகளில் புலஸ்திய ரென்றும்*

*செயமான காசிபர், மார்க்கண்ட னோடும்*

*அன்றிட்ட அட்டாங்க ரிஷிதான் ஒன்று*

*அழகான கௌதமரும் கலைக்கோட் டாரும்*

*வென்றிட்ட சாதனந்த ரிஷியும் கூட*

*விதமான எழுவர்களும் நந்திகளே யானார்*

*நன்றிட்ட அகத்தியரோடு எட்டுபேரும்*

*நலமான கைலாச வர்க்கம் தானே* [64]

**போகர்ஜெனனசாகரம், 91**

என்ற பாடல் வழி அகத்திய முனிவருக்கு சீடர்கள் பலர் இருந்தனர்என்பதும் அறியமுடிகின்றது.

**அகத்தியாரின் பிறப்பு**

அகத்தியரைப் பற்றியும் அவரின் வயதைப் பற்றியும்,

*பிறந்தாரே இன்னுமொரு மார்க்கம் சொல்வேன்*

*பேரான புலிப்பாணி மைந்தா பாரு*

*சிறந்ததொரு அகத்தீசர்உதித்தநேர்மை*

*சிறப்பான தனுர்மாதம் என்னலாகும்*

*துறந்ததொரு ஆயில்யம் மூன்றாம் பாதம்*

*துப்புரவாய்ப் பிறந்த நாளுமாச்சு*

*கறந்ததொரு பால்பசுவும் கன்றுமாகி*

*காசினியில் பிறந்ததொரு சித்துமாச்சே* [65]

**-போகர்ஏழாயிரம் 6:889**

என்ற போகரின் பாடலால் அறியமுடிகின்றது.

**சித்த வைத்தியத்தில் அகத்தியர்**

அகத்தியர்சித்த வைத்திய பணியில் சிறந்தவர்.பல நோய்களுக்கும் மருத்துவ சந்தேகங்களுக்கும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தெளிவான விளக்கம் கொடுத்துள்ளார். அகத்தியரின் 'சமரசநிலை ஞானம்' என்னும் நூலில் உடம்பில் உள்ள முக்கியமான நரம்பு முடிச்சுகள் பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளன.மற்றும் அகத்தியரின் ஐந்து சாத்திரங்கள் என்னும் நூலில் பதினெட்டுவகையான மனநோய் பற்றியும் அதற்குரிய மருத்துவம் பற்றியும் விளக்கமாக்கூறப்பட்டுள்ளது அகத்தியரின் அட்டமாகித்தியில் குழந்தைகளுக்கு ஏற்படும்தோசங்களையும்அதைநீக்கும்வழியையும்கூறியுள்ளர்.

அகத்தியர்வகுத்த தமிழ்முறை யாகிய சித்தமருத்துவத்தை அகத்தியர்மருத்துவ முறை என்று கூறுவர். தமிழ் மருத்துவ நூல்களை அதிகமாக உருவாக்கியவர் அகத்தியர்ஆவார்

**பிறதுறைகளில் அகத்தியர்**

அகத்தியர்மருத்துவத் துறையில் மட்டுமல்லாமல் நாடி, சோதிடம், யோகம், ஞானம், இரவாதம், மாந்தரிகம், பட்சிசாத்திரம், நிட்டை முதலிய பல துறைகளைச் சார்ந்த நூல்களை இயற்றியுள்ளார். அகத்தியர்பெயரில் 190 க்கும் மேற்பட்ட நூல்கள் வழங்கி வருகின்றன..அகத்தியர்ஞானம் என்ற ஒரு நூலைத் தவிர மற்றவை எல்லாம் மருத்துவம் பற்றி அமைந்துள்ளன.

**அச்சில் வெளிவந்த அகத்தியர்நூல்கள்**

சித்தர்கள் சுமார் 48 நாற்பத்தியெட்டு இலட்சம் பாடல்களை வடமொழியாகிய கிரந்தத்தில் பாடி வைத்தார்கள்.அதில் அகத்தியரும் வடமொழியில்தான் பல பாடல்களை இயற்றியுள்ளார்.பின் இறைவனே தென் திசைக்குச் சென்று அழகு தமிழில் இயற்றுமாறு கூறியதாக இவரின் பாடல்களின் மூலம் சான்று கிடைக்கின்றது.

***வரமதால் வகாரயோக***
***மறைப்புநூல் பாட்டை எல்லாம்***
***முருகு அவிழ் தமிழால் செய்ய***
***முருகன் ஐங்கரத்தாள் காப்பே*** [66]

**-அகத்தியரின் பரிபாசை திரட்டு**

***சொல்லக்கேள் சௌமிய சாகரத்தை மைந்தா***
***சுகமான வடமொழியைத் தமிழால் செய்தேன்*** [67]

**- அகத்தியர்வாத சௌமியம் 14**

வடமொழியாகிய கிரந்தத்தில் மறைப்பாக தாம் பாடிய நூல்கள் எல்லாம் வழக்கு தமிழிலேயே பாடுமாறு இறைவன் ஆணையிட்டதாக அகத்தியர்கூறியுள்ளார்.

**உலகம் நடுவு நில்லாது சரிந்தது**

*நடுவு நில்லாது இவ்வுலகம் சரிந்து*
*கெடுகின்றது எம்பெருமான் என்ன ஈசன்*
*நடுவுள அங்கி அகத்திய நீபோய்*
*முடுகிய வையத்து முன்னிரு என்றானே* [68]

*அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்*
*அங்கி உதயஞ்செய் மேல்பால் அவனொடு*
*மங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி*
*எங்கும் வளங்கொள் இலங்கொளி தானே* [69]

**திருமந்திரம் (337,338)**

உலகம் நடுவு நில்லாது சரிந்தது என்ற உண்மையை ஞானியர்சிலர் இறைவனிடம் சென்று முறையிட்டனர். அதற்கு இறைவன் ஞான ஜோதியாகிய அகத்தியரை அழைத்துச் சரிந்து விட்ட தமிழ் நாட்டிற்குச் சென்று முன்னிற்குமாறு, அங்கு பழனி மலையில் உறையும் முருகவேளின் துணைகொண்டு எங்கும் ஞானச் சுடர்பரப்புமாறு ஆணையிட்டார்என்பதைத் திருமந்திர பாடல்கள் தெளிவாக உணர்த்துகின்றன. இந்த உண்மையை வைத்துப் புராணநூல் ஆசிரியர்கள் தம் கற்பனைத்திறத்தால், கயிலையங்கிரியில் சிவபெருமானுக்கும் பார்வதிக்கும் திருமணம்

நடைப்பெற்றதாகவும் அப்போது முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெட்டாயிரம் ரிஷிகளும், கின்னரர், கிம்புருடர், பூதங்கள், பூதகணங்கள் ஆகியோர் அங்குக் குழுமினர்என்றும் அதனால் பாரம் தாங்காது பூமி சரிந்து வடதிசை தாழ்ந்து விட்டதென்றும் அதைக் கண்ட சிவபெருமான் அகத்தியரை அழைத்து நீ தென்திசைக்குப் போய் நின்றால் உலகம் நிமிர்ந்து சரியாகி விடும் என்று மொழிந்ததாகவும் கதையுண்டு.

**அகத்தியரின் காலம்**

அகத்தியரின் காலம் கி.பி.பத்தாம் நூற்றாண்டுக்குப் பின் வாழ்ந்தவர் என்று அறியமுடிகின்றது. இவர் பாடல்கள் பொது மக்கள் பேசும் எளிய நடையினால் அமைந்துள்ளன. நடையின் போக்கு பழமையானதாக இல்லை கலப்புத்தமிழிலேயே நடை அமைந்துள்ளது.

அகத்தியருக்கு வழங்கப்படும் வேறு பெயர்களும் இவரின் குருநாதர்கள் மற்றும் சீடர்கள் பற்றிய விளக்கமும் சித்த வைத்தியத்தில் மட்டும் அல்லாமல் பிற துறைகளில் சிறந்து விளங்கிய நிலை அச்சில் வெளியான இவருடைய நூல்களிலும் அச்சில் வெளிவராத சுவடிகளிலும் இருக்கும் நூல்கள் இவரின் காலத்தைப் பற்றியும் உரைக்கப்பட்டுள்ளன.

**கருவூரார்**

கருவூரார் என்றால் கருவில் உறாத மறு பிறப்பு இல்லாதவர் என்னும் பொருளில் சாகா வரம் பெற்றவர். இவர் என்றும் வாழ்பவர் என்று பொருள்படும்.இவருக்கு ஈசனே ஜீவன் முக்தியை அளித்துள்ளார்.இவர்

சோழ நாட்டில் கருவூரில் பிறந்தவர்.கருவூரார் இளம் வயதிலேயே ஞான நூல்களைக் கற்றார்.

*அற்பமென்ற தேகமது வாழ்க்கை தன்னை*

*அக்கணமே தான் வெறுத்து மதியம்பூண்டு*

*விற்பனன்போற் சொற் சொரூப மிகவுண்டாகி*

*விண்ணுலகில் கருவூரார் சித்தானாரே* [70]

**- அகத்தியர் பன்னிரெண்டாயிரம் 454**

இப்பாடலின் மூலம் பல சித்துக்களைப் புரியும் ஞானவானாக உயர்ந்தார் சித்தராய் காட்சியளித்தார் என்பதை அறியமுடிகின்றது.

**கருவூராரின் குலத்தொழில்**

கருவூரார் பெற்றோர் கோயில்களுக்கு விக்கிரங்கள் செய்து கொடுக்கும் தொழிலைச் செய்து வந்தனர். சான்று

*துணிந்துமே சிலைக்கருவு செய்யவென்று*

*துப்புரவாய்க் குடிகளிட மார்க்கம் சென்று*

*மணியான மணியுடனே குடவன் தானும்*

*மன்னவனே நவலோகம் ஒன்றாய்ச் சேர்த்து*

*அணியான கருவுதனி லமைத்துமே தான்*

*அப்பனே பிரதமைக ளுருவு செய்து*

*தணியான கருவுதனை விற்றுவுண்டு*

*சதாகாலஞ் சீவனங்கள் செய்திட்டாரே*

*இட்டாரே கருவூரார் தந்தை தாய்மார்*

*எழில் பெரிய தேவதாஸ்தானங்கள் தேடி* [71]

**அகத்தியர்12000 - 452**

இப்பாடலின் மூலம் கருவூராரின் தாய் தந்தையும் ஊர் ஊராகச் சென்று அங்குள்ள கோயில்களுக்கு விக்கிரகங்ளைச் செய்து கொடுத்து வாழ்ந்து வந்தனர்.அதாவது செம்பு பித்தளை உலோகங்களைக் கொண்டு தொழில் செய்பவர்கள் என்பதும் தெரிய வருகிறது.

கருவூரார் பல திருத்தலங்களுக்குச் சென்று தங்கத்தில் சிவலிங்கத்தைச் செய்து பக்தி பாடல் பாடி வழிப்பட்டார் என்பதும் தெரியவருகிறது.

**கருவூராரின் குருநாதர்**

போகர்திருவாவடுதுறைக்கு வந்தபோது கருவூரார் அவரைச் சென்று வணங்கித் தம்மை சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள் என்றார்அவ்வாறே அவரை ஏற்று உபதேசித்தார்இதனால் பல சித்துக்களை அறியும் ஞான நிலை அடைந்தார் போகரின் பிரதான சீடராக கருவூரார் சித்தர் திகழ்ந்தார்.

**கருவூரார் செய்த சிலை**

சோழ மன்னனின் இரணிய வர்மன் தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டுப் பலப் புண்ணிய தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்துவிட்டு தில்லையை அடைந்தார் அங்குள்ள சிற்றம்பல திருக்குளமான சிவகங்கை தீர்த்தத்தில் நீராடும் போது தண்ணீருக்குள் ஓங்காரம் நாதம் ஒலித்தது. அரசர் மீண்டும் நீரில் மூழ்கி எழும்போது ஓங்காரம் நாதம் கேட்டது. மற்றும் ஆடல் வல்லரின் அற்புத நடனத்தையும் கண்டு வியப்பில் ஆழ்ந்தார்.

அவர் கண்ட காட்சியை ஓவியமாக வரைந்து இந்த வடிவத்தை உலகில் உள்ள அனைவரும் காண தூய சொக்க தங்கத்தில் செய்ய முடிவெடுத்தார் தமிழகத்தில் உள்ள தலைசிறந்த சிற்பிகளை வரவழைத்து அந்த ஓவியத்தைக் காட்டி நாற்பத்தெட்டு நாட்களுக்குள் பொற்சிலையை உருவாக்குமாறு சிற்பிகளுக்கு மன்னர்கட்டளையிட்டார்அவர் கட்டளையில் எந்த உலோகத்தையும் சொக்கத்தங்கத்தோடு சேர்க்காமல் செய்து முடிக்க வேண்டும் என்றார்.

சிற்பிகள் என்ன முயன்றும் விக்கிரகத்தை முடிக்க இயலவில்லை.ஏதேனும் ஒரு வகையில் (விக்கிரகத்தில்) சிலையில் குறைவு ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. மன்னர்கொடுத்த நாட்களில் ஒரு நாள் மட்டுமே இருந்தது. தில்லையில் நடராஜர்திருவுருவம் அமைக்கச் சிற்பிகள் கஷ்டப்படுகிறார்கள் என்பதை அறிந்த போகர்இவரின் சீடரான கருவூராரை அழைத்து, கருவூரார் அந்த விக்கிரம் செய்ய வேண்டிய வழிமுறைகளை நான் உனக்குச் சொல்லித் தருகிறேன். நீ போய் செய்து முடி என்றார்அவ்வாறே கருவூராரும் தில்லையை வந்து அடைந்து சிற்பிகள் இருக்கும் இடத்திற்கு வந்தார் கருவூராரைப் பார்த்த சிற்பிகள் தங்களால் முடியாதபோது அவரால் எப்படி முடியும் என்றுரைக்க தன்னால் முடியும் என்றும் அதுவும் ஒருமணி நேரம் போதும் என்றும் விக்கிரகம் செய்யும் அறைக்குள் சென்றார். விக்கிரகம் செய்து முடித்தார்.அம்பலக் கூத்தனின் அழகுத் திருவடிவை அனைவரும் கண்டனர்.அவர்களுக்குச் சிற்ப சாஸ்திர நுணுக்கங்களைக் கூறி விட்டுச் சென்றார்.

மன்னர்வந்து சிலையைக் கண்டு அழகில் மயங்கினார் சிற்பிகளை மனம் திறந்து பாராட்டினார். சிற்பிகளுக்கு, தக்க சன்மானம் தரவேண்டும் என்றார். அதற்கு அமைச்சர் அவர்கள் செய்த சிலையின் தங்கத்தை சோதித்த பிறகே அவர்களுக்குப் பரிசு வழங்க வேண்டும் என்றார்.மன்னரும் சிலை செய்தபோது சிந்திய தங்கத்துகள்களை எடுத்துக் கொண்டு வருமாறு கட்டளையிட்டார்.

அவ்வாறே சிற்பிகளும் தங்கத்துகள்களை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தனர். அதைச் சோதித்த மன்னரின் முகம் கடுமையாக மாறியது சுத்த தங்கத்தில் சிலையைச் செய்யவில்லை என்றார்.

அப்போதுதான் சிற்பிகள் நாங்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் சிலையைச் செய்ய முடியவில்லை ஒரு சித்தர் சிலையைச் செய்து முடித்தார் என்றுகூற, மன்னர்அவரைச் சிறையில் தள்ளுங்கள் நாளை தண்டனை வழங்குகிறேன் என்று கூறி சிலையை எடுத்துக் கொண்டு மன்னர் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தார். அன்று இரவு அரண்மனைக்குப் போகரும் அவரது சீடர்களும் தங்க மூட்டையுடன் நின்று கொண்டு இருந்தனர். மன்னர்போகரை வணங்கினார்

போகர்சிறையில் அடைத்த சித்தர் தன்னுடைய மாணவன் அவன் தவறு செய்யவில்லை என்றார்.

போகர், மன்னா சுத்த பொன்னில் திருவுருவைச் செய்ய முடியாது.தான், தான் செம்பைக் கலக்கச் சொன்னதாகவும், அதற்குக் காரணமும் இருக்கிறது. சுத்த தங்கத்தால் சிலையைச் செய்து வைத்தால் அதிலிருந்து கிளம்பும் ஒலி

வீற்றிருந்தாள்(1)பட்டின.நா.வரி-162:1

மூட்டுவிப்பானும்(1)பட்டின.நா.வரி-54:2

மூட்டுவேன்(1)பட்டின.நா.வரி-154:4

வேட்டையாடி(1)பட்டின.நா.வரி-21:1

அருகிருக்க(1)பட்டின.நா.வரி-175:1

**வினை + பெயர்**

ஒரு வினைச்சொல்லும் அதற்கு அடுத்து ஒரு பெயர்ச்சொல்லும் சேர்ந்து ஒரு சொல்லாகி ஒரு பொருளை உணர்த்துகின்றது.

நட்டகுழி(1)பட்டின.நா.வரி-190:1

படுகுழியில்அகத் - (ஞா-4.5.2)

அருள்கை(1)பட்டின.ஐந்.வரி.பா-18:3

அருள்வாய்(3)பட்டின.இர.வரி- 229:2,236:2,302:2

அருவாய் (1)பட்டின.இர.வரி- 246:2

அருநரகில்அகத்- (ஞா-5.13.3)

சித்தர்பாடல்களில் மொழி நோக்கு என்னும் இவ்வியல் சொல்லடைவு அடிப்படையாகக் கொண்டு அதில் இடம்பெற்ற சொற்களை இலக்கண முறைப்படி ஆராய்கிறது. எனவே இவ்வாய்வு சொல்லின் இலக்கணம், அதன் வகைப்பாடுகள், சொல்லாக்கங்கள் ஆகியவற்றை ஆராய்கின்ற முறையில் அமைந்துள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. நன்னூல், ப.121
2. தொல்காப்பியம் , ப.237
3. நன்னூல், ப.152
4. மேற்படி, ப.164
5. தொல்காப்பியம் , ப.251
6. நன்னூல், ப.168
7. மேற்படி, ப.154
8. தொல்காப்பியம் , ப.271

## இலக்கியநோக்கு

இலக்கை உடையது இலக்கியம் ஆகும். (இலக்கு+ இயம்=இலக்கியம்) இலக்கியத்தால் சொல்லப்படும் கருத்துகளும் அக்கருத்துகளை வெளிப்படுத்தும் சித்தர்களின்உத்திகளும்இலக்கியநோக்குஎன்னும்இயலின்மூலம்அறியலாம்

**யாப்பு**

செய்யுள் இலக்கணம் கூறும் இலக்கணப் பகுதியினை யாப்பு என்பர். பொதுவாக யாப்பிலக்கணம்,செய்யுளை வகைப்படுத்தும்செய்யுளில் உள்ள அக உறுப்புகளை விளக்கி அவற்றிடையே உள்ள தொடர்பினையும் விளக்கிக் கூறும்; செய்யுளில் அமைந்துள்ள ஒலிநயங்களைப் பற்றிப் பேசும்;செய்யுளில் சொற்கள் முறைமாறி அமைந்திருந்தால் பொருள், நோக்கில் அவற்றை எப்படி அமைத்துப்பொருள், கொள்ளவேண்டும் என்பதை விளக்குவது யாப்பாகும்.

சித்தர் பாடல்களில் பல்வேறு வகையான யாப்புகளைக்கொண்டுபாடல்கள் அமைந்துள்ளன. அவை,

1. **நேரிசை வெண்பா**
2. **பின்முகு நேரிசை வெண்பா**
3. **நேரிசையாசிரியப்பா**
4. **நிலைமண்டில ஆசிரியப்பா**
5. **தரவு கொச்சகக் கலிப்பா**
6. **அறுசீர் விருத்தம்**
7. **சந்தக் கட்டளைக் கலிப்பா**

**8. எண்சீர் விருத்தம்**

**9. கலிவிருத்தம்**

**10. கட்டளைக் கலித்துறை**

**11. அறுசீர்ச் சந்த விருத்தம்**

**12. சந்தக் கலித்துறை**

**13. சிந்துக் கண்ணிகள்**

**14. வண்ணப்பா**

எனப் பதினான்கு வகையாப்புகளில் பாடல்கள் அமைந்துள்ளன.

**கட்டளைக் கலித்துறை**

கட்டளைக் கலித்துறைகள் தமிழிலக்கியவுலகில் ஈடும் எடுப்பும் இல்லாதனவாகத் திகழ்கின்றன.ஒழுகிய ஓசையும் விழுமிய நடையும் அமைந்த கட்டளைக் கலித்துறைகளுக்கு சித்தர்களின் பாடல்கள் தலை சிறந்த சான்றாகும்.அழகிய கட்டளைக் கலித்துறையில் பாடலை இயற்றியுள்ளனர்.

இவர்கள் பாடல்களில் எண்சீர் விருத்தம், அறுசீர் விருத்தம், கலிவிருத்தம், அறுசீர் சந்த விருத்தம், எண்சீர் சந்த விருத்தம், சந்தக் கலித்துறை ஆகிய யாப்புகளில் ஒவ்வொரு பாடல்களாக அமைந்துள்ளன.

**நடை :**

**தெரிந்த மொழியால் செவ்விதின் கிளந்து**

**தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்**

**புலன்என மொழிப் புலன் உணர்ந் தோரே[1]**

**(தொல், செய், 239)**

எல்லார்க்கும் விளங்கும் எளிய நடையில் பாடுவது "புலன்" என்னும் வனப்பு என்ற தொல்காப்பிய இலக்கணத்துக்குச் சித்தர் பாடல்கள் பாடல்களை இலக்கியமாகக் கூறலாம்.

**வண்ணப்பா**

இசைத் தமிழில் உள்ள தாளமுடைய பாடல்கள் நான்கு வகைப்படும். அவை சந்தம், வண்ணம், சிந்து, உருப்படி என்பன. இவை நான்கிற்கும், இயற்றமிழ்ப்பாக்களுக்கு யாப்பிலக்கணங்களில்கூறப்பட்ட யாப்பிலக்கணங்கள் பொருந்தாதுஅவை அனைத்தும்இசைப்பாடல்கள் வண்ணப்பாடல்கள் என்பது பரிபாடலில் உள்ள முடுகியல் என்ற உறுப்பே வண்ணம். இதை அராகம் என்றும் தேவாரத்தில் பல அமைப்பில் திருவிராகங்களைப்பாடியுள்ளனர்.

எனினும் இவை அனைத்தும் நான்கு அடிப்பாடல்கள் இவற்றில் தொங்கல் என்னும் உறுப்பு இல்லை. ஆனால் தமிழிலக்கிய வரலாற்றில் தொங்கல் என்னும் உறுப்பமைத்து முதன் முதலாக வண்ணம் பாடியவர் பட்டினத்தார். பட்டினத்தார் உடல் கூற்றின் வரலாற்றைக் கருவில் உருவானது முதல் காட்டில் எரியூட்டுவது வரையில் இனிய முறையில் பாடலை அமைத்து இடையிடையே வரும் தொங்கல் என்னும் உறுப்புகளைக் கொண்டு பாடியுள்ளார்.

**தொடைநயம் :**

**மோனை, எதுகை, முரணே, இயைபு என**

**நால் நெறி மரபின், தொடை வகை என்ப[2]**

**(தொல்.பொரு.1339)**

அடி இரண்டு தொடுத்து வருவதால் தொடை என்னும் பெயரைப் பெற்றது. செய்யுளில் பல அடிகளிலும் பல சீர்களிலும் எழுத்துக்கள் ஒன்றிவரத் தொகுப்பது தொடை எனப்படும். இவை மோனைத்தொடை, எதுகைத்தொடை, முரண்தொடை, இறைபுத்தொடை, அளபெடைத்தொடை, அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை என எட்டு வகைப்படும்.

**மோனைத்தொடை :**

**அடிதொறும் தலை எழுத்து ஒப்பது மோனை[3]**

**(தொல்.பொரு.1343)**

முதற்சீரில் வந்து, முதல் எழுத்தே அடுத்து வருஞ்சீர்களுள் ஒன்றுனுள்ளேனும், பலவற்றினுள்ளேனும் வந்து தொடுப்பது மோனைத்தொடையாகும்.

**எதுகைத்தொடை :**

**அஃது ஒழித்து ஒன்றின் எதுகை ஆகும்[4]**

**(தொல்.பொரு.1344)**

அடிதோறும் முதலெழுத்தெல்லாம் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது "எதுகைத்தொடையாம்" கொங்கணச் சித்தர் பாடலில் எதுகை நயம் காணப்படுகின்றது.

**முரண்தொடை :**

**மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே[5]**

**(தொல்.பொரு.1346)**

முரண் என்றால் மாறுபாடு.பாட்டின் அடிகளில் சொற்கள் முரணாக வருவது எதிர் எதிர் சொல்லாக அமைந்து வருவதாம். சொல் முரண் என்றும் பொருள் என்றும், அது இருவகைப்படும்.

**இயைபுத் தொடை :**

**இறுவாய் ஒப்பின் அஃது இயைபென மொழிப[6]**

**(தொல்.பொரு.1347)**

செய்யுளில் அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், சொல்லானும் ஒன்றிவரத் தொடுப்பது “இயைபுத் தொடையாகும்”.

**அளபெடைத் தொடை :**

செய்யுளில் அளபெடை அமைந்து வருவது அளபெடைத் தொடை எனப்படும்.

**அளபு எழின் அவையே அளபெடைத் தொடையே[7]**

**(தொல்.பொரு.1348)**

**அந்தாதித் தொடை :**

பாடலுள் அடிதோறும் இறுதியில் வந்த ஓரெழுத்தோ, ஓரசையோ, ஒருசீரோ, அல்லது அடிமுழுவதுமோ அடுத்த அடிக்கு முதலாக நின்று, தொடுக்கப்படும் தொடைக்கு “அந்தாதித்தொடை” என்று பெயர்.

**இரட்டைத்தொடை :**

**நிரல் நிறுத்து அமைத்தலும் இரட்டை யாப்பும்**
**மொழிந்தவற்று இயலான் முற்றும் என்ப[8]**

**(தொல்.பொரு.1342)**

பாடலுள் ஓரடி முழுவதும் முதலில் வந்த சொல்லே அடுத்து எல்லா விடங்களிலும் வரத் தொடுப்பது இரட்டைத்தொடையாகும்.

**செந்தொடை :**

**சொல்லிய தொடையொடு வேறுபட்டு இயலின்**
**சொல்இயல் புலவர் அது செந்தொடை என்ப[9]**

**(தொல்.பொரு.1351)**

எதுகைத் தொடை, மோனைத் தொடையின்றி வரும் பாட்டு ‘செந்தொடை’ எனப்படும்.

**அடுக்குத்தொடர் :**

ஒரு சொல்லைப் பலமுறை அடுக்கிக் கூறுதல் விரைவு, வெகுளி, உவகை, அச்சம், துன்பம், வற்புறுத்தல் முதலிய காரணங்களால் அமையும்.இது கூறியது கூறல் என்னும் குற்றமாகாது. அப்படி அடுக்கும் போது இரண்டு முறை நான்கு முறை வரை ஒரு சொல் அடுக்கிக் கூறப்படும்.

ஒரு சொல்லே மேலும் மேலும் அடுக்கி வருதல் அடுக்குத்தொடர் எனப்படும்.இஃது அசைநிலை, விரைவு, வெகுளி, உவகை, அச்சம், அவலம் முதலிய பொருள்களாலும், செய்யுளில் அசைநிலையாகவும், இசை நிறையாகவும் சொற்கள் அடுக்கி வரும்.

**அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல்**
**இரண்டு மூன்று நான்கு எல்லைமுறை அடுக்கும்[10]**

**(நன்னூல், சூத்திரம்.395)**

**நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்ற**
**அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப**[11]

**தொல். 1193**

| | | |
|---|---|---|
| **நகை** | **–** | **புன்முறுவல்** |
| **அழுகை** | **-** | **அவலம்** |
| **இளிவரல்** | **-** | **இழிவு** |
| **மருட்கை** | **-** | **வியப்பு** |
| **அச்சம்** | **-** | **அஞ்சுதல், பயம்** |
| **பெருமிதம்** | **-** | **மிடுக்கு** |
| **வெகுளி** | **-** | **சினம்** |
| **உவகை** | **-** | **மகிழ்ச்சி** |
| **விரைவு** | **-** | **வேகம்** |

**அணிநயம்**

கற்போர்க்கு இன்பம் பயக்கும் முறையில் கருத்துக்களைச் செய்யுளில் அழகுபடுத்திக் கூறுவது அணி எனப்படும். இவ்வணிகள் பல வகைப்படும். சித்தர்களின் பாடலில் பயின்று வந்துள்ள அணிகளை இங்குக் காணலாம். அவையாவன :

**சொற்பொருள் பின்வருநிலையணி**

ஒரு செய்யுளில் முன்னர் வந்த ஒரு சொல்லே பின்னரும் பல இடங்களில் வந்து முன்னர் உணர்த்திய பொருளையே உணர்த்துமாயின் அது சொற்பொருள் பின்வருநிலையணி ஆகும்.

**உவமை அணி**

பண்பு, தொழில், பயன் என்ற காரணங்களால் ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவது உவமையணியாகும்.

அறியாத ஒரு பொருளை உணர்த்த அதைப் போன்ற மற்றொரு பொருளைச் சுட்டி, அது போன்றது இது என்று விளக்கிக் காட்டிச் சொல்லும் பொருள் உவமையாகும்.

**வினை பயன் மெய் உரு என்ற நான்கே**

**வகை பெற வந்த உவமத் தோற்றம்**[12]

தொழில் (வினை) பயன்பாடு “பயன்” வடிவம் “மெய்” நிறம் “உரு” என நான்கன் காரணமாக ஒரு பொருளை அதன் தன்மைக் கொண்ட மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவதற்கு உவமையணி என்று பெயர்.

**எடுத்துக்காட்டு உவமையணி**

ஒரு பொருளை அதன் தன்மைக்கொண்ட மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறும்போது இடையே உவம உருபு இல்லாமல் கருத்துக்களை மட்டும் எடுத்துக்கூறி ஒப்பிட்டுக் கூறுவது எடுத்துக்காட்டு உவமையணி எனப்படும்.

**உருவக அணி**

உவமைப்பொருளையும், உவமிக்கப்படும் பொருளையும் வேறுபாடு ஒழித்து ஒன்றோ எனும் உள்ளுணர்வு தோன்ற ஒற்றுமை படக் கூறுவது உருவக அணி ஆகும்.

**வேற்றுப் பொருள் வைப்பணி**

ஒரு பொருளை உலகம் அறிந்த பொதுப் பொருளின் துணைக் கொண்டு விளக்குவதற்கு வேற்றுப் பொருள் வைப்பணி யாகும்.

**தன்மையணி**

ஒருபொருளின் தன்மையை மிகைப்டுத்தியும், உயர்வாகவும் கூறாமல் உள்ளதை உள்ளவாறு அழுகுபடக் கூறுவது தன்மையணி என்று பெயர். இதை தன்மை நவிற்சி அணி என்று கூறுவர்.

**உயர்வு நவிற்சி அணி**

ஒன்றை எடுத்துக் கூறும் பொழுது உள்ளதை உள்ளவாறு கூறாமல் கேட்போர் மகிழும் வண்ணம் அழகுபடப் பன்மடங்கு உயர்வாய் பெருக்கிக் கூறுவது உயர்வுநவிற்சி அணி எனப்படும்.

இத்தகு இலயக்கிய நயங்கள் சித்தர் பாடல்களில் அமைந்துள்ள திறமாவன :

**திருமூலர் 1**

**தொடை:**

**மோனைத்தொடை:**

***அடியாகி அண்டரண்டத் தப்பால் ஆகி***

***அகாரமெனு மெழுத்ததுவே பாதமாகி***

***முடியாகி நடுவாகி மூலந் தன்னில்***

***முப்பொருளுந் தானாகி முதலுமாகிப்***

***படியாய்முப் பாழ்ற்றுப் படிக்கு மப்பாற்***

***படிகடந்து பரஞ்சோதிப் பதியு மாகி***

*அடியாகு மூலமதே அகார மாகி*

*அவணவளாய் நின்றநிலை யறிவ தாமே*

**திருமூலர் 1**

**எதுகைத்தொடை :**

*ஆசானு மீசானு மொன்றே யாகும்*

*அவனவளு மொன்றாகும் அதுதா னாகும்*

*பேசாத மந்திரமு மீதுவே யாகும்*

*பேரொளியின் வடிவாகும் பேரு மாகும்*

*நேசாருங் கலைகளெலாந் தானே யாகும்*

*நிலையான ஓங்கார பீட மாகும்*

*ஈசானை ஆசானாய்க் காணும் பேர்க்கிகு*

*கின்பமுடன் கயிலாச மெய்த லாமே*

**திருமூலர் 6**

**முரண் :**

*அறிந்ததுவும் அகாரமெனும் பாதந் தன்னை*

*அடிமுடி யென்று அனுதினமும் அறிந்து நோக்கே*

**திருமூலர் 4 - 3**

திருமூலர் சித்தர் பாடல்களில் மோனைத் தொடை, எதுகைத்தொடை, முரண் அமைந்துள்ளது.

கொங்கணர்

**தொடைநயம் :**

**எதுகைத்தொடை :**

கொங்கணச் சித்தர் பாடலில் எதுகை நயம் காணப்படுகின்றது.

*சித்தர்களில் போற்றிய வாலைப் பொண்ணாமந்த*
*சத்தியின் மேற்கும்மிப் பாட்டுரைக்கத்*
*தத்தமி தோமென ஆடுஞ் சரஸ்வதி*
*பத்தினி பொற்பதங் காண்பாமே*

*கொங்கணர். 3*

*எங்கும் நிறைந்தவன் வாலைப்ட பெண்ணாம்மாலின்*
*தங்கையின் மேற்கும்மி பாடுதற்குச்*
*கங்கை யணி சிசம்புவாகு சற்குரு*
*பங்கயப் பொற்பதங் காப்பாமே*

*கொங்கணர்.4*

*தில்லையில் முல்லையில் லெல்லையுளலாடிய*
*வல்லவள் வாலைப்பெண் மீதினிலே*
*சல்லபக் கும்மித் தமிழ் பாடவரும்*
*தொல்லை வினை போக்கும் வாலைப்பெண்னே*

*கொங்கணர்.8*

*அறிக்கும் முந்தின தவ்வெழுத்தாம்இ பின்னும்*
*அறிக்குள் நின்றதும் அஞ்செழுத்தாம்*
*அறிக்கும் முந்தின தஞ்செழுத்தாம் வாசி*
*பறிக்குள் நின்றது மஞ்செழுத்தாம்*

*கொங்கணர். 12*

*பண்டு முளைப்பதரிசியே யானாலும்*
*விண்டும் போனால் விளையாதென்று*
*கண்டு கொண்டு முன்னே அவ்வை சொன்னாளது*
*வுண்டோ வில்லையோ வாலைப்பெண்ணே*

*கொங்கணர்.71*

என்னும் பாடல்களில் எதுகை நயத்தைக் காணலாம்

**மோனைத்தொடை :**

முதற்சீரில் வந்து முதல் எழுத்தே அடுத்து வருஞ்சீர்களுள் ஒன்றுனுள்ளேனும் பலவற்றினுள்ளேனும் வந்து தொடுப்பது மோனைத்தொடையாகும்.

***காணாது கிட்டாதே எட்டாதே அஞ்சில்***
***காரிய மில்லையென்றே நினைத்தால்***
***காணாதுங் காணரா மஞ் செழுத் தாலதில்***
***காரிய முண்டு தியானஞ் செய்தால்***

***கொங்கணர். 17***

***ஆணும் பெண்ணும் கூடி யானத னாற்பிள்ளை***
***ஆச்சுதென் றேநீரும் பேசுகின்றீர்***
***ஆணும் பெண்ணும் கூடியானதால்லோ பேதம்***
***அற்றொரு வித்தாச்சு வாலைப்பெண்ணே***

***கொங்கணர். 77***

என்னும் பாடல்களில் மோனை நயத்தைக் காணலாம்

**முரண்தொடை :**

முரண் என்றால் மாறுபாடு.பாட்டின் அடிகளில் சொற்கள் முரணாக வருவது எதிர் எதிர் சொல்லாக அமைந்து வருவதாம். சொல் முரண் என்றும் பொருள் என்றும், அது இருவகைப்படும்

***மாதாபிதா கூட இல்லாமலே வெளி***
***மண்ணும் விண்ணுமுண்டு பண்ணவென்று***
***பேதைப் பெண்ணாமுதல் வாலைப் பொண்ணாளென்று***
***புகுந்தாளிப் புவியடக்கம்***

***கொங்கணர். 9***

*பூத்த மலராலே பிஞ்சு முண்டே அதில்*
*பூவில்லாப் பிஞ்சும் அனேகமுண்டு*
*மூத்த மகனாலே வாழ்வுண்டு மற்ற*
*மூன்று பேராலே அழிவுண்டு*

*கொங்கணர். 45*

*கையில்லாக் குட்டையான் கட்டிக்கிட்டானிரு*
*காலில்லா நெடையன் முட்டிக்கிட்டான்*
*ஈயில்லாத தேனெடுத்து துண்டு விட்டானது*
*இனிக்குதில்லை யேவாலைப் பெண்ணே*

*கொங்கணர். 48*

*ஆணும் பெண் ணும்கூடி யானத னாற்பிள்ளை*
*ஆச்சுதென் றேநீரும் பேசுகின்றீர்*
*ஆணும் பெண்ணும் கூடியாதல்லோ பேதம்*
*அற்றொரு வித்தாச்சு வாலைப்பெண்ணே*

*கொங்கணர்.77*

என்னும் பாடல்களில் முரண்தொடை நயத்தைக் காணலாம்.

**சொல்லட்சித் திறன்**

கொங்கணச் சித்தர் பாடலில் சொல்லாட்சித் திறன் மிகவும் சிறப்பாகப் பயின்று வந்துள்ளன.

*அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சியரே நிதம்*

*கொஞ்சி விளையாடும் வஞ்சியாரே*

*நெஞ்சிலே ருத்திரன் சூழிருப்பானவன்*

*நேருடனாமடி வாலைப்பெண்ணே*

*கொங்கணர். 34*

*ஆலத்திலே யிந்த ஞாலத்திலே வருங்*
*காலத்திலே யனுகூலத்திலே*
*மூலத்திலே பிரமன் தானிருந்து வாசி*
*முடிக்கிறான் பிணடம் பிடிக்கிறானே*

*கொங்கணர்.36*

*கத்தி பெரிதோ உறைபெரிதோ இவள்*
*கண்ணு பெரிதோ முகம் பெரிதோ*
*சக்தி பெரிதோ சிவம் பெரிதோ ந்தான்*
*சந்றே சொல்லடி வாலைப்பெண்ணே*

*கொங்கணர். 68*

இப்பாடல்களில் அஞ்சிலே, பிஞ்சிலே, நெஞ்சிலே, ஆலத்திலே, ஞானத்திலே, மூலத்திலே, கத்திபெரிதோ, உறைபெரிதோ, கண்ணுபெரிதோ, முகப்பெரிதோ, முதலிய சொற்கள் பாடல்களை இனிமையுடையதாகவும் அழகுப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன.

**திருவள்ளுவர்**

**யாப்பு**

திருவள்ளுவர் ஞானப் பாடல்களை யாப்புகளில் அமைத்துள்ளார்.

1.எண்சீர் விருத்தம்

2. கட்டளைக் கலித்துறை

3. தரவு கொச்சம் நேரிசை வெண்பா என்னும் யாப்புகளில் அமைந்துள்ளது.

**தொடை :**

எதுகைத்தொடை, மோனைத்தொடை, முரண், இயைபு, ஆகியவை தொடையாகும்.

**எதுகைத்தொடை :**

***அம்புவி தன்னிலேயுதித்த தாய்ந்தறி படைத்தன்னை***
***வம்புலகத் தாரவசிய மாய்க்கைப் பிடித்தேபிரிந்து***
***கும்பி தனிலேயுழன்றும் அக்குண்டலி பொற்கமலம்***
***நம்பியிருந்தேன் சிலநாள் ரகசியங்கள் காணகிலேனே***

**திருவள்ளுவர் – 3**

***வையமதி லேயுதிகு மாண்பர்களே யுங்களுயிர்***
***மெய்யென் நிருந்தசைவு வெளிப்படு தென்னவிதம்***
***அய்யமில்லா வாழ்த்துலகில் ஆண்மையாயப் பூண்டமதிப்***
***பொய்யெனுமிவ் வாழ்கையது போகுஞ்சரு காடுளதே***

**திருவள்ளுவர் - 5**

திருவள்ளுவர் ஞானப் பாடல்கள் முழுமையும் எதுகைத் தொடையில் அமைந்துள்ளது.

**மோனைத்தொடை :**

வேத மறைஞான மெய்யுணர்வு தானாகில்
நாதனரு ளால்பதவி நாடுமே வேதமறை
நாலுய பொருளுள் நற்பொருளின் ஆறறியப்
பாலுமது நெய்யெனவும் பார்

**திருவள்ளுவர் – 13**

இப்பாடல்களில் மோனைத்தொடை பயின்றுவந்துள்ளது.

**இயைபு :**

**அண்டம் பின்டம் நிறைந்துநின்ற அயன்மால் போற்றி**
**அகண்டபரி பூரணத்தின் அருளே போற்றி**
**மண்டலஞ்சுழ் இரவிமதி சுடரே போற்றி**
**மதுரதமி ழோதும் அகத்தியனே போற்றி**
**எண்டிசையும் புகழுமென்றன் குருவே போற்றி**
**இடைகலையின் சுழுமுனையின் கமலம் போற்றி**
**குண்டலிக்குள் அமர்ந்துநின்ற குனனே போற்றி**
**குருமுனியின் தாளிணையெப் போதும் போற்றி**

**திருவள்ளுவர் – 1**

“போற்றி” என்னும் சொல் அடிதோறும் இயைபு அமைந்துள்ளது.

**முரண் :**

**நல்வினையும் தீவினையும் – 14**

முரண் அமைந்துள்ளது.

சிவவாக்கியர்

**தொடை :**

**மோனைத் தொடை :**

முதற்சீரில் வந்த முதல் எழுத்தே அடுத்து வருஞ் சீர்களுள் ஒன்றனுள்ளேனும், பலவற்றினுள்ளேனும் வந்து தொடுப்பது மோனைத்தொடை

**ஆனஅஞ்சு எழுத்துளே ஆண்டமும் அகண்டமும்**
**ஆனஅஞ்சு எழுத்துளே ஆதியான மூவரும்**
**ஆனஅஞ்சு எழுத்துளே அகாரமும் மகாரமும்**

**ஆனஅஞ்சு எழுத்துளே அடங்கலாவது உற்றதே**

**சிவவாக்கியர். 2**

இப்பாடலில் அடிமோனையும் சீர்மோனையும் அமைந்துள்ளன.

**ஓடிஓடி ஓடிஓடி உள்கலந்த சோதியை**
**நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழந்துபோய்**
**வாடி வாடி வாடி வாடி மாண்டுபோன மாந்தரகள்**
**கோடி கோடி கோடி கோடி எண்ணியந்த கோடியே**

**சிவவாக்கியர். 3**

இப்பாடலில் சீர் மோனை உள்ளன.

**என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது இல்லையே**
**என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது கொண்டபின்**
**என்னிலே இருந்த ஒன்றை யான் காண வல்லாரே**
**என்னிலே இருந்த ஒன்றை யான் உணர்ந்து கொண்டெனே**

**சிவவாக்கியர். 6**

**ஆதி அந்த மூல விந்து நாதம் ஐந்து பூதமாம்**
**ஆதி அந்த மூல விந்து நாதம்  ஐந்தை முத்துமாய்**
**ஆதி அந்த மூல விந்து நாதம் மேவி நின்றதும்**
**ஆதி அந்த மூல விந்து நாத மேசிவாயமே**

**சிவவாக்கியர்.179**

**மந்திரங்கள் உண்டு நீர்மயங்கு கின்ற மானிடர்**
**மந்திரங்கள் ஆவ தும்ம ரத்தி லூநல் அன்றுகான்**
**மந்திரங்கள் ஆவ தும்ம தித்தெ முந்த வாயுவை**
**மந்திரத்தை உண்ட வாக்கு மரணம் ஏதும் இல்லையே**

**சிவவாக்கியர். 363**

**சிவாயவசி என்னவும் செபிக்க இச் சகம் எலாம்**
**சிவாயவசி என்னவும் செபிக்க யாவும் சித்தியாம்**
**சிவாயவசி என்னவும் செபிக்க வானம் ஆளலாம்**
**சிவாயவசி என்பதே இருதலைத்தீ ஆகுமே**

**சிவவாக்கியர்.511**

என்னும் பாடலில் சீர் மோனையும் அடி மோனையும் அமைந்துள்ளன.

**எதுகைத் தொடை :**

சிவவாக்கியர் பாடல் முழுவதும் அடி எதுகையில் அமைத்துள்ளார்.

**கருவிருந்து வாசலால் கலங்குகின்ற ஊமைகாள்**
**குருவிருந்து சொன்னவார்த்தை குறித்து நோக்வல்லிரேல்**
**உருவிலங்கு மெனியாகி உம்பராகி நின்றுநீர்**
**திருவிலங்கு மேணியாகிச் சென்று கூடலாகுமே**

**சிவவாக்கியர்64**

**உடம்புயிர் எடுத்தோ உயிருடம்பு எடுத்ததோ**
**உடம்புயிர் எடுத்தபோது உருவமேது செப்புவீர்**
**உடம்புயிர் எடுத்தபோது உயிர்இறப்பது இல்லையே**
**உடம்புயிர் மறந்து கண்டு உணர்ந்து ஞானம் ஓதுமே**

**சிவவாக்கியர்.85**

**அகார காரணத்திலே அனேகனேக ரூபமாய்**
**உகார காரணத்திலே உதிரித்து நின்றனன்**
**மகாரகாரணத்திலே மயங்குகின்ற வையகம்**
**சிகாரகாரணத்திலே தெளித்தே சிவாயமே**

**சிவவாக்கியர்.220**

**வானிலாத தென்றுமில்லை வானுமில்லை வானிடில்**
**ஊனிலாத தொன்றுமில்லை ஊனுமில்லை ஊனிடில்**

**நானிலாத தெலான்றுமில்லை நானுமில்லை நண்ணிடில்**
**தானிலாத தொன்றுமே தயங்கியாடு கின்றதே**

**சிவவாக்கியர்.223**

**நடை :**

சிவவாக்கியர் பாடல்களில் சில பாடல்கள் வினா நடையில் அமைந்துள்ளன.

**நான தேது?நீதேது?நடுவில் நின்ற தேதடா?**

**கோன தேது?குருவதேது? கூறிடும்குலாமரே**

**சிவவாக்கியர். 11**

**சித்தம் ஏது?சிந்தைஏது?சிவன் ஏது? சித்தரே**

**சத்தி ஏது?சம்புஏது? சாமி பேதம் அற்றெது**

**சிவவாக்கியர். 42**

**சாத்திரங்கள் ஓதுகின்ற சட்ட நாத பட்டரே**
**வேர்த்திரைப்பு வந்த போது வேதம் வந்து உதவுமோ**

**சிவவாக்கியர்.12**

**உதிக்க நின்ற தெவ்வி டம் ஓடுங்கு கின்ற தெவ்விடம்**

**சிவவாக்கியர்.172**

**ஈசனுக்கு கந்த கல்ல தெந்தக் கல்லு சொலலுமே**

**சிவவாக்கியர்.420**

என்னும் பாடலில் வினா நடை அமைந்துள்ளன. சிவாக்கியர் பல இடங்களில் மிக எளியவனிடம் கேட்பது போல் அடா என்று விளித்துப் பாடியுள்ளார்.

**கோயி லாவ தேதடா?குளங்க ளாவ தேதடா?**
**இட்ட குண்டம் ஏதடா?இருக்கு வேதம் ஏதடா?**
**சுட்ட மண்கலத்தி லோ சுற்று நூலேதடா**

**சிவவாக்கியர். 32**

இப்பாடலின் மூலம் வினா நடையை அமைத்துள்ளமை அறியமுடிகின்றது.

**அடுக்குத்தொடர் :**

**ஓடிஓடிஓடிஓடி உடக லந்த சோதியை**

**சிவவாக்கியர்.2**

**கோடிகோடி கோடி கோடி குவலயத்தோர் ஆதியை**
**நாடி நாடி நாடி நாடி நாளகன்று வீணதாய்த்**
**தேடித் தேடித் தேடித் தேடித் தேகமும்கசங்கியே**
**கூடி கூடி கூடி கூடி நிற்பர்கோடி கோடியே**

**சிவவாக்கியர்.318**

**வாதி வாதி வாதி வாதி வண்ட லை ந்திடான்**
**ஊதி ஊதி ஊதி ஊதி ஒளிம முங்கி உளறுவான்**
**வீதி வீதி வீதி வீதி விடைஎருப் பொறுக்குவோன்**
**சாதி சாதி சாதி சாதி சாகரத்தை கண்டிடான்**

**சிவவாக்கியர்.320**

**தூர தூர தூர மும் தொ டர்ந்தெ ழுந்த தூரமும்**
**பார பார பாரதம் என்று பரிந்தி ருந்த பாவிகள்**

**சிவவாக்கியர்.494**

**ஞானி ஞானி என்று ரைத்த நாய்கள் கோடி கோடியே**

**சிவவாக்கியர்.329**

**<u>ஐந்தும் ஐந்தும் ஐந்து</u> மாய் அல்ல வத்துள் ஆயுமாய்**

**சிவவாக்கியர்.260**

**<u>ஆண்மை ஆண்மை ஆண்மை ஆண்மை ஆண்மை</u>கூறும் அசடரே**

**காண்மையான வாதிரூபம் காலகால காலமும்**
**பாண்மையாகி மோனமான பாசமாகி நின்றிடும்**
**நாண்மையான நரலைவாயில் நங்குமிங்கும் அங்குமே**

**சிவவாக்கியர்.321**

இப்பாடலில் இரண்டு முறை, மூன்று முறை, நான்கு முறை,ஐந்து முறை விரைவின் காரணமாக அமைந்துள்ளது.

**அழுகை :**

**செம்பி னில்க ளிம்பு வந்த சீத ரங்கள் போலவே அம்மி**
**<u>வெம்பி வெம்பி வெம்பி</u> யே மெலிந்து மேல்க**

இப்பாடலில் வெம்பி என்றும் அழுகை நிலையைக் குறித்து அமைந்துள்ளன.

**யாப்பு :**

சிவாக்கியரின் பாடல்கள் அனைத்தும் ஒரே வகை சந்தத்தில் அமைந்த சந்த விருத்தங்கள் ஆகும். காப்புச் செய்யுள் மற்றும் பதினான்கு சீர் சந்த விருத்தத்தில் அமைந்துள்ளன. மற்றப்பாடல்கள் எழுசீர்ச் சந்த விருத்தத்தில் பாடப்பட்டுள்ளன.

**தான தான தான தான தான தான தானனா**

**முரண் :**

**<u>பெரிய</u> போர்கள் <u>சிறிய</u> போர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்**

சிவவாக்கியர்.கா. 7

நெருப்புநீரும் உம்முளேநி றைந்து கூற வல்லிரேல்

சிவவாக்கியர். 28.3

பெரிய தல்ல சிறிய தல்ல பேசல் ஆன தானும் அல்ல

சிவவாக்கியர். 71.3

காலைமாலை நீரிலே முழுகும் மந்த மூடர்கள்
காலைமாலை நீரிலேகிடந்த தேரை என்பெறும்

சிவவாக்கியர். 126.1,2

மான் இறைச்சி தின்ற தில்லை அன்றும்இன்றும்வேத்தியர்

சிவவாக்கியர்.154

பிறப்பதும்இறப்பதும் பிறந்திடாது இருப்பதும்
மறப்பதும்நினைப்பதும் மறைந்ததைத் தெளிந்ததும்
துறப்பதும்கொடுப்பதும் கதித்துவாரி உண்பதும்
பிறப்பதும்இறப்பதும் பிறந்த வீடு அடங்குமே

சிவவாக்கியர்.232

நல்ல தல்லகெட்ட தல்ல நடுவில் நிற்ப தொன்றுதான்

சிவவாக்கியர்.499

காடுமேடுகுன்றுபள்ளம் கானின் ஆறகற்றியும்
நாடு தேசம் விட்ட லைவர் நாதன் பாதம் காண்பரோ
கூடு விட்ட கன்றுள் ஆவி கூத்த னூர்க்கே நோக்கலால்
வீடு பெற்ற ரன்ப தத்தில் வீற்றி ருப்பார் இல்லையே

சிவவாக்கியர்.510

என்னும் பாடல்களில் அமைந்துள்ளன.

**பட்டினத்தார்**

**தொடை :**

எதுகைத் தொடை மோனைத்தொடை, முரண், இயைபு, அகியவற்றை அறியலாம். அவற்றில்,

**மோனைத்தொடை :**

*கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி*
*நில்லாப் பிழையும் நினையாப்பிழையும் நின் அஞ்செழுத்தைச்*
*சொல்லாப் பிழையும் துதியாய் பிழையும் தொழர்பிழையும்*
*எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே*

*பட்டினத்தார்- திரு ஏக.மா – 9*

*ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற*
*பேருஞ்சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளும்*
*சீருஞ் சதமல்ல செல்வம் சதமல்ல தேசத்திலே*
*யாருஞ் சதமல்ல நின்தாள் சதம் கச்சி ஏகம்பனே*

*பட்டினத்தார்- திரு ஏக.மா – 13*

பட்டினத்தார் பாடல்களில் மோனைத்தொடை பயின்று வந்துள்ளது.

**எதுகைத்தொடை :**

*அன்னை எத்தனை எத்தனை அன்னையோ*
*அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ*
*பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ*
*பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ*
*முன்னம் எத்தனை எத்தனை சன் மமோ*
*மூட னயடி யேனும் அறிந்திலேன்*

*இன்னம் எத்தனை எத்தனை சன்மமோ*
*என்செய் வேன் கச்சி ஏகம்ப நாதனே*

***பட்டினத்தார்- திரு ஏக..மா – 43***

இப்பாடலில் சீர், எதுகையும் அடி எதுகையும் அமைந்துள்ளன.

*முன்ன இட்ட தீ முப்பு ரத்திலே*
*பின்னை இட்ட தீ தென்இ லங்கையிலே*
*அன்னை இட்ட தீ அடிவ யிற்றிலே*
*யானும் இட்ட தீ மூள்க மூள்கவே*

***பட்டினத்தார்- திரு ஏக.மா – 7***

பட்டினத்தார் பாடல் முழுமையும் எதுகைத் தொடையில் அமைந்துள்ளது.

முரண்

*பிறந்தன இறக்கும்இறந்தன பிறக்கும்*
*மறைந்தன தோன்றினமறையும் தோன்றும்*
*பெருத்தன சிறுக்கும்சிறுத்தன பெருக்கும்*
*உணர்ந்தன மறக்கும்மறந்தன உணரும்*
*புணர்ந்தன பிரியும்பிரிந்தன புணரும்*

***பட்டினத்தார்- கோ .திரு அக – 2***

இப்பாடலில் முரண் பயின்று வந்துள்ளன.

இயைபு

பட்டினத்தார் கண்ணிகளில் அனைத்தும் அடி இயைபைப் பெற்று அமைந்துள்ளன.

*மக்கள் சுற்றத் தாசை மறக்கேனே என்குதே*
*திக்கரசாம் ஆசையது தீரேனே என்குதே*

***பட்டினத்தார். கன்னி – 5***

*அன்ன விசாரமது அற்ற இடம் கிட்டாதோ*
*சென்ன விசாரம் தொலைந்த இடம் கிட்டாதோ*

*பட்டினத்தார் கன்னி – 69*

இப்பாடல்களில் இறுதிச்சீர் ஒன்றி அடி இயைபு அமைந்துள்ளது.

**பத்திரகிரியார்**

**தொடை :**

எதுகைத்தொடை,மோனைத்தொடை,முரண்தொடை,எதுகைத்தொடை,

**மாயாப் பிறவி மயக்கத்தை யூடறுத்துக்**
**காயா புரிக்கோட்டை கைக்கொள்வ தெக்காலம்**

**பத்திரகிரியார்- 6**

**பெண்ணின் நல்லார் ஆசைப் பிரமையினை விட்டொழிந்து**
**கண்ணிரண்டு மூடிக் கலந்திருப்ப தெக்காலம்**

**பத்திரகிரியார்– 11**

**வட்டவழிக் குள்ளே மருவுஞ் சதா சிவத்தைக்**
**கிட்டவழி தேடக் கிருபை செய்வ தெக்காலம்**

**பத்திரகிரியார்– 73**

**முப்பாழும் பாழாய் முதற்பாழஞ் சூனியமாய்**
**அப்பாழும் பாழா அன்புசெய்ய தெக்காலாம்**

**பத்திரகிரியார்–115**

**தன்னை மறந்து தலத்து நிலைமறைந்து**
**கன்மம் மறந்து கதிபெறுவ தெக்காலம்**

**பத்திரகிரியார்–214**

பத்திரகிரியார் பாடல் முழுவதும் எதுகைத்தொடையில் அமைந்துள்ளன.

**மோனைத்தொடை :**

*தெளியத் தெளியத் தெளிந்த சிவா னந்தத்தேன்*
*பொழியப் பொழியமனம் பூண்டிருப்ப தெக்காலம்*

பத்திரகிரியார்– *67*

*கள்ளக் கருத்தையெல்லாம் கட்டோடு வேரறுத்திங்கு*
*உள்ளக் கருத்தை உணர்ந்திருப்ப தெக்காலம்*

பத்திரகிரியார்–*77*

*நினைக்கும் நினைவுதொறும் நிறைந்தபரி பூரணத்தை*
*முனைக்கு மேல கண்டு கண்ணில் முளைந்தெழுப்ப தெக்காலம்*

பத்திரகிரியார்–*114*

இப்பாடல்களில் சீர் மோனைத்தொடை அமைந்துள்ளது.

*சத்தம் பிறந்தவிடம் தன்மயமாய் நின்றவிடம்*
*சித்தம் பிறந்தவிடம் தேந்தவறிவ தெக்காலம்*

பத்திரகிரியார்–*191*

*ஆசைகொண்ட மாதர் அடைகனவு நீக்கியுன்மேல்*
*ஓசைகொண்ட நானும் ஒடுங்குவது மெக்காலம்*

பத்திரகிரியார்– 208

*தன்னுயிரைக் கொண்டு தான் திதிந்த வாறது போல்*
*உன்னுயிரைக் கொண்டிங்கு ஒடுங்குவது மெக்காலம்*

பத்திரகிரியார்–*211*

*தன்வசமுங் கெட்டிங்கு இருந்தவச மும் அழிந்து*
*தன்வசமுங் கெட்டு அருறைச் சார்ந்திருப்ப தெக்காலம்*

பத்திரகிரியார்–*231*

இப்பாடல்களில் அடி மோனை அமைந்துள்ளன.

**முரண் :**

*ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்*
*தூங்காமல தூங்கிச் சுகம் பெறுவ தெக்காலம்*

பத்திரகிரியார்–*2*

*பிறப்பும் இறப்பு மற்றுப் பேச்சுமற்று மூச்சுமற்று*
*மறப்பும் நினைப்பு மற்று மாண்டிருப்ப தெக்காலம்*

பத்திரகிரியார்–*206*

இப்பாடலில் முரண் பயின்று வந்துள்ளன.

அகத்தியர்

**யாப்பு :**

அகத்தியர் பாடல்கள் ஞானம் என்ற நிலையில் ஒன்று முதல் ஐந்து வரையில் எண்சீர் விருத்தத்தில் பாடலை இயற்றியுள்ளார்.

அகத்தியர் பாடலை எளிமையான நடையில் பாடியுள்ளார்

இவரின் பாடல் சீடனுக்கு உபதேசம் செய்வது போன்று பாரப்பா, ஆச்சாப்பா என்று அமைத்துள்ளார்.

**தொடை :**

**மோனைத்தொடை :**

*சத்தியே பராபரமே ஒன்றே தெய்வம்*
*சகலவுயிர் சீவனுக்கு மதுதானாச்சு*
*புத்தியினா லறிந்தவர்கள் புண்ணி யோர்கள்*
*பூதலத்தில் கோடியிலே யொருவ ருண்டு*
*புத்தியினால் மனமடங்கி நிலையில் நிற்பார்*
*பாழிலே மனத்தை விடார் பரமஞானி*

*சுத்தியே யலைவதில்லை சூட்சஞ் சூட்சம்*
*சுழியிலே நிலையறிந்தால் மோட்சந் தானே*
*அகத்தியர் ஞா 1-1*

இப்பாடலில் சீர் மோனையும் சீர் இணைமோனையும் பயின்று வந்துள்ளது.

**எதுகை :**

*உண்ணும்போ துயிரெழுத்தை வுயர வாங்கி*
*உறங்குகின்ற போதெல்லா மதுவே யாகும்*
*பெண்ணின்பா லிந்திரியம் விடும்போ தெல்லாம்*
*பேணிவலம் மேல் நோக்கி அவத்தில் நில்லு*
*திண்ணுங்கா யிலைமருந்து மதுவே யாகும்*
*தினந்தோறும் அப்படியே செலுத்த வல்லார்*

*மண்ணுழி காலமட்டும் வாழ்வார் பாரு*
*மறலிகையில் அகப்படவு மாட்டார் தாமே*
*அகத்தியர் ஞான 2-2*

இப்பாடலில் எதுகை அமைந்துள்ளது.அகத்தியர் பாடல்கள் முழுமையும் எதுகைத் தொடையில் அமைத்துள்ளார்.

**இயைபு :**

*மனமது செம்மை யானால்*
*மந்திரம் செபிக்க வேண்டா*
*மனமது செம்மை யானால்*
*வாயுவை உயர்த்த வேண்டா*
*மனமது செம்மை யானால்*
*வாசியை நிறுத்த வேண்டா*
*மனமது செம்மை யானால்*
*மந்திரம் செம்மை யாமே*
*அகத்தியர் ஞா. 2-1*

இப்பாடலில் இயைபு பயின்றுவந்துள்ளது.

**முரண் :**

*நாடுமெத்த நகரமென்பார் சொர்க்க மென்பார்*
*ல்வினையோ தீவினையோ எண்ண மாட்டார்*
*அகத்தியர் ஞா.3-2-2*

*அழிந்திடவே சொன்ன தல்லால் வேறொன் றில்லை*
*அதர்மமென்றுந் தர்மமென்றும் இரண்டுண் டாக்கி*
*அகத்தியர் ஞா. 3.—6-2*

*சோதிபரி பூரணமும் இவைமூன் றுந்தான்*
*தூங்காமல் தூங்கி யங்கே காக்கும்போது*
*அகத்தியர் ஞா. 4-7-3*

இவற்றில் முரண் அமைந்துள்ளது.

**கருவூரார் 8**

**யாப்பு :**

கருவூரார் பாடலை எண்சீர் விருத்தத்தில் பாடியுள்ளார்.

**மோனைத்தொடை**

*வாமியிவள்மர்மம்வைத்துப்பூசைபண்ண*
*மதியனக்குவேணுமடாஅதிகமாக*
*காமிவெகுசாமிசிவகாமிரூபி*
*காணரிதுசிறுபிள்ளைகன்னிகன்னி*
*ஆமிவளைஅறிந்தவர்கள்சித்தர்சித்தர்*
*அறிந்தாலும்மனமடக்கஅறியவேணும்*
*நாமிவளைப்பூசைபண்ணநினைத்தவாறு*
*நாட்டிலேசொல்லவென்றால்நகைப்பார்காணே*
*கருவூர் - சி- 2*

இப்பாடலில்சீர்மோனையும்இணைமோனையும்வந்துள்ளது.

**எதுகைத்தொடை :**

*காணப்பாஇவளுடையகற்புமெத்த*
*கண்டவர்க்குப்பெண்ணாகதானேஎன்பாள்*
*ஊணப்பாஅமிழ்தமிவள்ஊட்டிவைப்பாள்*
*உன்வீட்டுத்குள்ளிருந்துமேலேஏறப்*
*பூணப்பாமனமுறைந்துவாவாவென்பாள்*
*புத்திரனேஎன்மகனேஎன்றுசொல்லி*
*வேணப்பாவேணதெல்லாந்தருவேன்ஏண்பாள்*
*வேதாந்தசூட்சமெல்லாம்விளங்கும்தானே*

*கருவூர் - சி- 3*

கருவூரார்பாடல்முழுவதும்அடிஎதுகையில்அமைந்துள்ளது.

**முரண் :**

*பேச்சென்றால்வாய்ச்சமர்த்தாய்ப்பேசிப்பேசிப்*
*பின்னுமுன்னும்பாராமல்மதமேமீறி*

*கருவூர் - சி- 18-1*

*கூடுகிறமுக்கோணப்பரங்களாகிக்*
*குறுகுமதிபெருகுமதிகூறொண்ணாதே*

*கருவூர் - சி- 26-4*

*தூங்கினேன்காலறிந்துமடக்கமாட்டேன்*
*துணையெனக்குயாருமில்லைசூழ்ச்சியாக*
*வாங்கினேன்காலறிந்துமடக்கவேண்டும்*
*வகையானஎனக்கொருத்தியுறுதிசொன்னாள்*

*கருவூர் - சி-29-23*

முரண்அமைந்துள்ளது.

**அடிஇயைபு :**

*அறிந்தகுறிஅடையாளங்காண<u>வேண்டும்</u>*
*அக்குறியிற்சொக்கிமனந்தேற<u>வேண்டும்</u>*
*அறிந்தவன்போலடங்கிமனமிறக்க<u>வேண்டும்</u>*
*அலகையதுவழிபாதைஅறிய<u>வேண்டும்</u>*
*மறைந்தவரைநிறைந்தவரைநீதான்காண*
*மயக்கத்தைக்கண்டுனையும்மதிக்க<u>வேண்டும்</u>*
*நிறைந்தமதிகுறைந்தவகைஅறிய<u>வேண்டும்</u>*
*நிச்சயத்தைஅறிவார்க்குமுத்திதானே*

*கருவூர் - சி-20*

*சூட்சமிவள்வாசமதுநிலைத்த<u>வீடு</u>*
*சொல்லுதற்கேளங்குமாய்நிறைந்த<u>வீடு</u>*
*தேசமதில்போய்விளங்கும்இந்த<u>வீடு</u>*
*சித்தாந்தசித்தரவர்தேடும்<u>வீடு</u>*
*ஓசைமணிபூரமதில்உதிக்கும்<u>வீடு</u>*
*ஓகோகோஅதிசயங்கள்உள்ள<u>வீடு</u>*
*ஆசுகவிமதுரமதுபொழியும்<u>வீடு</u>*
*அவனருளுங்கூடிவிளையாடும்வீடே*

*கருவூர் - சி- 26*

இப்பாடலில்அடிஇயைபுபயின்றுவந்துள்ளது.

**அடுக்குத்தொடர் :**

**அசைநிலை :**

| | |
|---|---|
| **கன்னிகன்னி** | **2-2** |
| **சித்தர்சித்தர்** | **2-3** |
| **வாவா** | **3-3** |

**நில்லுநில்லு 13-3**

**வாதம்வாதம் 22-1**

கருவூரார்பாடலில்அடுக்குத்தொடர்அமைந்துள்ளது.

**வினா :**

*பாரேது?புனலேது?அனலுமேது?*

*பாங்காணகாலேது?வெளியுமாகும்*

*நாரேது?பூவேது?வாசமேது?*

*நல்லபுட்பந்தானேது?பூசையேது?*

*ஊரேது?பேரேது?சினமுமேது?*

*ஓகோகோஅதிசயந்தானென்னசொல்வேன்*

*ஆறேது?குளமேது?கோயிலேது?*

*ஆதிவத்தைஅறிவதனால்அறியலாமே*

*கருவூர் - சி- 10*

இப்பாடலில்வினாகேட்பதுபோல்பாடல்அமைந்துள்ளது.

**நந்தீசுவரர்**

**தொடை :**

**மோனைத்தொடை :**

*<u>செ</u>ய்யப்பாவிக்கினர்தம்பூசைசொன்னேன்*

*<u>செ</u>யமானசண்முகவன்பூசைகேளு*

*<u>வை</u>யப்பாசங்வங்மங்சரவணாய (என்று)*

*<u>வ</u>ளமாகஅனாத்தில்பூசைபண்ணு*

*வையப்பாபுட்பாரிமளங்கள்கொண்டு*
*மைந்தனேதூபநைவேத்யங்காட்டி*
*கையப்பாதனகசபையதியேபூசி*
*தண்மணியேசண்முகத்தைவரங்கள்கேளே*

*நந்தீ - 2*

இப்பாடலில்மோனைத்தொடைபயின்றுவந்துள்ளது.

**எதுகைத்தொடை :**

*கேளப்பாஓம்ஸ்ரீகங்கெண்றுந்தான்*
*கெடியாகமூலத்தில்கும்பித்தக்கால*
*வாளப்பாபழங்தேங்காய்அவல்வடைதோசை*
*வளமாவிக்னர்க்குப்புட்பபரிமளங்கள்(சாற்றி)*
*நாளாப்பாமனமடங்கித்தோத்திரஞ்செய்து*
*நலமானவிக்கினரைப்பூசித்தக்கால்*
*ஆளப்பாஆசிர்வாதங்கள்ஈவார்*
*அப்பனேவிக்கினரைப்பூசைசெய்யே*

*நந்தீ -1*

நந்தீசுவரர்பாடல்முழுவதும்அடிஎதுகைத்தொடையில்அமைந்துள்ளது.

நந்தீசுவரர்பாடல்களில்சீடர்களுக்குப்பூசைமுறைகளைக்கூறியபாடலாகஅமைந்துள்ளது.இப்பாடல்களில்கேளப்பாபாரப்பாபூசைசெய்யேவரங்கள்கேளேசரணம்பண்ணேஎன்றுசொல்லேஇதுபோன்றசொற்கள்சீடர்களுக்குக்கூறியதுபோன்றுஅமைந்துள்ளது.

வான்மீகனர்

**தொடை :**

**மோனைத் தொடை :**

*ததறுகின்ற பேர்களையா கோடா கோடி*
*காரணத்தைக் கண்டவர்கள் கொஞ்சம் கொஞ்சம்*
*பதறுகின்ற பேர்களெல்லாம் புராப ரத்தைப்*
*பற்றிநின்று பார்த்தவர்கள் சுருக்க மப்பா*
*உதறுகின்ற பேர்களெல்லா முலகத் துள்ளே*
*உதித்தகலை தம்முள்ளே அறிய மாட்டார்*
*சிதறுகின்ற பேர்களைப் போல் சிதறி டாமல்*
*சிவசத்தி வரும்போதே தன்னில் நில்லே*

*வான்மீ- 7*

இப்பாடலில் அடிமோனையும் சீர்மோனையும் பயின்றுவந்துள்ளது.

**எதுகைத்தொடை :**

*சிவசிவா பதினெண்பேர் பாடற் கெல்லாம்*
*திறவுகோல் வான்மீகன் பதினாறாகும்*
*சிவம்பெத்த சித்தரெல்லாம் என்னூல் பார்த்துச்*
*சிவனோடே கொள்சொன்னார் சினந்தான் நாதன்*
*அவமாகிப் போகாமல் சிவனுத் தார*
*அருளினால் திறந்து சொன்னேன் உலகுக்காக*
*நவமான நவக்கிரகந் தன்னுள் ளேயே*
*நாக்குவாய் செவிமூக்கு மத்திக் கப்பால்*

*வான்மீ- 11*

இப்பாடலில் மட்டும் அல்லாமல் பதினாறு பாடலிலும் அடி எதுகை அமைந்துள்ளது.

**அடுக்குத்தொடர் :**

**உவகை:**

***சுற்றுவார் பெருநூலைப் பார்த்துப் பார்த்துத்***
***தூடிப்பா ருலகத்தில் சிற்சில் லோர்கள்***
***வான்மீ- 5-1***

***கதறுகின்ற பேர்களையா கோடா கோடி***
***காரணத்தைக் கண்டவர்கள் கொஞ்சம் கொஞ்சம்***
***வான்மீ- 7-1***

இவ்வாறு பாடல்களில் அடுக்குத் தொடர் அமைந்துள்ளது.

**முரண் :**

***வந்ததுவும் போனதுவும் வாசி யாரும்***
***வானில்வரும் ரவிமதியும் வாசி யாகும்***
***வான்மீ- 2***

இப்பாடலில் முரண் பயின்று வந்துள்ளது.

**திருமூலர்**

**அணிநயம்**

**உவமை அணி**

**நோக்கமுடன் மூலமெனும் பாதந் தன்னை**
**நுண்பொருளாஞ் சிற்பத்தினூடே நோக்குந்**
**தீர்க்கமுடனாதார வகையுந் தாண்டித்**
**திருநயனம் நாசிநெற்றி நடுவே பார்த்துப்**

**போக்கறிந்திங் கிந்தநிலை நோக்க வல்லார்**
**புரிசடையோன் தன்னுடைய புதல்வ ராவார்**
***ஆக்கமுடன் அருட்சுடர்போற் குருவைத் தானே***
***அனுதினமும் நோக்கி நிற்பார் ஆசா னாமே***

**திருமூலர்- 5**

இப்பாடலின் இறைவனை அருஞ்சுடர்போல் தினமும் கண்டால் ஆசானாக ஆவர் என்று உவமையாகக் கூறியுள்ளார்.

**தன்மையணி**

*மூலமெனு மாதார வட்டந் தானே*
*முச்சுடரும் முக்கோண மூன்று நாடிச்*
*சீலமெனுஞ் சிவலிங்க பாத தீர்த்தந்*
*திருவடியுந் திருமேனி நடமு மாகும்*
*கோலமுடன் அண்டமெல்லாந் தாங்கிக் கொண்டு*
*கொழுந்துவிட்ட கம்பமதாய் மேலே நோக்கி*
*ஆலமுண்ட கண்டமெலாந் தானாய் நின்ற*
*அகாரமுதல் அவ்வெழுத்தை அறிந்து பாரே*

இப்பாடலில் இறைவனின் நிலையையும், கோலத்தின் தன்மையையும் விளக்கிக்கூறியுள்ளார்.

**கொங்கணர்**

**அணிநயம்**

**சொற்பொருள் பின்வருநிலையணி**

**அரிக்கு முந்தின தவ்வெழுத்தாம் பின்னும்**
**அரிக்குள் நின்றதும் அஞ்செழுத்தாம்**
**தரிக்கும் முந்தின தஞ்செழுத்தாம் வாசி**
**பரிக்குள் நின்றது மஞ்செழுத்தாம்**

**கொங்கணர்.12**

**செகம் படைத்தும் *அஞ்செழுத்தாம்* பின்னும்**
**சீவன் படைத்தும் *அஞ்செழுத்தாம்***
**உகமுடிந்தது *மஞ்செழுத்தாம்* தாம் பின்னும்**
**உற்பன மானது *மஞ்செழுத்தாம்***

**கொங்கணர்.15**

***ஆயினு மைந்தா மெழுத்துக்குள் ளையறி***
***வாயனு மைந்தா மெழுத்துக்குள்ளே***
***வாயனு மைந்தா ழுத்துக்குள் ளேயிந்த***
***வாலையு மைந்தா மெழுத்துக்குள்ளே***

**கொங்கணர்.18**

***மேல்வீடு கண்டவன் பாணியடி விண்ணில்***
***விளக்கில் நின்றவன் வாணியடி***
***தாய்வீடு கண்டவன் ஞானியடிபரி***
***தாண்டிக் கொண்டான் பட்டாணியடி***

**கொங்கணர்.31**

***பூத்த மலராலே பிஞ்சுமுண்டே அதில்***
***பூவில்லப் பிஞ்சும் அனேகமுண்டு***
***மூத்த மகனாலே வாழ்வுண்டு மற்ற***
***மூன்று பேராலே அழிவுண்டு***

**கொங்கணர். 45**

இதில் அஞ்செழுத்தாம், கண்டவன், பிஞ்சும் என்ற சொற்கள் மீண்டும் மீண்டும் வந்து ஒரே பொருளைக் குறிப்பதால் சொற்பொருள் பின்வருநிலையணி கொங்கணர் சித்தர் பாடல்களில் பயின்று வந்துள்ளன.

**உவமை அணி**

***காரியனாகிலும் வீரியம் பேசவும்***
***காணா தென்றவ்வை சொன்னாளே***
***பாரினில் வம்புகள் செய்யாதே புளிப்***
***பாழ் போலுதிர்ந்து விழும்தானே***

**கொங்கணர். 92**

இப்பாடலில் புளியம்பழத்தில் ஒட்டியிருந்த ஓடு கழன்றது போல் உடல் விழ இறப்பார் என்ற உவமையணி பயின்று வந்துள்ளது.

**எடுத்துக்காட்டு உவமையணி**

***நந்தவனத்திலே சோதியுண்டு நிலம்***
***நந்திய பேருக்கு நெல்லு முண்டு***
***விந்தையாய் வாலையைப் பூசிக்க முன்னநாளில்***
***விட்ட குறைவேனும் வாலைப்பெண்ணே***

**கொங்கணர். 73**

இப்பாடலில் கடவுள் உடம்பில் சோதியாக உள்ளார்.நிலத்தைத் தினமும் கண்காணித்தவர்க்கே நல்ல நெல் விளைச்சல் உண்டு.அதுபோல் வாலையைப் பூசித்தால்தான் முன் பிறவியில் விட்ட குறை தொட்ட குறை இருந்தால்தான் சோதியை உணரமுடியும். இவ்வாறு கடவுளைக் காணும் நிலையை, நிலத்தில் கிடைக்கும் விளைச்சளுக்கு எடுத்துக்காட்டாக கூறியுள்ளார்.இதில் எடுத்துக்காட்டு உவைமையணி பயின்று வந்துள்ளது.

***பாலோடு முண்டிடு பூனையு முண்டது***
***மேலாகக் காணவும் காண்பதில்லை***
***மேலந்த வாகையைத் தள்ளிவிட்டுள்ளத்தில்***
***வேண்டிய பூசையைச் செய்திடுங்கள்***

**கொங்கணர். 96**

இப்பாடலில் பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன் என்று இரு வகையில் உணர்வு கொள்ளாதே எடுத்துக்காட்டு உவமையணி பயின்று வந்துள்ளது.

**உருவக அணி**

***நகார திட்டிப்பே ஆனதனால் வீடு***
***வான வகார நயமாச்சு***
***உகார முச்சி சரசாச்சே இதை***
***உற்றுப் பாரடி வாலைப்பெண்ணே***

**கொங்கணர். 40**

***காட்டாத காளையைக் காட்டவேணு மாசை***
***வெட்ட வேணும் வாசி வொட்ட வேணும்***
***எட்டாத கொம்பை வளைக்க வேணுங்காயம்***
***என்றைக்கு கிருக்குமோ வாலைப்பெண்ணே***

**கொங்கணர். 43**

கட்டாமல் தறி கெட்டு ஓடும் காளை போல் உந்திக்கு மேல் ஒளி ஏறும்.அதைக் கைப்பற்றி ஏற்றுவது கட்டுவதாகும்.ஆசைகள் இல்லாமல் மூச்சுப் பயிற்சியை நாடியில் ஒட்ட வேண்டும்.ஒட்டாத கொம்பு ஆகிய உள்நாக்கை வளைத்து அதனுள் ஒளி காணுதல் வேண்டும்.இப்பாடலில் உருவக அணி அமைந்துள்ளது.

***பூத்த மலராலே பிஞ்சுமுண்டே அதில்***
***பூவில்லப் பிஞ்சும் அனேகமுண்டு***
***மூத்த மகனாலே வாழ்வுண்டு மற்ற***
***மூன்று பேராலே அழிவுமுண்டு***

**கொங்கணர். 45**

பாடல் எண்கள் 52, 53, 54, 55, 56, 57, 58.முதலிய பாடல்களில் உருவக அணி பயின்று வந்துள்ளன.

**புராணச் செய்தி**

**பாசு பதாஸ்திரம்**

***நாதனின் சொல்வேதனஞ்சு போதன்மிஞ்சி மானகஞ்ச***
***பாதம் வஞ்ச நெஞ்சினில்லைப் போம்***

**கொங்கணர். 1**

அர்ச்சுனனின் தவவலிமையை மெச்சி சிவபெருமான் பாசுபதாஸ்திரத்தை வழங்குகின்ற புராணச்செய்தி இப்பாடலின் மூலம் அறியப்படுகின்றது.

**ஒற்றைக் கொம்பாம்வாலை**

**வித்தைக் குதவிய வொற்றைக்கொம் பாம்வாலை**
**சத்தி விநாயகன் காப்பாமே**

**கொங்கணர். 2**

ஒற்றைக் கொம்புடைய விநாயகரைப் பற்றிய புராணச்செய்தி அறியப்படுகின்றது.

**கங்கையை அணிந்த சிவன்**

***கங்கை யணிசிவ சம்புவாஞ் சற்குரு***

**கொங்கணர்.4**

இப்பாடலில் கங்கையைத் தலையில் அணிந்த சிவனைப்பற்றிய செய்தியை அறியமுடிகின்றது.

**கண்ணன் பணி**

***காண்டீப னால்பணி பூண்டவன் வைகுந்தம்***
***ஆண்டவன் பொற்பாதம் காப்பாமே***

**கொங்கணர். 6**

இப்பாடல் மூலம் அர்ச்சுனனுக்குப் பாரதப் போரின் போது தேரோட்டியாக இருந்து பாண்டவர்களுக்கு வெற்றியைத் தேடித்தருகின்ற கண்ணணின் பணியைப் பற்றிய கதையை அறியமுடிகின்றது.

**காலனைக் காலால் உதைத்தவன்**

***காலனைக் காலா லுதைத்தவளாம் வாலை***
***ஆலகாலவிட முண்டவளாம்***

**கொங்கணர். 64**

காலனைக் காலால் உதைத்தவள், ஆலகால என்னும் கொடிய விஷத்தைச் சாப்பிட்டவள் என்ற புராணச் செய்தி இப்பாடலின் மூலம் அறியப்படுகின்றது.

**முப்புரம் எரித்த கதை**

**சிரித்து மெல்லப் புரமெரித் தாள்வாலை**

**கொங்கணர்.66**

முப்புரம் எரித்த செய்தி இப்பாடல் மூலம் அறியமுடிகின்றது.

**கூனிக்கு மூன்று கால்**

**கிழக்கூனிக்கு மூன்று காலென்று சொன்னேன்**

**கொங்கணர்.97**

இராமாயணத்தில் இடம் பெற்றுள்ள கூனியாகிய மந்தரைக்கு ஊன்று கோலோடு சேர்த்து மூன்று கால்கள் என்ற கதை இப்பாடல் மூலம் அறியமுடிகின்றது.

இவ்வாறு கொங்கணர் பாடல்களில் புராணச்செய்தி இடம்பெற்றுள்ளன.

**கொங்கணர் பாடல்களில் பழமொழிகள்**

***காகமிருக்கு கொம்புல்***
***கத சாவலிருக்குது தெம்பிலே***

**கொங்கணர்.55**

***முட்டையிடுது ஒரு பறவை***
***மோசம் பண்ணுது ஒரு பறவை***

**கொங்கணர். 59**

***ஈனா மலடி கொடுஞ்சூலி***

**கொங்கணர். 67**

***கத்தி பெரியதோ உறை பெரியதோ***

**கொங்கணர்.68**

*வேலையைப் பார்த்தல்லவா கூலி தரமுடியும்*

**கொங்கணர்.74**

*பாலுக்கு மேலான பாக்கிமில்லை*

*வாலைக் கும்மிக்கு மேலான பாடலில்லை*

**கொங்கணர். 75**

*காயும் பழமும் சரியாமே*

**கொங்கணர்.81**

*கண்டதும் கேட்டதுஞ் சொல்லாதே*

*கண்ணில் காணாத வுத்தரம் விள்ளாதே*

**கொங்கணர். 88**

*பெண்டாட்டிக்கு உற்றது சொல்லாதே*

*பிள்ளைக்கு இளப்பம் கொடுக்காதே*

**கொங்கணர்.88**

**ஆடிய பாம்பை அடியாதே**

**கொங்கணர். 91**

**தன்வீடிருக்க அசல் வீடு போகாதே**

**கொங்கணர்.94**

போன்ற பழமொழிகள் கொங்கணச் சித்தர் பாடலில் பயின்று வந்துள்ளன.

**திருவள்ளுவர்**

**அணி**

**உவமையணி**

திருவள்ளுவர் மனிதர்களை வண்டுகள் என உவமையாகக் கூறியுள்ளார்.

***வண்டரெனை நீசனென்ற வாறுதனை யேயொழித்தேன்***
***விண்டரக சியந்தன்னை விளக்கமது காண்கிலரே***

**திருவள்ளுவர் - 4**

இப்பாடலில் வண்டுகள் பல மலர்களில் இருந்து தேனை உண்ணுவது போல ஒழுக்கம் இல்லாத மனிதர்களை வண்டு என்று கூறியுள்ளார்.மனிதர்களை இவர் நீசர்கள் விட்டு விலகினேன் என்று கூறியுள்ளார்.

***கழியக்கழியக் கடலுயிர் தேய்பிறை கண்டுமிருந்***
***தமியப் பெருந்தாரை யெந்தா ளிருந்தும் அணித்தயமே***

**திருவள்ளுவர்- 7**

***பாலுமது நெய்யெனவும் பார்***

**திருவள்ளுவர்** - 13

இப்பாடல்களில் உவமையணிபயின்று வந்துள்ளது.

**வஞ்சப்புகழ்ச்சியணி**

ஒன்றை புகழ்வதைப் போல் புகழ்ந்து பழிப்பதும் பழிப்பதைப் போல் பழித்துப் புகழ்வதும் வஞ்சப் புகழ்ச்சியணியாகும். சான்றாக,

***யோனிக்குளாசை யொழியா தனித்தியம் உங்களுயிர்***
***தேனிக்குள் இன்பஞ்சுகாத்த மோவருஞ் சிற்றின்பத்தில்***
***ஊனற்றுக்காய முடலற்று போம்பொழு தொன்றறியா***
***ஈனர்க்குச் சொர்க்கஞ் சுடுகாடொழிய இனியில்லையே***

**திருவள்ளுவர் - 9**

இப்பாடலில் ஈனர்க்கு சொர்க்கம் சுடுகாடு என்று வஞ்சமாய்ப் பழித்துக் கூறியுள்ளார்.

**சிவவாக்கியர்**

**உவமையணி**

***தங்கம் ஒன்று ரூபம் வேறு தன்மையான வாறுபோல்***
***செங்கண் மாலும் ஈசனும் சிறந்திருந்தது எம்முளே***
***விங்களங்கள் பேசுவார் விளங்குகின்ற மாந்தரே***
***எங்குமாகி நின்றநாமம் நாமம்இந்த நாமமே***

சிவவா - 22

என்ற பாடலில் மூலம் தங்கம் ஒன்றில் பல வடிவங்களில் நகை செய்வது போல் பிரம்மம் என்னும் முழு முதல் கடவுளிலிருந்து திருமாலும், சிவனும் எனப் பலராகப் பிரிந்து நம்முடைய உடம்பில்

**செய்ய தெங்கு இளநீர் சேர்ந்தகார ணங்கள் போல்**
**ஐயன்வந்து என்னுள் புகுந்தகோயில் கொண்டனன்**
**ஐயன்வந்து என்னுள் புகுந்துகாயில் கொண்டபின்**
**வையகத்தில் மாந்தர்முன்னம் வாய்திறப்பது இல்லையே**

சிவவா - 33

**கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணெய் மோர்புகா**
**உடைந்துபோன சங்கினோசை உயிர்களும் உட்புகா**
**விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டும் போய் மரம்புகா**
**இறந்தவர் பிறப்பதில்லை இல்லைஇல்லை இல்லையே**

சிவவா - 48

**மையடர்ந்த கண்ணினார் மயங்கிடும் மயக்கிலே**
**ஐயிறந்த கொண்டுநீங்கள் அல்லல் உற் றிருபிப்பீர்கள்**
**மெய்யடர்ந்த சிந்தையால் விளங்குஞான மெய்தினால்**
**உய்யர்ந்த கொண்டு நீங்கள் ஊழிகாலம் வாழ்விரே**

சிவ - 63

**மண்ணிலே பிறக்கவும் வழக்காலது உரைக்கவும்**
**எண்ணிலாத கோடிதேவர் என்னது உன்னது என்னவும்**
**கண்ணிலேகண் மணி இருக்கக் கண்மறைந்த வாறு போல்**

**எண்ணில் கோடி தேவரும் இதின்கணால் வழிப்பதே**

**சிவ – 79**

**கானமற்ற காட்டகத்தில் வெந்தெழுந்த நீறுபோல்**
**ஞானமுற்ற நெஞ்சகத்தில் வெல்லது ஏதும் இல்லையே**
**ஊனமற்ற சோதியோடு உணர்வுசேர்ந்து அடங்கினால்**
**தேன்அகத்தில் ஊறல்போல் தெளிந்ததே சிவாயமே**

**சிவ - 85**

பாடலில் 94,55 98 99 102 154 156 204 238 458 போன்ற பாடல்களில் உவமையணி பயின்று வந்துள்ளன.

**சொல்பொருள் பின்வரு நிலையணி**

**ஆடு காட்டி வேங்கையை அகப்படுத்து மாறுபோல்**
**மாடுகாட்டி என்னைநீ மதிமயக்க லாகுமோ**
**கோடுகாட்டி யானையைக் கொன்று ரித்த கொற்றவா**
**வீடுகாட்டி என்னை நீ வெளிப்படுத்த வேணுமே**

**சிவ - 53**

**உடம்புயிர் எடுத்ததோ உயிருடம்பு எடுத்ததோ**
**உடம்புயிர் எடுத்தபோது உருவமேது செப்புவீர்**
**உடம்புயிர் எடுத்தபோது உயிர்இறப்பது இல்லையே**
**உடம்புமெய் மறந்துகண்டு உணர்ந்து ஞானம் ஓதுமே**

**சிவ- 91**

**ஓம்நமசி வாயமே உணர்ந்து மெய் உணர்ந்தபின்**
**ஓம்நமசி வாயமே உணர்ந்து மெய் தெளிந்தபின்**
**ஓம்நமசி வாயமே உணர்ந்து மெய் உணர்ந்தபின்**
**ஓம்நமசி வாயமே உட்கலந்து நிற்குமே**

**சிவ- 110**

**அம்மையப்பன் அப்புநீர் அறிந்ததே அறிகிலீர்**
**அம்மையப்பன் அப்புநீர் அரியயன் அரனுமாய்**

**அம்மையப்பன் அப்புநீர் ஆதியாதி ஆனபின்**
**அம்மையப்பன் அன்னையன்றி யாருமில்லை ஆனதே**

**சிவ- 146**

சிவாக்கியரின் பல பாடல்கள் சொல் பொருள் பின்வருநிலை அணியாகும்.

**வேற்றுப் பொருள் வைப்பணி**

**நட்ட கல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே**
**சுற்றிவந்து மொணமொணென்று சொல்லும் மந்திரமேதாம்**
**நட்டகல்லும் பேசுமோ நாதனுள் இருக்கையில்**
**சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ**

தெய்வம் என்று கல்லை நட்டு அதற்குப் பூக்களைச் சாத்தினால் அவற்றின் மணத்தை அக்கல் அறியுமோ?பேசுமோ என்று கேட்பது போலும் சட்டியில் சமைத்த கறியின் சுவையை ச் சட்டியும் அதில் இடும் அகப்பையும் அறியுமோ என்பதே வேற்றுப் பொருள் வைப்பணியாகும்.

**வருணனை**

சிவவாக்கியர் இயற்கையோடு சிவபெருமானை வர்ணனை செய்துள்ளார் அவை,

**மண்ணும்நீ விண்ணும்நீ மறிகடல்கள் ஏழும்நீ**
**எண்ணும்நீ எழுத்தும்நீ இசைந்தபண் எழுத்தும்நீ**
**கண்ணும்நீ மணியும்நீ கண்ணுள் ஆடும் பாவைநீ**
**நண்ணும்நீ நின்றபாதம் நண்ணுமாறு அருளிடாய்**

**சிவ- 9**

**சத்திநீ தயவும்நீ தயங்குசங்கின் ஓசைநீ**
**சித்திநீ சிவனும்நீ சிவாயமாம் எழுத்துநீ**
**முத்திநீ முதலும்நீ மூலரான தேவர்நீ**
**அத்திறமும் உம்முள்ளே அறிந்துணர்ந்து கொள்ளுமே**

**சிவ- 249**

இப்பாடல்களைப் போன்றே பாடல் 61, 62 ஆகிய பாடல்களில் வருணனையோடு அமைத்துள்ளார்.

**பட்டினத்தார்**

**அணி**

**தன்மையணி**

**முதல்வனைத் தில்லையுள் முளைத்தெழுஞ் சோதியை**
**அம்பலத் தரசனை ஆனந்தக் கூத்தனை**
**நெருப்பினில் அரக்கென நெக்குநெக் குருகித்**
**திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை**
**நினைமின் மனமே நினைமின் மனமே**

**பட்டடினத்தார் - 9**

இப்பாடலில் சிவபெருமானின் தன்மை உள்ளதுஉள்ளபடியே கூறப்பட்டுள்ளது.

**உவமையணி**

பட்டினத்தார் பாடல்களில் அதிகமான உவமையணியைக் கையாண்டுள்ளார்.அதிகமாக கச்சி திரு அகவல் பெண்ணின் முடி முதல் கால்வரை கூற உவமையைப் பயன்படுத்தியுள்ளார். சான்றாக,

**முள்ளும் கல்லும் முயன்றும் நடக்கும்**

**உள்ளங் காலைப் பஞ்சென உரைத்தும்**

**பட்டினத்தார் - 31,34**

**வெட்டிமுறிக்கும் மரம்போல் சரீரத்தை வீழ்த்திவிட்டால்**

**பட்டடினத்தார் - 2-2**

**பருத்திப் பொதியினைப் போல் வயிறு பருக்கத்தங்கள்**

**பட்டினத்தார் - 16.1**

**கண்டம் கரியதாம் கண்முன் றுடையதாம்**
**அண்டத்தைப் போல அழகியதாம் தொண்டர்**
**உடல்உருகத் தித்திக்கும் ஓங்குபுகழ் ஒற்றிக்**
**கடலருகே நிற்கும் கரும்பு**

**பட்டினத்தார் நான்கு.வரி .160**

இப்பாடலில் இறைவனின் கண்டத்தை நீல நிறமாக உள்ளதையும் முக்கண் உடையவர் என்பதையும், திருமேனி ஆகாயத்தைப் போல் அழகாக உள்ளது என்பதையும் உவமையாகக் கூறியுள்ளார்.

***நாப்பிளக்கப் பொய்உரைத்து நல்நிதியம் தேடி***
***நலன்ஒன்றும் அழியாத நாரியரைக் கூடிப்***
***பூப்பிளக்க வரும்ஏழைப் புற்றீசல் போலப்***
***புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்***
***காப்பதற்கும் வகையறியீர் கைவிடவும் மாட்டீர்***
***கவட்டுத்தோல் மரத்துளையில் கால்நுழைத்துக் கொண்டே***
***ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்குதனைப் போல***
***அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீரே***

**பட்டினத்தார் 190**

இப்பாடலில் பொய் பேசும் பெண்களுடன் சேர்ந்து பூமியானது பிளவுறும்படி வெளிப்படும் புற்றில் இருந்து புறப்படும் ஈசல்களைப் போல புலபுலவெனவும் கலகலஎனவும் பிள்ளைகளைப் பெறுகின்றீர் என்று கூறியுள்ளார்.

**முன்னம்நீ செய்ததவம் முப்பாலும் சேரும் அன்றிப்**
**பொன்னும் பணிதிகழும் பூவையும் அங்கேவருமோ**
**தன்னைச் சதமாகச் சற்குருவைப் போற்றாமல்**
**கண்ணற்ற அந்தகன்போய் காட்சியற்றாய் நெஞ்சமே**

**பட்டி நா வரி பாடல் - 201**

**அற்புதமாய் இந்தஉடல் ஆவி அடங்குமுன்னே**
**சற்குருவைப் போற்றித் தவம்பெற்று வாழாமல்**
**உற்பத்தி செம்பொன் உடையைபெரு வாழ்வைநம்பிச்**

**சர்ப்பத்தின் வாயில் தவளைபோல் ஆனேனே**

**பட்டி நா வரி பாடல் - 205**

இப்பாடலில் சற்குருவைப் போற்றி தவவாழ்வைச் செய்யாமல், சிவந்த பொன், பொய்யான வாழ்வை நம்பி பாம்பின் வாயில் அகப்பட்ட தவளை போல் ஆனேன் என்று உவமையாகக் கூறியுள்ளார்.

**நிலைவிட்டு டுடலைஉயிர் நீங்கி அகலுமுன்னே**
**சிலைதொட்ட வேடன்எச்சில் தின்றானைச் சேராமல்**
**வலைபட் டுழலுகின்ற மான்போல் பரிதவித்துத்**
**தலைகெட்ட நூல்அதுபோல் தட்டழிந்தாய் நெஞ்சமே**

**பட்டி நா வரி பாடல் - 221**

**மாணிக்கத் துள்ஒளிபோல் மருவி இருந்தாண்டி**
**பேணித் தொழும் அடியார் பேசாப் பெருமையன்காண்**

**பட்டி இர வரி பாடல் - 117**

**இரும்பில்உறை நீர்போல எனைவிழுங்கிக் கொண்டாண்டி**
**அரும்பில்உறை வாசனைபோல் அன்றே இருந்தாண்டி**

**பட்டி இர வரி பாடல் - 147**

**அக்கினிகற் பூரத்தை அறவிழுங்கிக் கொண்டாற்போல்**

**பட்டி இர வரி பாடல் - 148**

**கடல்நீரும் ஆறும்போல் கலந்துகரை காணேண்டி**
**உடலும் உயிரும்போல் உள்கலந்து நின்றாண்டி**

**பட்டி இர வரி பாடல் - 149**

**பொன்னும்உரை மாற்றம்போல் பொருவரிய பூரணன்காண்**
**மன்னுமனு பூதியடி மாணிக்கத் துள்ஒளிபோல்**

**பட்டி இர வரி பாடல் - 150**

நீர்ஒளிபோல் எங்கும் நிறைந்த நிராமயன்காண்
பார்ஒளிபோல் எங்கும் பரந்த பராபரன்காண்

பட்டி இர வரி பாடல் - 155

நூலால் உணர்வரிய நுண்மையினும் நுண்மையன்கான்
பாலுமறு சர்க்கரைபோல் பரந்தபரி பூரணன்காண்

பட்டி இர வரி பாடல் - 156

உளக்கண்ணுக் கல்லால் ஊன்கண்ணால் ஒருமதோ
விளக்குச் சுடர்ஒளிபோல் மேவி இருந்தாண்டி

பட்டி இர வரி பாடல் - 157

கல்லுள் இருந்த கனல்ஒளிபோல் காரணமாய்ப்
புல்லி இருந்தும் பொருவரிய பூணன்காண்

பட்டி இர வரி பாடல் - 158

பொற்பூவும் வாசனைபோல் போதம் பிறந்தார்க்குக்
கற்பூவும் வாசனைபோல் காணாக் கயவர்க்கு

பட்டி இர வரி பாடல் - 159

மைக்குழம்பும் முத்தும்போல் மருவிமற வாதவர்க்குக்
கைக்குள் கனியாகும் கருஅறுத்த காரணர்க்கு

பட்டி இர வரி பாடல் - 160

சந்திரனை மேகமது தான்மறைத்த வாறது போல்
பந்தமுற யானும்உனைப் பார்க்கிலேன் பூரணமே

பட்டி இர வரி பாடல் – 270

நீர்மேல் குமிழிபோல் நிலையற்ற காயம்இதைத்
தாரகம் என் றெண்ணிநான் தட்டழிந்தேன் பூரணமே

பட்டி இரண் வரி பாடல் - 272

**இரதம் பிரிந்துகலந் தேகமா மாறேபோல்**
**விரகம் தவிர்ந்தணல்பால் மேவினையே நெஞ்சமே**

**பட்டி இர வரி பாடல் - 318**

**சோதியான் சூழ்பனிநீர் சூறைகொளும் ஆறேபோல்**
**நீதிகுரு வின்திருத்தாள் நீ பெற்றாய் நெஞ்சமே**

**பட்டி இர வரி பாடல் - 319**

பட்டினத்தார் பாடல்களில் அதிகமான உவமையைக் கையாண்டு உள்ளார் என்பதை இவர் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது.

**உருவகம்**

**கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை**

**பட்டி ஐந்து வரி பாடல் - 7-5**

**நாற்றப் பாண்டம் நான்முழுத் தொன்பது**
**பீற்றல் துண்டம் போய்ச்சுரைத் தோட்டம்**
**அடலைப் பெரிய சுடலைத் திடருள்**
**ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்**
**ஓயா நோய்க்கிடம் ஓடும் மரக்கலம்**

**பட்டி ஐந்து வரி பாடல் – 13**

**மாயா விகாரம் மரணப் பஞ்சரம்**
**சோற்றுத் துருத்தி தூற்றும் பத்தம்**
**காற்றில் பறக்கும் கானப் பட்டம்**
**விதிவாழித் தருமன் வெட்டும் கட்டை**
**சதுர்முகம் பாணன் தைக்கும் சட்டை**

**பட்டி ஐந்து வரி பாடல் - 14**

**தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்**

**பட்டி ஐந்து வரி பாடல் - 23-5**

**பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்**

**பட்டி ஐந்து வரி பாடல் - 26-1**

**அடிமலர்க் கமலத்துக்  கபயநின் அடைக்கலம்**

**பட்டி ஐந்து வரி பாடல் - 27-2**

**பெண்ணாகி வந்தொரு மாயப் பிசாசம் பிடித்திட்டென்னைக்**

**பட்டி நான்கு வரி 23-1**

**ஓட்டைத் துருத்தியை உடையும் புழுக்கடைட்டை**

**212-1**

**கேடுவரும் என்றறியேன் கெடுமதி**
**ஆணாகிப் பெண்ணாகிப் அலியாகி வேற்றுருவாய்**
**மானாகி நின்ற வகையறியேன் பூரணமே**

**இர.வரி பா. 235**

இப்பாடல்ளில் உருவகஅணி பயின்றுவந்துள்ளது.

**உயர்வு நவிற்சி அணி**

**நான் எத்தனை புத்தி சொன்னாலும் கேட்கிலை நன்நெஞ்சமே**
**ஏன்இப் படிகெட் டுழலகின் றாய் இனி ஏதுமில்லை**
**வானத்தின் மீனுக்கு வன்தூண்டில் இட்ட வகையது போல்**
**போனத்தை மீள நினைக்கின் றனை என்ன புத்தியிதே**

**நான்கு.வரி.பா. 129**

இப்பாடலில் வானத்தில் உள்ள மீனுக்கு வன் தூண்டில் இடுவது வானத்தில் உள்ளநட்சத்திர மீனைப் பிடிக்க என்று உயர்வு நவிற்சி அணியை அறியமுடிகின்றது.

**சொற்பொருட்பின்வருநிலையணி**

செய்யுளில் முன்னர் வந்த ஒரு சொல்லே பின்வரும் பல இடங்களில் வந்து முன்னர் உணர்த்திய பொருளையே உணர்த்துமாயின் அது சொல்பொருள் பின்வரு நியைணி ஆகும்.

**கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி**
**நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின் அஞ்செழுத்தைச்**
**சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்**
**எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகப்பனே**

**நான்கு.வரி.பா.230**

இப்பாடலில் பிழையும் என்ற சொல் ஒரே பொருளில் வந்து அமைவதை இதற்குச் சான்றாக கூறலாம்.

**ஆறுண்டு தோப்புண் டணிவிதி அம்பலம் தானுமுண்டு**
**நீறுண்டு கரந்தை நெடுங்கோ வணமுண்டு நித்தம் நித்தம்**
**மாறுண் டுலாவி மயங்கும் நெஞ் சேமனை தோறும்சென்று**
**சோறுண்டு தூங்கிப்பின் சும்மா இருக்கச் சுகமும் உண்டே**

**நான்கு.வரி.பா.98**

**பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்திட்ட பிச்சையெல்லாம்**
**நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன் மங்கையைத்**
**தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்மை சொல்லிச்**
**சேய்போல் இருப்பர்கண் டீர்உண்மை ஞானம் தெளிந்தவரே**

**நான்கு.வரி.பா.100**

இப்பாடல்கள் சொற்பொருள் பின்வரு நிலையணி க்குச் சான்றாக அமைந்துள்ளது.

**புராணச்செய்தி**

**பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்**
**திருமிற் றடக்கிய சிவனே அடைக்கலம்**
**அடங்கிலும் அடக்கிடும் கடுங்கொலைக் காலனைக்**
**கால்எடுத் தடக்கிய கடவுள் நின் அடைக்கலம்**
**உலகடங் கலும்படைத் துடையவன் தலைபறித்** 19
**திடக்கையில் அடைக்கிய இறைவ நின் அடைக்கலம்**

20-1

இப்பாடலில் பாற்கடலைக் கடைய அதில் உண்டான விடத்தைக் கண்டத்தில் அடக்கியவன் என்று எல்லா உயிர்களையும் பரிக்கும் யமனைத் திருவடித் தாக்கி உதைத்தாலும் எல்லா உயிர்களைப் படைக்கும் பிரம்மனின் தலையைக் கிள்ளி இடக்கையில் அடக்கித்தாங்கிய இறைவன் எனப் புராணச் செய்தியை அறியமுடிகின்றன.

**நாமநட்டம் ஆதைடி நவில இடம் இல்லையடி**
**காமனைக்கண் ணால்எரிக்கக் கனல்வீழ்ந்த காரணன்காண்**

இரண்டு வரி-176

இதில் காமனை எரித்த செய்தியை அறியமுடிகிறது.

**சிவபெருமானின் தோற்ற வருணனை :**

**இடையில் புலித்தோல் இருந்தநலம் பாரேனோ**
**விடையில் எழுந்தருளும் வெற்றிதனைப் பாரேனோ**

இரண்டு வரி-48

**ஆனைஉரி போர்த்த அழகுதனைப் பாரேனோ**
**மானைப் பிடித்தேந்தும் மலர்கரத்தைப் பாரேனோ**

இரண்டு வரி-49

மாண்டார் தலை பூண்ட மார்பழகைப் பாரேனே
ஆண்டார் நமக்கென் றறைந்து திரியேனோ

இரண்டு வரி -50

கண்டம் கறுத்தநின்ற காரணத்தைப் பாரேனோ
தொண்டர் குழுவில் நின்ற தோற்றமதைப் பாரேனோ

இரண்டு வரி -51

கங்கையொடு திங்கள்நின்ற காட்சிதனைப் பாரேனோ
பொங்கரைவத் தான் சடையில் பூண்டவிதம் பாரேனோ

இரண்டு வரி -56

சரக்கொன்றை பூத்த சடைக்காட்டைப் பாரேனோ
எருக்கறூ மத்தை அணி ஏகாந்தம் பாரேனே

இரண்டு வரி -57

தூக்கிய காலும் துடிஇடையும் பாரேனோ
தாக்கும் மூலகண்மேல் தாண்டவத்தை பாரேனே

இரண்டு வரி -59

வீசும் கரமும் விகசிதமும் பாரேனோ
ஆசை அளிக்கும் அபயகரம் பாரேனோ

இரண்டு வரி -60

அரிபிரமர் போற்ற அமரர் சயசயெனப்
பெரியம்மை பாகம்வளர் பேரகைப் பாரேனோ

இரண்டு வரி -61

சுந்தர நீற்றின் சொகுசுதனைப் பாரேனோ
சந்திர சேகரனாய்த் தயவுசெய்தல் பாரேனோ

இரண்டு வரி -62

பாடல் 43 முதல் 62 வரை சிவபெருமானின் தோற்றத்தின் அழகைப் பாடியுள்ளார்.

**பழமொழி**

| | | |
|---|---|---|
| **ஆற்றில் கரைத்த புளி** | **நான்கு வரி** | **22-1** |
| **தூண்டில் அகப்பட்டுத் துடி கெண்டை** | **நான்குவரி** | **218-4** |
| **கைக்குள் கனியாகும்** | **இரண்டுவரி** | **160-2** |
| **கிளிஞ்சிலை வெள்ளி என்பர்** | | **162-2** |
| **ஆலாம் விருட்சமடி அளவிலாச் சாகையடி** | | **168-1** |
| **காதற்ற ஞானமடி காண்பார்** | | **175-2** |

எனப் பட்டினத்தார் பாடல்களில் பழமொழி பயின்று வந்துள்ளது.

**பத்திரகிரியார்**

**உவமையணி**

பத்திரகிரியார் பாடல்களில் உவமையை அதிகமாகக் கையாண்டு பாடலை அமைத்துள்ளார். அவற்றில் சில பாடல்களை அறியலாம்.

**சேயாச் சமைந்து செவிடுஊமை போல்திரிந்து**
**பேய்போ லிருந்துன் பிரமை கொள்வ தெக்காலம்**

**பத்திரகிரியார் - 8**

இப்பாடலில் குழந்தையைப் போல் இருந்து, காது கேளாதார் போல், வாய் பேசாதார் போல், சித்தப்பிரம்மை பிடித்தவர் போல் இருந்தால் தான் கடவுளின் நினைவுமாக இருக்கும் நிலைக்கு உவமையாகக்கூறியுள்ளார்.

**தூண்டு விளக்கணையத் தொடர்ந்திருள்முன் சூழ்ந்தாற்போல்**
**மாண்டு பிழைத்துவந்த வகைதெரிவ தெக்காலம்**

**பத்திரகிரியார் - 26**

விளக்கின் ஒளி மறைந்ததும் இருள் சூழ்வதுபோல் மரணம் வந்ததும் அடுத்த பிறவி அடையும்.இவற்றை விளக்கின் ஒளிக்கு மரணத்தை உவமையாகக் கூறியுள்ளார்.

**காண்டத்தை வாங்கிக் கருமேகம் மீண்டதுபோல்**
**பாண்டத்தை நீக்கிப் பரமடைவ தெக்காலம்**

**பத்திரகிரியார் - 45**

**வம்படிக்கும் மாதருடன் வாழ்ந்தாலும் மன்னுபுளி**
**யம்பழமும் ஒடும்போ லாவதினி யெக்காலம்**

**பத்திரகிரியார் -55**

மனிதனாக வாழ்ந்தாலும் இறைவனோடு கலந்து வாழும் வாழ்க்கையைப் புளியம்பழமும் ஓடும்போன்று வாழ்வது எக்காலம் என்று உவமையாகக் கூறியுள்ளார்.

**பற்றற்று நீரிற் படர்தாமரை யிலைப்போல்**
**சுற்றத்தை நீங்கி மனந் தூரநிற்ப தெக்காலம்**

**பத்திரகிரியார் -56**

தாமரையில் நீர் ஒட்டாது அதுபோல் சுற்றத்தை விட்டு நீங்கி தூரநிற்பது எப்போது என்றும் பற்றுக்களை நீங்கினால் தான் இறைவனை அடையமுடியும் என்று கூறியுள்ளார்.

**கண்ணா லருவி கசிந்து முத்துப் போலுதிரச்**

**பத்திரகிரியார் - 62**

கண்களில் இருந்து விழும் கண்ணீரை "முத்து" என்றும் கண்ணீரை "அருவிபோல்" விழும் துளியை உவமையாக முத்து என்றும் அருவி என்றும் கூறியுள்ளார்.

**ஒழிந்தகருத் தினைவைத்து உள்ளெலும்பு வெள்ளெலும்பாய்க்**
**கழிந்தபிணம் போலிருந்து காண்பதினி யெக்காலம்**

**பத்திரகிரியார் -126**

**மத்தடுத்து நின்று மருளாடு வார்போல**
**பித்தடுத்து நின்னருளைப் பெற்றிருப்ப தெக்காலம்**

**பத்திரகிரியார் -138**

**இயங்குஞ் சராசரத்தில் எள்ளும் எண்ணெ யும் போல**
**முயங்கும் அந்த வேத முடிவறியவ தெக்காலம்**

**பத்திரகிரியார் -159**

**கடத்துகின்ற தோணிதனைக் கழைகள் குத்திவிட்டாற்போல்**

**பத்திரகிரியார் -165**

**கூட்டிலடைப் பட்டுபுழு குளவியுருக் கொண்டது போல்**

**பத்திரகிரியார் -168**

**கடலில் ஒளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்**

**பத்திரகிரியார் -169**

**அருணப் பிரகாசம் அண்டமெங்கும் போர்த்ததுபோல்**

**பத்திரகிரியார் -170**

**பொன்னிற் பலவிதமாம் பூணுமுன் டானது போல்**

**பத்திரகிரியார் -171**

**சூரிய காந்தியொறி சூழ்ந்து பஞ்சைச் சுட்டதுபோல்**

**பத்திரகிரியார் -173**

**இரும்பிற் கனல்மூட்டி இவ்வுருபோய் அவ்வுருவாய்க்**
**கரும்பிற் சுவைரசத்தைக் கண்டறிவ தெக்காலம்**

**பத்திரகிரியார் -174**

**கருக்கொண்ட முட்டைதனைக் கடலாமை தான் நினைக்க**
**உருக்கொண்ட வாறது போல் உனையடைவ தெக்காலம்**

**பத்திரகிரியார் -175**

**தீ விட்டுப் பாய்ந்து வெளியில் வருவார்போல்**
**கூடுவிட்டுப் பாயும் குறிப்பறிவ தெக்காலம்**

**பத்திரகிரியார் -176**

**கடைந்த வெண்ணெய் மோரிற் கலவாத வாறது போல்**
**உடைந்து தமியேன் உனைக்காண்ப தெக்காலம்**

**பத்திரகிரியார் -177**

இப்பாடலில் உள்ள கருத்தும் சிவவாக்கியர் சித்தரில் இடம் பெற்றுள்ள பாடலின் கருத்தும் ஒரே கருத் தென்பது விளங்குகிறது.

**" இருளை ஒளிவிழுங்கி ஏகவுருக் கொண்டாற்போல்**
**அருளை விழுங்கும் இருள் அகன்று நிற்ப தெக்காலம்**

**பத்திரகிரியார் -178**

**மின்னெழுந்து மின்னொடுங்கி விண்ணில் உறைந்தாற்போல்**
**என்னுள்நின்றது என்னுள்ளே யானறிவ தெக்காலம்**

**பத்திரகிரியார் -179**

**கண்ட புனற்குடத்திற் கதிரொளிகள் பாய்ந்தாற்போல்**
**கொண்ட சொரூபமதைக் கூர்ந்தறிவ தெக்காலம்**

**பத்திரகிரியார் -180**

**விளங்குகின்ற தாரைகையை வெய்யோன் மறைத்தாற்போல்**
**களங்கமற வுன்காட்சி கண்டறிவ தெக்காலம்**

இப்பாடலில் வெய்யோன் தாரகையை மறைத்தது என்பது நட்சத்திரத்தைச் சூரியன் மறைத்தது போல் இறைவனின் காட்சியும் மறைவதால் நான் காண்பது எப்போது என்று உவமையாகக் கூறியுள்ளார்.

இவ்வாறுபத்திரகிரியார் பாடல்களில் உவமையணி பயின்று வந்துள்ளது.

**அகத்தியர்**

**ஏணியா யிருக்குமடா அஞ்சு வீடே**
**ஏகாந்த மாகியவவ் வெழுத்தைப் பாரு**
**தோணிபோற் காணுமடா அந்த வீடு**
**சொல்லாதே ஒருவருக்குந் துறந்திட் டேனே**
**அகத்தியர் 5-4**

என்ற உவமை அமைந்துள்ளது.

**கருவூரார்**

**அணி**

**உவமை**

**கள்ளரைப் போல் மயங்காதே மவுனத் துன்று**
**கண்ணிணையுந் திறக்காதே கருதிப் பாரே**
**கருவூரார் 9,4**

இப்பாடலில் இறைவன் தன்னைக்காணும் போது சத்தம் இல்லாது போகும் கள்வர் போல் மயங்காதே திருடன் தவறு செய்து விட்டதைப் போன்று இல்லாமல் இறைவனைக் காணும் போது மவுனமாய் தவநிலையிலிரு. இப்போது கண்களைத் திறக்காமல் இறைவனையே கருதிப்பார்.அங்கு இறைவன் காட்சி தருவார்.இப்பாடலில் உவமையணி பயின்றுவந்துள்ளது.

**தாய்ச்சமர்த்துப் பாராடதே தாயைப் போற்று**
**சற்குருபோ லுற்பனத்தைத் தாய்ச் சொல் வாளே**
**கருவூரர். 14-4**

**தின்னாத விடக்கெடுத்துத் தின்னச் சொன்னாள்**
**செத்தசவம் போலிருந்து சேபிக்கச் சொன்னாள்**
**கருவூரர். 27-2**

**கொழுந்துவிட்டு வளர்ந்தெரியும் அனலை மூட்டிக்**
**குடிகேடி சத்துருப்போல் கூச்சலிட்டாள்**
**கருவூரர். 28-2**

இப்பாடல்களில் உவமையணி பயின்று வந்துள்ளன.

**உருவகஅணி**

**காய்ச்சுதடா பூத்தமலர் கருத்தை யூன்று**
**கனியாகும் அக்கனியைக் கண்டு கொள்ளே**
**கருவூரர்.8-4**

இப்பாடலில் "காய்ச்சுதடா பூத்தமலர்"

**உதித்தெழுந்த மூன்றெழுத்தை யறியா ரையோ**
**கொட்மொரு தேளுருவாய் நிற்கும் பாரு**
**கூட்டமிட்டுப் பாராதே குறிகள் தோன்றும்**
**கருவூரர். 24-3**

இப்பாடலில் மூலாதார முக்கோணத்தை ஒட்டி எழுந்தது பாலாமந்திரம் மூன்றால் (ஐம், க்லீம், ஸௌ) எல்லாம் தெரியும். கொட்டும் தேள் போல் உருவம் தெரியும்.ஆனால் அது அருளுருவானதால் வதைக்காது கூடி பேசி யோகம் செய்யாதே பல குறிகள் தோன்றும்.உருவக அணி அமைந்துள்ளது.

**கூடுகிற முக்கோணப் பரங்களாகிக்**
**குறுகுமதி பெருகுமதி கூறொண் ணாதே**
**கருவூரர். 26-4**

இப்பாடல்களில் உருவக அணி பயின்று வந்துள்ளன.

**புராணச் செய்தி**

**பாதிமதி சூடியே யிருந்த சாமி**
**பத்துவய தாகுமிந்த வாமி தானே**
**கருவூரர் 1-4**

என்ற பாடலில் பாதி நிலவைச் சூடிய சிவன் இவளின் கணவன் ஆவார். இவளுக்கு உருவமது பத்து வயதான சிறுமியே புராணச் செய்தியை அறியமுடிகின்றன.

**வால்மீகர்**

**அணி**

**உவமை**

**ஓமப்பா கல்செம்பைத் தெய்வ மென்றே**
**உருகுவார் பூசிப்பார் கிரியை யென்பார்**
***வாமப்பா யோகமென்று கணிகாய் தின்று***
***வாய்பேசா வூமையைப்போல் திரிகு வார்கள்***
**காமப்பா ஞானமென விண்டு மேலும்**
**காக்கைபித்தன் மிருகம்போல் சுற்றுவாரே.**
**வான்மீ- 4**

இப்பாடலில் யோகம் செய்வதாகக் கூறி, காய் கனிகளைத் தின்றவர் ஊமைப் போல் திரிவார்கள்.உண்மையான ஊமை அல்ல வாயில் உணவு அருந்தி பேசுவதற்கு நேரம் இல்லை என்ற போலியான யோகத்தை உவமையாகக் கூறியுள்ளார்.மேலும் காக்கை பித்தன் என்றும் மிருகம் போல் சுற்றுவார் என்றும் கூறியுள்ளார்.

**நில்லென்ற பெரியோர்கள் பாடையாலே**
**நீடுலகம் தன்னுள்ளே நாலுவேதம்**
**வல்லமையாய்ச் சாத்தரங்க ளிருமூன் றாக**
**வயிறுபிழை புராணங்கள் பதினெட் டாகக்**

***கல்லுகளைக் கரைப்பதுபோல் வேதாந் தங்கள்***
**கட்டினா ரவரவர்கள் பாடை யாலே**

**வான்மீ- 8**

இப்பாடலில் கல்லும் கரையுமாறு வேதாந்தங்கள் இருந்தன என்று உவமையாகக் கூறியுள்ளார்.

***தானவனா யிருக்கவென்றால் வாசி வேணும்***
***வானவனாய் நின்றவர்கட் கெல்லாஞ் சித்தி***
***வானுக்குள் மனமிருக்க மதிபோல் காணும்***

***வான்மீ- 16***

என்னும் பாடலின் மூலம் வானுக்குள் மனதை வைத்தால் நிலவு போல் ஒளி தோன்றும், என்று உவமையாகக் கூறியுள்ளார்.

இவ்வியலில் சித்தர்கள் திருமூலர், வால்மீகனார், கொங்கணர், திருவள்ளுவர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகியார், அகத்தியர், கருவூரார், நந்தீசர்பாடல்களில் அமைந்துள்ள யாப்பு, நடை, தொடைநயம், இதில் எதுகைத்தொடை, மோனைத்தொடை, முரண், இயைபு, அந்தாதி, அடுக்குத்தொடர் என்ற நிலையிலும், அணிகள் இதில் சொல்பொருள் பின் வருநிலையணி, உவமை அணி, எடுத்துக்காட்டு உவமையணி, உருவக அணி, வேற்றுப் பொருள் வைப்பணி, உயர்வு நவிற்சி அணி, தன்மையணி, வஞ்சப் புகழ்ச்சியணி என்ற நிலையில் தனித்தனியாக இரு நிலையில் அமைத்து ஆராயப்பட்டுள்ளன.

இவ்வியலில் சித்தர் பாடல்களில் சொல்லாட்சித்திறன், கொங்கணர், பட்டினத்தார், கருவூரார்இவர்களின் பாடல்களில் புராணச் செய்திகள் மிகுந்து காணப்படுகிறன. கொங்கணர், பட்டினத்தார், பாடல்களில் பழமொழியும் சிவவாக்கியர், பட்டினத்தார் பாடலில் வருணனையும் அறியமுடிகின்றன.

வண்ணப்பா தமிழிலக்கிய வரலாற்றில் தொங்கல் என்னும் உறுப்பமைத்து முதன் முதலாக வண்ணம் பாடியவர் பட்டினத்தார். இவரின் பாடலில் உடல் கூற்றின் வரலாற்றைக் கருவில் உருவானது முதல் காட்டில் எரியூட்டுவது வரையில் இனிய முறையில் பாடலை அமைத்துள்ளார்.மற்ற சித்தர்கள் பாடல்களில் இல்லாத வண்ணம் முறையை இவர் அமைத்துப் பாடியுள்ளார்.

## அடிக்குறிப்பு

1.ஞா.மாணிக்கவாசகன்,தொல்காப்பியம்,ப.570

2.மேற்படி.ப.528

3.மேற்படி.ப.529

4.மேற்படி.ப.529

5.மேற்படி.ப.529

6.மேற்படி.ப.530

7. மேற்படி.ப.530

8.மேற்படி.ப.528

9.மேற்படி.ப.531

10.நன்னூல்.ப.120

11. மேற்படி.ப.482

12. ஞா.மாணிக்கவாசகன்,தொல்காப்பியம்,ப.237.

## சமய நோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடுகள்

சித்தர்களில் திருமூலர், வான்மீகர், கொங்கணர், திருவள்ளுவர், சிவவாக்கியார், பட்டினத்தார், பத்திரகிரியார், அகத்தியர், கருவூரார், நந்திதேவர் பாடல்கள் மூலம் அறியலாகும் உயிர், நாடி, உருவவழிபாடு, மூடநம்பிக்கை இதன் அடிப்படையில் சமய நோக்கு ஆராயப்பட்டுள்ளன.

**உயிர்**

பதி, பசு, பாசம் எனப்படும் மூன்றுனுள் நடுவனதாக வைத்துச் சுட்டப்படுவதே உயிராகும். இவ்வுயிரே பாசங்களால் கட்டுற்ற நிலையில் உள்ள போது "பசு" என்ற சொல்லால் குறிக்கப்படுவர். சித்தாந்த சாத்திரங்கள் உயிரைச் சீவன், புருடன், ஆவி, சிற்றுயிர், உள்ளம், ஆன்மா, சதசத்து என அதன் வெவ்வேறு இயல்புகளைக் குறிக்கும் போது, வெவ்வேறு பெயர்களால் பல இடங்களிலும் கூறுகின்றன.[1]

**நாடி**

***அஞ்சான ஐந்து பத்து நாடித்தன்மை***
***அப்பனே சொல்லுகின்றேன் அறிவாய்க்கேளு***
***துஞ்சாத இடையான பின் சுழினையாகி***
***துலங்குகின்ற காந்தாரி யத்தியோடு***
***பிஞ்சான சிங்குவையும் அலம்புருடன்***
***வேகமுள்ள குகுதனுடன் சங்கினி பத்தும்***

***நெஞ்சார நின்றதோர் நாடிபத்தும்***
***நேர்மையுள்ள பிரிதிவியின் கதிதான்பாரே[2]***

**அகத்தியர் சௌமிய சாகரம் – 42**

இப்பாடலின் மூலம் நாடிகளாக இடகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சங்கினி, அலம்புடை, புருடன், குகுதன், சிங்குவை

என்பவை பத்தும் நாடிகள் ஆகும். இவை இருக்கும் இடங்களையும், செயல்களையும் அறியலாம்.

1. **இடகலை**
2. **பிங்கலை**
3. **நடுநாசி**
4. **சுழுமுனை**
5. **காந்தாரி**
6. **அத்தி,**
7. **சங்கினி,**
8. **அலம்புடை,**
9. **புருடன்,**

குகுதன், சிங்குவை மேலே கூறப்பட்ட நாடியின் செயல்கள் சாம்பசிவம் பிள்ளை அகராதியிலுள்ள படி கூறப்பட்டதாகும்.[3]

**வாயு**

மனித உடலில் பத்துவிதமான வாயுக்கள் இயங்குவதாக சித்தர்கள் கூறுகின்றனர்.

*முறையாம் பிராணனபானன் வியானன்*
*மூர்க்கமா முதனானொடு சமானன்நாகன்*
*திறமையாங் கூர்மமொனடு கிருகரன்றான்*
*தேவதத்த னோடுதனஞ் சயனுமாம்*
*பிறமையா மதின்பிரிவு பிராணவாயு*
*பெருமூலா தாரத்திற் றோன்றித்தானே*

*உறமையா மகவையானும் மந்திரத்தால்*
*ஓங்கார முதலெழுத்தை யுன்னித்தானே[4]*

***யூகிமுனி தத்துவ ஞானம் – 44***

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்பவை உடலுள் இயங்கும் பத்து வாயுக்களின் பெயர்களாம்

இவற்றில் பிராணவாயு மூலாதாரத்தில் தோன்றி, அகவையெனும் மந்திரத்தால் ஓம்காரம் பிரணவத்தின் முதலெழுத்தாகிய அகாரத்தைப் பிடித்துக் கொள்ளும்.

**உயிர்**

**திருமூலர்**

*அடியாகி அண்டரண்டத் தப்பால் ஆகி*
*அகாரமெனு மெழுத்ததுவே பாதமாகி*
*முடியாகி நடுவாகி மூலந் தன்னில்*
*முப்பொருளுந் தானாகி முதலுமாகிப்*
*படியாய்முப் பாழ்ற்றுப் படிக்கு மப்பாற்*
*படிகடந்து பரஞ்சோதிப் பதியு மாகி*
*அடியாகு மூலமதே அகார மாகி*
*அவனவறாய் நின்றநிலை யறிவ தாமே*

**திருமூலர்– 1**

இப்பாடலில் அகாரம் என்னும் எழுத்து "ஓம்" என்பதில் முதல், நடு, முடி என்ற மூலாதார சொல்லாகவும் மும் மூர்த்திகளின் இடமாகக் குறிப்பிட்டுள்ளார்.

*மூலமெனு மாதார வட்டந் தானே*
*முச்சுடரும் முக்கோண மூன்று நாடி*

**திருமூலர் – 3-1**

என்னும் பாடலில் மூலாதாரம் எனும் ஆதார வட்டத்தில் முச்சுடரும் முக்கோணமாகவும் மூன்று நாடியாக இடகலை, பிங்கலை, சுழுமுனை என நாடியின் செயல்பாட்டினைக் கூறியுள்ளார்.

*எய்தரிய பரசிவத்தின் மூலந் தன்னில்*
*இருசுடரும் உதித்தொடுங்கு மிடமே யென்று*
*எய்தரிய பரசிவத்தின் மூலம் தன்னில்*
*இருசுடரும் உதித்துஒடுங்கம் இடமேஎன்று*
*மெய்தொழியுஞ் சுழுமுனையே கம்பமாகி*
*மெய்பொருளாஞ் சோதியென மேவி நிற்கும்*
*இவ்வகையே மூலமெனும் பாதந்தன்னை*
*இருநேர மற்றிடத்தே யிறைஞ்சிக் காணே* **திருமூலர் – 7**

இப்பாடலில் பரமசிவமாகிய மூலாதாரத்தில் இடகலை, பிங்கலை என்ற இரு நாடிகளும் உதித்து ஒடுங்கும் இடமாகும். இதன் நடுவே சுழுமுனை கம்பம் போல் உடல் உச்சி வரை நீண்டு சோதியாக இருக்கும் இதையே இருநேரமாக காலை, மாலை எனக் கண்டு வணங்க வேண்டும் என்றுதிருமூலர் கூறியுள்ளார்.

**சிவவாக்கியார்**

**உயிர்**

உடம்பில் “உயிர்” நாடியாக செயல்படுவதையும் அவற்றை எவ்வாறு அடக்கி குண்டலிணி சக்தியாக மாற்றும் முறையைச் சிவவாக்கியார் தமது பாடல்களில் விளக்கியுள்ளார். அவை,

*ஓடிஓடி ஓடிஓடி உள்கலந்த சோதியை*
*நாடிநாடி நாடிநாடி நாட்களும் கழிந்துபோய்*
***சிவவாக்கியார்-3***

என்னும் பாடல் மூலம் உடலில் கீழிருந்து மேலாக எங்கும் ஓடும்

குண்டலினி சக்தியால் நாடி உடம்பில் கலந்து நிற்கும். உள் ஒளியான சோதியான நாடியை "யோகம்" செய்வதன் மூலம் அந்த நாடியைக் காணலாம். அவ்வாறு காணாத மக்களின் வாழ்நாள் முடிந்து போகும் என்று கூறியுள்ளார்.

உயிரில் நாடி எவ்வாறு செயல்படும் என்றும் அந்த நாடியுள் ஒடுங்கிய வாயுவைக் கீழ் வரும் பாடல் மூலம் அறியமுடிகின்றன.

***உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவை***
***கருத்தினால் இருத்தியே கபாலம் ஏற்ற வல்லிரேல்***
***சிவவாக்கியார் - 4***

இப்பாடலின் மூலம் நாடியாக உருவம் கொண்டு பிராணனாகிய வாயு நாடியுள் ஒடுங்கும். அவ்வாறு ஒடுங்கிய வாயுவைக் கபாலம் ஆகிய தலை உச்சி வரை ஏறுமாறு செய்தால் முதியவர்களும் இளைஞர் ஆவர். பிராணாயாமம் முறைப்படிச் செய்தால் மூலாதாரத்தில் உள்ள சுழுமுனை நாடியில் பிராண வாயு செல்லும். அவ்வாறு செய்வதினால் தலையில் சிவனும் மூலதாரத்தில் பராசக்தியும் உள்ளதால் யோக முயற்சியில் . இருவரும் தலையில் கூடுவர் என்று அறியமுடிகிறது.

ஒரு உடம்பில் உயிர் பிரியும் போது அதைத் தடுத்து நிறுத்த முடியாது அந்த நிலையைச் சிவவாக்கியார் தம் பாடலில் விளக்கியுள்ளார். அவை,

***சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாத பட்டரே***
***வேர்த்து இரைப்பு வந்துபோது வேதம்வந்து உதவுமோ***
***மாத்திரைப் போதும் உளேமறிந்து நோக்கவல்லிரேல்***
***சாத்திரப்பை நோய்கள்ஏது சத்திமுத்தி சித்தியே***
***சிவவாக்கியார் - 10***

அனைத்து வித சாத்திரங்களையும் ஓதுகின்ற சட்டநாதர் என்னும் பட்டரே உடல் வியர்த்து, மூச்சு விட முடியாமல் இரைப்பு வந்து சாவின்

தலை வாசலில் நிற்கும் போது உன் சாவினைத் தள்ளிபோட வேதங்கள் வந்து உதவுமோ மாத்திரை ஒரு நொடியளவில் உடலில் உள் சென்று காண முடியுமா அப்படி கண்டால் சாத்திரப்பைகளும் தேவையில்லை நோயும், துன்பமும் இல்லை சத்திமுத்தியாகுமே.

இப்பாடலில் உடலை விட்டு உயிர் பிரியும் போது வேதங்களாலும் தடுத்து நிறுத்த முடியாது என்று கூறியுள்ளார்.

**மூன்று நாடிகள்**

நம் உடலில் வகையான நாடிகள் செயல்படுகின்றன அவற்றில் மூன்று நாடிகள் செயல்படும் நிலை, இடம், அவற்றை அறியும்நிலையும் சிவவாக்கியார் பாடலில் அறியமுடிகிறது.

***சங்கு இரண்டு தாரையொன்று சன்னல் பின்னல் ஆகையால்***
***மங்கிமாளு தேஉலகில் மானிடங்கள் எத்தனை***
***சங்குஇரண்டை யும்தவிர்த்து தாரையூத வல்லிரேல்***
***சிவவாக்கியர் -17***

இரண்டு சங்குகள் போல் ஒலிக்கும் இடா பிங்களா நாடிகள் ஆகும். ஒன்று ஊதும் தாரை போன்று நீளமாய் இருக்கும். இதுவே சுழுமுனையாகும். உலகில் உள்ள அனைத்து மானிடர்களின் உள் இடம் வலமாக நாகப்பிணையல் போல் இருக்கும் இவற்றிற்கு நடுவே நேராக சுழுமுனை அமைந்து இருக்கும்.

**நாடியை நிலைநிறுத்தும் முறை**

***மூலநாடி நன்னிலே முளைத்தெழுந்த சோதியை***
***நாலுநாழி உம்முளே நாடியே யிருந்தபின்***
***பாலனாகி வாழிலாம் பரப்பிரமம் ஆகலாம் ஆலமுண்***
***கண்டர் ஆணை அம்மை ஆணை உண்மையே***
***சிவவாக்கியர் - 64***

இப்பாடலில் மூலாதாரத்தில் இருந்து புறப்படும் சுழுமுனை நாடியில் தோன்றும் ஒளியை நான்கு நாழிகை நேரம் உமக்குள் நினைத்தவாறு தினமும் தியானம் செய்தால் முதியவர் இளைஞர் ஆவார். இது உண்மை நீலகண்டரின்மேலும் பராசக்தியின் மேல் ஆணை உண்மையே.

ஒரு நாழிகை என்பது 24 நிமிடம் ஆகும் நாலுநாழிகை நேரம் 4 24 96/60 = 1 மணி நேரம் 36 நிமிடம் நான்கு நாழிகையாகும். இவ்வாறு நாடியைநிலைநிறுத்தினால்மனிதனும்இறைவனின்நிலையைஅடையலாம்

**உடலை விட்டு உயிர் நீங்காமல் இருக்க மந்திரம்**

உடம்பில் உயிர் தலையை மீறிப் போகும் பிராணவாயுவை மீட்டு உடம்பிற்குள் அழைக்கும் மந்திரமாக “சிவாயநம” என்னும் ஐந்தெழுத்து மந்திரமாகப்பாடல் எண் **73** சிவவாக்கியார் விளக்கியுள்ளார்.

**உயிர் பிரியும் நிலை**

இயமன் வந்து உடலோடு மோதும் போது உயிர் பிரியும் நிலையை சிவவாக்கியார் தம் பாடலில் விளக்கியுள்ளார். அப்பாடல்,

***மாடுகன்று செல்வமும் மனைவிமைந்தர் மகிழவே***

***மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற நாளிலே***

***ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே***

***உடல்கிடந்து உயிர்கழன்று உண்மைகண்டு உணர்கிலீர்***

***சிவவாக்கியர் - 77***

என்பதாகும். இப்பாடலில் மாடுகள் பிற செல்வங்களும், மனைமக்களோடு மகிழ்ச்சியாக வாழும் போது இயமன் தூதர் உயிரோடு மோதும் போது உடல் கீழே கிடக்கும் உயிர் பிரிந்து போகும் என்பதை அறியலாம்.

*தில்லையை வணங்கிநின்ற தெண்டனிட்ட வாயுவே*

*எல்லையைக் கடந்துநின்ற ஏகபோக மாய்கையே*

*சிவவாக்கியார்- 84*

தில்லை என்பது "அநாகதம்" எனப்படும் இதயப் பகுதியில் மையம் கொண்ட வாயுவை தலையாகிய எல்லையைக் (கபால உச்சியை) கடந்து போகும் போது வெண் சிவப்பு ஒளியாகப் போய் மறையும் சொர்கலோகத்தில் மெய்கலந்து நின்றதே வெண் சிவப்பு என்பது உதய காலத்து அல்லது மாலையடங்கும் காலத்தில் தோன்றும் சூரிய ஒளி ஆகும்.

உயிர் பிரிந்த பின் உடல் அடையும் நிலையைப் பின் வரும் பாடலால் அறியமுடிகிறது,

***உயிரும் நன்மை யாலுடல் எடுத்துவந் திருந்திடும்***

***உயிர்உடம்பு ஒழிந்தபோது ரூபருப மாயிடும்***

***உயிர் சிவத்தின் மாய்கையாகி ஒன்றைஒன்று கொன்றிடும்***

***உயிரும்சக்தி மாய்கையாகி ஒன்றையொன்று தின்னுமே***

*சிவவாக்கியர் - 111*

உயிர் தான் செய்த நல் வினைப் பயனால் மனித உடல் எடுத்து வந்து பிறக்கும், தீய வினையால் விலங்காய், புழுவாய் வேறு பலவாய் பிறந்திடும். உயிர் போன பின்பு உடல் அழிந்து தன் வடிவத்தை இழந்திடும். உயிர் இன்னொரு உடலை அடைந்து அந்த உடலையும் அழிக்கும் அதாவது உயிர் இன்னொரு உயிருக்கான உடலைத் தின்னும்.

உயிர் உடலை வந்து அடைவதற்கு முன் உயிர் எங்கே இருந்தன என்பதைக் கீழ் வரும் பாடல் உணர்த்துகிறது.

*கருத்தரிக்கு முன்னெலாம் காயம்நின்ற தேயுவில்*

*உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்ப்புநின்றது அப்புவில்*

*அருள்தரிக்கு முன்னெலாம் ஆசைநின்ற வாயுவில்*

*திருக்குஅறுத்துக் கொண்டதே சிவாயமென்று கூறுமே*

*சிவவாக்கியர் - 160*

இப்பாடலில் கருவில் உடல் உண்டாகும் முன்பு அது எங்கே இருந்தது என்றால் சோதியில் என அறிக. உரு உண்டாவதற்கு முன் உயிர்ப்பு எங்கே இருந்தன என்றால் நீரிலேயாகும். அருள் கிடைப்பதற்கு முன் ஆசை நின்றது வாயுவாகும். இவைகளையே சிவாயநம என்ற மந்திரம் தீர்க்கும், என்று உரைக்கப்படுகிறது.

**பத்திரகிரியார்**

**உயிர்**

உயிரை ஆவி என்றும் ஆத்மா என்று பத்திரகிரியார் தம் பாடலில் மூலம் விளக்கியுள்ளார். அவை,

*பாவியென்ற பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல்*
*ஆவியென்ற சூத்திரத்தை யறிவதின எக்காலம்*

**பத்திரகிரியார்** -15

இப்பாடலில் பாவி என்ற பாழும் நரகில் வீழாமல் ஆவியாகி ஆத்மாவை அறிவது எப்போது.

இவர் ஆத்மா என்பது பொம்மையை ஆட்டும் சூத்திரக் கயிறு அதாவது உடலை ஆட்டும் சூத்திரக் கயிறு போல் ஆட்டிவைப்பதால் ஆவி என்றும் ஆத்மா என்றும் சூத்திரம் எழுதுகிறார்.

*தொடக்கைச் சமமெனவே சுமந்தலைந்து வாடாமல்*
*உடக்கைக் கழற்றி உனைஅறிவ தெக்காலம்*

**பத்திரகிரியார் - *46***

என்னும் பாடலில் உயிரானது தொடரும் பழைய வினை யாகவே மீண்டும் பிறப்பதையும் உயிருடன் உடலைச் சுமந்து அலையாமல் உடலைக் கழற்றி உன்னை அறிவது எப்போது.

உடலை நீக்கி உயிரானது இறைவனை அடைவது பற்றி கூறியுள்ளார்

*கூண்டுவிழுஞ் சீனமெள்ளக் கொட்டாவி கொண்டாற்போல்*
*மாண்டுவிழு முன்னேநான் மாண்டிருப்ப தெக்காலம்*

**பத்திரகிரியார் - *87***

உடலில் உயிர் நீங்குவதைக் கொட்டாவி கொண்டாற் போல் அதாவது மரணத்தில் வாய் பிளத்தலையைக் கூறியுள்ளார்.

*தோலேணி வைத்து தேறித் தூரநடந் தெய்க்காமல்*
*நூலேணி வைத்தேறி நோக்குவது மெக்காலம்*

**பத்திரகிரியார் - *90***

நரம்புகளால் ஆன இந்த உடலைப் பற்றாமல் யோக நாடிகளால் நோக்குவது எப்போது?. தோல் ஏணி - நரம்புகள் ஆகும் நூல் ஏணி நாடிகள் ஆகும்.

*பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில் விட்டு*
*நேசத்தி னுள்ளே நினைந்திருப்ப தெக்காலம்*

***பத்திரகிரியார் - 150***

பாசத்தை நீக்கி பசுவை சகஸ்ராரத்தில் விட்டு அதனுள் நிலைத்திருப்பது எப்போது என்று உயிர் செயல்படும் விதத்தை விளக்கியுள்ளார்.

**வழிபாடு**

விழிப்பு நிலையில் உணர்வடையாத மூளை நரம்புகள் மனத்தை ஒருமுகப்படுத்தும் போது புது மலர்ச்சியுற்று வலுவடைந்து கிளர்ச்சி யூட்டப்பட்டு உள்ளுணர்வுகள் மாந்தன் எதிர் நோக்கும் உயர்வுகளை எய்துகின்றன.

தான் எனும் எண்ணம் அற்று, தன்னை மறந்து எங்கும் பரந்துள்ள தன்னிலும் நிலை பெற்ற கடவுளை மனக்கண்ணால் கண்டு தொழுதலே வழிபாடு, பூசை ஆகும்.

எல்லா வழிபாடும் பருப்பொருள் சார்ந்தோ, இயற்கையைச் சார்ந்தோ அறநெறிப் பண்பைச் சார்ந்தோ ஆண்டவனை எண்ணி எண்ணி களிகூரும் முறையிலே தாம் இருக்கும். தனித்தொழுகையும் பொது வழிபாடும் அனைத்தும் தன்னலம், உலகநலம் இரண்டும் அடங்கியே இருக்கும். உள்ளுணர்வு நிலையில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் வீரியத்தை வெளிப்படுத்துவதே வழிபாடு. வழிபாட்டின் ஆர்வத்தால், கிளர்ச்சியால் நன்மையும், உண்மையையும் அடைவதே குறிக்கோள்.

**வழிபாட்டில் தடையாக :**

வழிபாட்டில் தானும் வழிபடும் பொருளும் ஒன்றிய காலம் போய் இடையிலே புரோகிதத் தரகர் பூசையில் நுழைந்ததும் போலிப்புனைவுகளும் வெற்றுச்சொல்லோசைகளும் மிகுந்தன. கோயில் கள்ளர் குகையானது, பூசை காசு பறிக்கும் வேசைத்தனமானது.

**வழிபாட்டில் உள்ள மொழி :**

மொழி தான் வழிபாட்டின் மூலதனம். மொழியின்றேல் மனிதனுக்கு எண்ணம் ஆற்றலே இருக்காது. மொழியுடன் கூடிய வழிபாடு,

சொற்களற்ற வழிபாடும் இறைவனிடம் மாந்தனை இணைக்கும் குரலாகும்.

**வழிபாட்டில் எல்லை :**

சமயத்திற்கு நில எல்லைகள் இல்லை. ஆனால் வழிபாட்டிற்கு எல்லை இல்லை; வழி முறைகள் உண்டு. வழிபாடு அனைத்தும் வாழ்க்கையைப் பற்றியது வாழ்க்கை என்பது நன்மை செய்வதே; வழிபாடு செய்தால் அனைத்து நன்மைகளையும் பெறலாம்.

வழிபாடு செய்வதால் இறைவனுடன் ஒன்றுவதால் அங்கு அன்பு வெளிப்படுகிறது. தொண்டு தொடங்குகிறது. வழிபாடு இறைவனைக் காணும் நிலையாகும்.

**வழிபாட்டில் சித்தர்களின் கருத்து :**

சித்தர்கள் ஓரிறைக் கோட்பாட்டை போற்றியே பல சித்தர்களும் பாடலை இயற்றியுள்ளனர். வழிபாட்டில் புறப்பூசையை விட்டு அகப்பூசையை முன்நிறுத்தி, விக்கிரக, உருவ வழிபாட்டைப் பல சித்தர்கள் எதிர்த்தே பாடல்களைப் பாடியுள்ளனர்.[5]

*திருமூலர்*

*அறிந்ததுவுந் தற்பரமே அகார மாகும்*
*அறிவுடைய உகாரம்சிற் பரம தாகும்*
*பிறந்ததுவும் உலகமெலாஞ் சமயந் தானாம்*
*பேதமெனுங் கருவிவகை யெல்லா மாகும்*
*அறிந்துவும் அகாரமெனும் பாதந் தன்னை*
*அடிமுடியென்று அனுதினமும் அறிந்து நோக்கே*

*திருமூலர் 4*

என்னும் பாடலில் சமயம் உலகத்தில் எல்லாம் எவ்வாறு உருவாகியது என இப்பாடலில் மூலம் திருமூலர் விளக்கியுள்ளார். நாம்

அறிந்தது தற்பரமே – அகாரம், சிற்பரம் – உகாரம் கடவுள்,சித்தம் என இவ்வெழுத்துக்கள் கூடி எழுந்ததும் உலகமெலாம் இவற்றை ஒலிப்பதால் சமயம் உண்டாகிறது. அகாரம் என்ற பாதத்தை அடிப்படையாக உணர்ந்து அடி முதல் முடி வரை திரண்ட நாதத்தைத் தினமும் அறிந்து நோக்கு,

*சீலமெனுஞ் சிவலிங்க பாத தீர்த்தந்*
*திருவடியுந் திருமேனி நடமு மாகும்*
*கோலமுடன் அண்டமெல்லாந் தாங்கிக் கொண்டு*
*கொழுந்துவிட்ட கம்பமதாய் மேலே நோக்கி*
*ஆலமுணட் கண்டமெலாந் தானாய் நின்ற*
*அகாரமுதல் அவ்வெழுத்தை அறிந்து பாரே*

***திருமூலர் 3- 2,3,4***

இப்பாடலில் சிவலிங்க பாதத்தில் திருமஞ்சன நீர்போல் பயன் தருவது திருவடி, திருமேனி, திருநடம் எனப் பல கோலத்துடன் எல்லா அண்டங்களையும் தாங்கி நிற்பவர் இறைவர் ஆவார் என்பது குறிக்கப் படுகிறது.

**கொங்கணர்**

**வழிபாடு**

கொங்கணர் குருவிற்கு வணக்கச் செய்யுளாக காப்புச் செய்யுள் அமைந்துள்ளது. அவை பாடல்களாக விநாயகர், சரசுவதி, சிவபெருமான், முருகன் , திருமால், நந்தீசர், தெய்வங்களைப் போற்றி பாடலைத் தொடங்கியுள்ளார்.

கொங்கணச் சித்தர் பாடல் முதலில் தனித்தனியாக தெய்வங்களைப் போற்றி வணங்கிய பாடல் அமைத்து அதே போன்று பாடல் முடிவில் 111 வது பாடலும் அனைவரையும் போற்றி முடிக்கின்றார்.

*சித்தர்கள் வாழி சிவன்வா ழிமுனி*
*தேவர்கள் வாழி, ரிசிவாழி*
*பக்தர்கள் வாழி பதம்வ ழிகுரு*
*பாரதி வாலைப் பெண் வாழியவே*

**கொ.சி.111**

இப்பாடலில் சித்தர்கள் சிவன் முனிவர் தேவர் ரிசி பக்தர்கள் குருபாதம் துர்க்கை வாலைப்பெண் ஆகிய அனைவரும் வாழ்ந்தவர்களாக என வாழ்த்தி, பாடலை முடிக்கின்றார்.

**சமயம்**

கொங்கணர் சித்தர் இவர் இரு சமயத்தையும் ஆதரிக்கின்றார். சைவசமயத்தையும், வைணவசமயத்தையும் தமது பாடலில் பாடியுள்ளார்.

*ஆயனு மைந்தா மெழுத்துக்குள் ளேயறி*
*வாயனு மைந்தா மெழுத்துக்குள்ளே*

*கொ.சி 18*

ஆயனாகிய திருமால், அயனாகிய பிரம்மன் தலைவன் ஆகிய சிவனும் வாலைப்பெண்ணும் அருள் புரிவார் என்று மூவரையும் ஒருவருக்குள் அடக்கி அருள் புரிவார் என்றும் பாடியுள்ளார்.

*அழுத்தி லேசொல்லஞ் செழுத்தி லேநானும்*
*வழுத்தி னேன்ஞானப் பழத்திலே*
*கழுத்தி லேமயேச் வரனு முண்டுகண்*
*கண்டு பாரடி வாலைப்பெண்ணே*

இப்பாடலில் ஐந்தெழுத்து மந்திரத்தை இடம் அறிந்து அழுத்தமாக ஓதினேன். கழுத்தில் (விசித்தி) மகேசுவரனைக் காணலாம்.

இவர் சிவனை அறியும் பாடலையும் பாடியுள்ளார். திருமாலையும், பிரம்மன் மனிதர்களின் உடலில் இருப்பதையும் பாடியுள்ளார். சான்று,

**திருமால்**

*தொந்தியி லேநடுப் பந்தியி லேதிடச்*

*சிந்தையி லேமுந்தி யுன்றனுடன்*

*உந்தியில் விட்ணுவுந் தாமிருப் பாரிதை*

*உண்மையாப் பாரடி வாலைப்பெண்னே*

*கொ.சி 35*

இப்பாடலில் வயிற்றில் தொப்புள் நடுப்பகுதியின் திட்டமான சிந்தையில் நினைவுக் கொண்டால் அங்கு திருமால் இருப்பதை அறியலாம் என்கிறார்.

**பிரம்மன்**

*ஆலத்தி லேயிந்த ஞாலத்தி லேவருங்*
*காலத்தி லேயனு கூலத்திலே*
*மூலத்திலே பிரமன் தானிருந் துவாசி*
*முடிக்கிறான் பிண்டம் பிடிக்கிறானே*

*கொ.சி 36*

இப்பாடலில் பிரமன் மூலாதாரத்தில் இருந்து வாசியை உருவாக்கி இவ்வுடல் முழுவதும் அனுப்புகின்றான்.கொங்கணச் சித்தர் பிற சமயத்தைக் கண்டித்தும் வெறுத்தும் பாடாமல் பிறசமயத்தைப் போற்றி அவர்கள் அனைவரும் ஒருவரே என்று சமயத்தை ஆதரித்துப் பாடல்களைப் பாடியுள்ளார்.

**திருவள்ளுவர்**

**சமயம்**

திருவள்ளுவர் தம் பாடல்களில் சமயத்தைப் போற்றியே பாடல் அமைத்துள்ளார். இவர் சைவ வைணவ சமயத்தை ஆதரித்து உள்ளார் என்பதை இவர் எழுதிய திருவள்ளுவர் ஞானப் பாடல்களில் உள்ள காப்புச் செய்யுள் மூலம் அறியமுடிகின்றது.

**அண்டம் பிண்டம் நிறைந்து நின்ற அயன்மால் போற்றி**
**அகண்டபரி பூரணத்தின் அருளே போற்றி**
**மண்டலஞ்சூழ் இரவிமதி சுடரே போற்றி**
**மதுரதமி ழோதும் அகத்தியனே போற்றி**

**திருவள்ளுவர் காப்பு 1**

இப்பாடலில் பிரமன் திருமால் இவர்களை போற்றியே காப்புச் செய்யுள் அமைத்துள்ளார்.

இவரின் பாடல்கள் அனைத்து மக்களின் அறியாமையைப் போக்கி இதில் எது நிலையானது என்றும் எவற்றில் நம் மனம் செல்ல வேண்டும், தீய வழிகளில் செல்லாமல் இருக்கவும் அவ்வாறு தீய வழியில் சென்றால் சுடுகாடுதான் அவர்களுக்குச் சொர்க்கமாக அமையும் என்றும், இயமன் வராமல் இருப்பதற்கு யோக முறையை அறிய வேண்டும் யோகமுறையை அறிந்தவர்களுக்கு இயமன் இல்லையென்பதையும்.

இப்பாடல்களின் மூலம் ஞானத்தைப் பெறுவதையும் ஞானத்தைப் பெறுவதற்கு தடையாக உள்ளதையும் அவற்றை நீக்கி யோக சித்தி பெறுவதையே இவரின் ஞானப்பாடல்கள் உணர்த்துகின்றன.

**உருவவழிபாடு :**

***கரியதோர் முகத்தையொத்த கற்பகத்தைக் கைதொழக்***
***கலைகள் நூல்கள் ஞானமும் கருத்தில்வந்து உதிக்கவே***

***சிவவாக்கியர் – 2***

‘கரியதோர் முகம்’ கரிய நிறமுடைய யானை முகத்தை உடைய கற்பக விநாயகரை வணங்கினால் அனைத்துவித நன்மையும் பெறமுடியும் என்பது போற்றும் பாடலாக அமைந்துள்ளது.

***கட்டையால்செய் தேவரும் கல்லினால்செய் தேவரும்***
***மட்டையால்செய் தேவரும் மஞ்சளால்செய் தேவரும்***
***சட்டையால்செய் தேவரும் சாணியால்செய் தேவரும்***
***வெட்டவெளியது அன்றிமற்று வேறுதெய்வம் இல்லையே***

***சிவவாக்கியர் - 534***

இப்பாடலில் கட்டை, கல், மட்டை, மஞ்சள், சட்டை, சாணி ஆகியவற்றைக் கொண்டு செய்யும் தெய்வ வடிவங்கள் அறியமுடிகின்றது.

*செம்மைசேர் மரத்திலே சிலைதலைகள் செய்கிறீர்*
*சிவவாக்கியர் -544*

இப்பாடலில் செம்மையான மரத்திலே சிலைகளும் தலைகளும் செய்து வழிபடுகிறார்கள் என்று சிவவாக்கியார் பாடல் வழி அறியமுடிகின்றன.

**நந்தீசுவரர்**

நந்தீசுவரர் வழிபாட்டு முறையைப் பன்னிரண்டு பாடலில் விளக்கியுள்ளார். பூசை, சண்முகன்பூசை, சிவபூசை, சக்திபூசை, விட்ணுபூசை, இரேசகபூசை, பூரகபூசை, கும்பகபூசை, சூரியபூசை, சந்திரபூசை, சனிபூசை எனத் தெய்வங்களுக்குப் பூசை முறைகளையும் அவை எவ்வாறு செய்யவேண்டும் என்ற வழிமுறையையும் கூறியுள்ளார்.

**விநாயகரை வழிபடும் முறை**

**போற்றுதல்:**

அனைத்திற்கும் முதல்வரான விநாயகனை முதலில் வழிபடும் முறையை நந்தீசுவரர் முதல் பாடலில் விளக்கியுள்ளார்.

*கேளப்பா ஓம்ஸ்ரீ கங்கென் றுந்தான்*
*கெடியாக மூலத்தில் கும்பித் தக்கால்*
*நந்தீசுவரர்1-1*

இப்பாடலின் மூலம் விநாயகரை ஓம்ஸ்ரீகங்கென்று என்ற துதியின் மூலமும் போற்றவேண்டும் என்றும் மூலத்தின் முதன் முதலில் தோன்றியவரைப் போற்றியுள்ளார்.

**படையல் இடுதல்**

*வாளப்பா பழத்தேங்காய் அவல், வடை தோசை*
*வளமாவிக் ணர்க்கு புட்பரி மளங்கள்( சாற்றி)*

*நந்தீசுவரர்1-2*

இப்பாடலில் வினாயகருக்கு நைவேத்தியமாகப் பழம், தேங்காய் அவல், வடை, தோசை ஆகியவற்றை வளமான விநாயகருக்கு(புட்பம்) மலர்களால் பரிமளங்களைச் சாற்றி அணிவித்து அவருக்கு இவ்வாறு படையல் போட வேண்டும் என்று நந்தீசுவரர் கூறியுள்ளார்.

**வழிபடுவதால் ஏற்படும் நன்மைகள்:**

விநாயகரை வழிபாடு செய்வதன் மூலம் கிடைக்கும் நற்பலன்களையும் விளக்கியுள்ளார்.

*நாளப்பா மனமடங்கித் தோத்திரஞ் செய்து*
*நலமான விக்கினரைப் பூசித் தக்கால்*
*ஆளப்பா ஆசிர்வா தங்கள் ஈவார்*
*அப்பனே விக்கினரைப் பூசை செய்யே*

*நந்தீசுவரர்* 1- 3,4

என்ற பாடலின் மூலம் மனதை ஒருமுகப்படுத்தி (தோத்திரம்) தியானம், மந்திரம் செய்து இவரை ப் பூசித்தால் நலம் அனைத்தையும் பெறலாம். இவரின் (ஆசிர்வாதங்கள்) அருளைத் (ஈவார்) தருவார் அதற்கு விக்கினரைப் பூசை செய்ய வேண்டும் என்று இப்பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

**சண்முகன் பூசை:**

*செய்யப்பா விக்கினர்தம் பூசை சொன்னேன்*
*செயமான சண்முகவன் பூசை கேளு*
*வையப்பா சங்வங்மங் சரவ ணாய(என்று)*
*வளமாக அனாகத்தில் பூசை பண்ணு*

*வையப்பா புட்பபரி மளங்கள் கொண்டு*
*மைந்தனே தூபநை வேத்யங் காட்டி*
*கையப்பா கனனசபை யதிலே பூசி*
*கண்மணியே சண்முகத்தை வரங்கள் கேளே*
*நந்தீசுவரர்- 2*

இப்பாடலின் மூலம் “சண்முகனுக்கு பூசை கேளு” முருகனுக்கு எவ்வாறு பூசை செய்ய வேண்டும் என்றும் அவரை எவ்வாறு துதிக்க வேண்டும் என்றுகூறியுள்ளார். சங்வங்மங் சரவணாய என்று வாயால் துதித்து வளமாக அனாகத்தில் பூசை பண்ணு இதயத்தில் மணிபூரத்திற்கு மேல் இருதய வெளியில் இதழ் தாமரை போல் இருக்கும் இடத்தில் பூசை செய்ய வேண்டும் அவருக்கு விருப்பமான மலர்களையும் சூட்டி நைவேத்தியங்களை வைத்து தூபம் காட்டி பூசை செய்து சண்முகனை வரங்கள் கேட்டால் அவர் அருள் புரிவார் என்று கூறியுள்ளார்.

**சிவபூசை**

முதலில் விநாயகருக்கு அடுத்து சண்முகனுக்கு பூசை முறைகளைக் கூறியுள்ள நந்தீசர் சிவபூசையை இவர்களுக்குப்பின் கூறியுள்ளார்.

*கானப்பா ஆசார பூசை சொன்னேன்*
*கண்மணியே சிவபூசை சொல்லக் கேளு*
*வாணப்பா நமசிவாய கிம் அம் என்று*
*வளமாகப் பூரணத்தி லிருத்திக் கொண்டே*
*ஆணப்பா தூபதீப நைவேத்தி யத்தோ(டு)*
*அப்பனே சதாசிவத்தைத் தோத்தி ரம் செய்*
*மாணப்பா நீகேட்ட தெல்லாம் ஈவார்*
*மைந்தனே சிவத்தினுடை மகிமை தானே*
*நந்தீசுவரர்-3*

இப்பாடலில் சிவபூசை சொல்லுகிறேன் கேள் என்று சிவபெருமானை நமசிவாய “கிம் அம்” என்று போற்ற வேண்டும்.

அவருக்கு விருப்பமான பொருட்களை (நைவேத்தியம்) படையல் போட வேண்டும் தூபம் தீ காட்டி சதாசிவத்தை (தோத்திரம்) மந்திரத்தால் வழிபடவேண்டும். நீ கேட்டதை எல்லாம்(ஈவார்) தருவார். இதுவே சிவனின் மகிமையாகக் குறிப்பிட்டுள்ளார்.

**சக்திபூசை**

*தானான சிவத்தினுடைப் பூசை சொன்னேன்*
*தன்மையுள்ள சக்தியுடையப் பூசை கேளு*
*வானான இம்மென்று கும்ப கத்தில்*
*வட்டிவள மாக வொரு மனதாய் நின்று*
*ஆனான கதம்பகத் தூர் புட்பம்*
*அப்பனே பால்பழங்கள் வஸ்து வைத்து*
*மானா தேவியைத்தான் தோத்தி ரித்து*
*மைந்தனே சாட்டங்கச் சரணம் பண்ணே*

*நந்தீசுவரர்-4*

*பண்ணப்பா என்வைம்மா என்று கேளு*
*பலவிதமாய் நீதொடுத்த வெல்லாம் மெய்யாம்*
*அண்ணப்பா என்று அவள் சொன்னால் போதும்*
*அப்பனே அட்சரத்தில் பலிக்கும் பாரு*
*வண்ணப்பா சக்தியுடை பூசை சொன்னேன்*
*வளமான சிவத்தினுடை பூசை சொன்னேன்*
*கண்ணப்பா விட்னுபூசை சொல்லக் கேளு*
*கண்மணியே மங்நங்சிங் என்றே ஏத்து*

*நந்தீசுவரர்-5*

**சக்தியை வழிபடும் முறை**

சக்தியை வழிபடுவதற்கு முன் கும்பகத்தில் ஒருமனதாய் நிறுத்தவேண்டும். அதன்பின் சக்திக்குப் பிடித்த கதம்பம், கஸ்தூரி, ஆகிய மலர்களால் அலங்கரித்து விருப்பமான நைவேத்தியமாக உணவான பால் பழங்களையும், மற்றும் வஸ்து ஆடையை வைத்து வணங்க வேண்டும்.

தேவியைப் போற்றி பாடல்களைப் பாடி தோத்திர மந்திரங்களை உச்சரிக்க வேண்டும்.

**வழிபடுவதால் ஏற்படும் நன்மைகள்**

நந்தீசுவரர் சக்தியை வழிபடும் முறையை மட்டும் கூறாமல் வழிபடுவதால் ஏற்படும் நன்மையையும் குறிப்பிட்டுள்ளார். சக்திக்கு விருப்பமான அனைத்தையும் செய்து விட்டு சக்தியிடமே “என்னவம்மா என்று கேள்” அதற்கு நீ செய்தது எல்லாம் மெய்தான் என்று அவள் சொன்னால் போதும் (அட்சரத்தில்) பலிக்கும் பாரு என்று சக்தியின் பூசையும் செய்ய வேண்டும்.

நந்தீசுவரர் தமது பாடல்களில் ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒரு பாடல் என்று பூசை முறைகளைக் கூறியுள்ளார். ஆனால் சக்திக்கு மட்டும் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

**விஷ்ணு பூசை**

*ஏத்தப்பா புட்பபரி மளங்கள் சாத்த*
*என்மகனே கதம்பகத் தூரி சாத்து*
*வாழ்த்தப்பா சங்கீதத் துடனே பூசி*
*வளமான விஷ்ணுவுக்குப் பூசி பூசி*
*போற்றப்பா மனமயங்கி பத்தி யாகப்*
*போற்றவே விஷ்ணுஅவர் கேட்ட தீவார்*
*ஆற்றப்பா விட்டுணுவின் பூசை சொன்னேன்*
*ஆகார கெஜமுகன் பூசை கேளே*

*நந்தீசுவரர்-6*

இப்பாடலில் விஷ்ணுவிற்கு மலர்களை அணிவித்து அதிலும் அவருக்கு விருப்பமான கதம்ப மலர்களை எடுத்துத் தொகுத்து மாலையாக்கி அலங்காரம் செய்து. அவரை வாழ்த்தி இசையுடன் பாடல்களைப் பாடி மனம் உருகிப் பூசை செய்ய வேண்டும். விஷ்ணுவிற்கு

இப்படி பூசைகளைச் செய்தால் அவரிடம் கேட்பதை எல்லாம் தருவார் (ஈவார்) என்று நந்தீசுவரர் கூறியுள்ளார்.

**இரேசக பூசை**

*பாரப்பா ரேசகத்தின் பூசை கேளு*
*பண்பான ரேசகத்தின் ஆமென் றேத்தி*
*ஆரப்பா நைவேத்தியம் கும்பகங் செய்(து)*
*அப்பனே ரேசகத்தில் மனத்தை நாட்டு*
*வாரப்பா மனமது ரேசகமே யாச்சு*
*வளமான ரேசகந்தான் வசிய மாச்சு*
*நாரப்பா ரேசகத்தின் பூசை சொன்னேன்*
*நலமான பூரகத்தின் பூசை கேளே*

*நந்தீசுவரர்-7*

இப்பாடலில் ரேசகத்தின் பூசையைச் செய்ய முதலில் கும்பகம் செய்து அதற்குப் (நைவேத்தியம்) பிடித்தமான உணவினைப் படையில் இட்டு, அந்தக் கும்பகத்தில் மனத்தை வைத்தால் மனம் ரேசகமாவே மாறிவிடும் என்பதை விளக்கியுள்ளார்.

**பூரக பூசை**

பூரக பூசையில், மணிபூரகத்தில் கெடியாக ஒன்றில் கும்பத்தை நிறுத்த வேண்டும். அப்போது பூரகத்தை தோத்திரம் போற்றி அங்கு வரத்தைக் கேளு; விட்ணு வரம் தருவார்.

**கும்பக பூசை**

கும்பகத்திற்கு உம் என்ற நாடியை குறிப்பதாகும். கும்பகத்தில் மனதை வைத்துள் பூசை செய்ய வேண்டும். கும்பகத்திற்கு நைவேத்தியம் செய்து மனதால் வேண்டிக் கொண்டால் கண்மணியே வேண்டும் வரம் தருவார் என்று நந்தீசுவரர் கூறியுள்ளார்.

**சூரியபூசை**

சூரியனைக் கும்பகமாக செய்து அவருக்குப் பெரிய பூசையைச் செய்ய நைவேத்தியம் படைத்து விழுந்து வணங்க வேண்டும். சூரியனைப் போற்றினால் அனைத்து நலமும் தருவார். கும்பகத்தில் தான் அகத்தியர் தோன்றியவர் அகத்தியரை வரங்கள் கேளு தருவார்.

***"அகத்தியர் தம் கும்பகத்தில் வரங்கள் ஈவார்"***

**நந்தீசர் – 10-3**

என்ற பாடலின் மூலம் அகத்தியரைப் பற்றி நந்தீசர் கூறியுள்ளார்.

**சந்திர பூசை**

சந்திர பூசை செய்வதற்கு "யங்நங்" என்ற மந்திரத்தைச் சொல்லி கும்பகமாக வைத்து அங்கு நைவேத்தியமாக பால் பழம் வைத்து தீப தூபம் காட்டி சந்திரனைப் போற்றி சரணம் செய்ய,வேண்டும் வரத்தைத் தருவார் என்று கூறியுள்ளார்.

**சனி பூசை**

சனி பகவானை "வங்" "சங்" என்று சொல்லி மேருவில் நிறுத்த வேண்டும். அவருக்கு விருப்பமான நைவேத்தியம் படைத்து தீப தூபம் காட்டி போற்றி வழிபட்டால் வரங்கள் தருவார் என்று நந்தீசுவரர் கூறியுள்ளார்.

நந்தீசுவரர் ஒவ்வொரு பாடல் முடிவிலும் அடுத்த பாடலில் கூற வரும் பூசையை கூறி முடிக்கின்றார். இவர் பூசை முறையையும் எவ்வாறு செய்ய வேண்டும் என்ற வழிமுறையும் விளக்கியுள்ளார்.

**பட்டினத்தார்**

**சமயம்**

பட்டினத்தார் பாடல்களில் சமயப் பூசல்கள் இல்லை, பிற சமயத்தை எதிர்த்துப் பாடவும் இல்லை, பிற சமயத்தை ஆதரித்தே பாடியுள்ளார்.

**திருமால் பயத்த திசைமுகன் அமைத்து**
**பட்டி.ஐந்து.வரி .பா – 30-1**

**மனித உடலில் இருக்கும் தெய்வங்களை**
**மூலத் துதித்தெழுந்த முக்கோணச் சக்கரத்துள்**

**வாலைதனைப் போற்றாமல் மதிமறந்தேன் பூரணமே**

பூர.மா.1

மூலாதாரத்தில் முக்கோணச் சக்கரத்தில் இருக்கும் சக்தியை வழிபடாமல் மறந்தேன்.

**உந்திக் கமலத் துதித்துநின்ற பிர்மாவைச்**

**சந்தித்துக் காணாமற் நட்டழிந்தேன் பூரணமே**

பூர.மா.2

உந்திக் கமலத்தில் இருக்கும் பிரம்மதேவனைச் சந்திக்க மறந்தேன். உந்திக்கமலம் சுவாதிஸ்டானம் அதில் பிரம்மதேவரும் சரசுவதியும் இருப்பார்கள் அதைக் காணாமல் மறந்தேன்.

**நாவிக் கமல நடுநெடுமால் காணாமல்**
**ஆகிகெட்டு யானு மறிவழிந்தேன் பூரணமே**

பூர.மா. 3

நாவிக்கமலத்தில் மத்தியிலே உள்ள நாராயண மூர்த்தியைத் தரிசனம் செய்யாமல் யானும் மறந்தேன்.

**உருத்திரனை யிருதயத்தி லுண்மையுடன் பாராமல்**
**கருத்தழிந்த நானுங் கலங்கினேன் பூரணமே**

பூர.மா. 4

இதய கமலத்தில் இருக்கும் உருத்திரனைக் காணாமல் கலங்கினேன். இதய கமலம் அநாகதம் இதில் உருத்திர மூர்த்தியும் உமாதேவியும் இருப்பார்கள்.

**விசுத்தி மயேசுரனை விழிதிறந்து பாராமல்**
**பசித்துருகி நெஞ்சம் பதறினேன் பூரணமே**

பூர.மா. 5

விசுத்தியில் மகேசுரனைக் கண்திறந்து நோக்கவில்லை. விசுத்தி அநாகதத்துக்கும் பத்து விரற்கடைமேலிருப்பது அதில் மகேசுரனும் மகேசுவரியும் இருப்பார்.

**நெற்றி விழியுடைய நிர்மலச தாசிவத்தைப்**
**புத்தியுடன் பாராமற் பொறியழிந்தேன் பூரணமே**

பூர.மா. 6

நெற்றிக் கண்ணில் ஆஞ்ஞை எனச் சதாசிவத்தை அறியாமல் புத்தியைக் கொடுத்து விட்டேன். ஆஞ்ஞை இது விசுத்திக்குப் பன்னிரண்டு விரற்கடைமேல் இருப்பது புருவமத்தியாகும்.

இப்பாடல்களின் மூலம் இறைவனை அண்டத்தில் மிக உயர்ந்த மலையாகக் கூறுவது மேருமலையாகும் அதுபோல் பிண்டத்தில் மேருமலை முதுகுத்தண்டைக் குறிக்கும்.

**பத்திரகிரியார்**

**சமயம்**

பத்திரகிரியார் சைவசமயத்தையும் வைணவ சமயத்தையும் போற்றி பாடல்களை அமைத்துள்ளார். இருசமயத்தையும் ஆதரித்துப்பாடியுள்ளார். அரியும் சிவனும் ஒவ்வொரு மனிதனுக்குள் இருக்கும் இறைவனை

உணர்ந்து அறிய வேண்டும் என்று பத்திரகிரியார் கூறியுள்ளார். சான்றாக

**அப்பு பிறைநடுவே அமர்ந்திருந்த விட்டுணுவை**
**உப்புக் குடுக்கையுள்ளே உணர்ந்தறிவ தெக்காலம்**
**பத்திரகிரியார் -68**

இப்பாடலில் நீர் என்னும் பூதத்திற்குரிய பிறைச் சந்திரனைச் சூடிய சிவனையும் சுவாதிட்டானத்தில் நடுவே அமர்ந்து இருக்கும் திருமாலையும் இவர்கள் இருவரையும் உப்பளாகிய இந்த உடலுக்குள் உணர்ந்து அறிவது எப்போது எனப் பாடியுள்ளார்.

**வழிபாடு**

***முத்தி தரும் வேத மொழியாம் புலம்பல்சொல்ல***
***அத்தி முகவன் தன் அருள்பெறுவ தெக்காலம்***
**பத்திரகிரியார் - *காப்பு***

முக்தி தரும் வேத மொழியாம் இந்தப் புலம்பல் கண்ணியைச் செய்வதற்கு “ அத்தி முகன்” யானை முகத்தவனின் அருள் பெறுவது கிடைக்குமே எனக் கூறியுள்ளார்.

இவர் காப்புச் செய்யுளாக விநாயகரைப் போற்றி அவரின் அருளைப் பெறுவதை இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

***அத்தன் இருப்பிடத்தை ஆராய்ந்து பார்த்துநிதம்***
***செத்த சவம்போல் திரிவதினி யெக்காலம்***

**பத்திரகிரியார் - *22***

இப்பாடலில் அத்தன் இறைவன் இருக்கும் இடத்தை ஆராய்ந்து பார்த்து நாள்தோறும் சவம் போல் தவநிலையில் இருப்பது எப்போது.

இறைவனின் நினைவாக ஒரே உணர்வு கொண்டு சவம்போல் இருப்பவர்களைக் கூறியுள்ளார்.

*ஒளியி லொளியாம் உருப்பிறந்து வாறதுபோல்*
*வெளியில் வெளியான விதம் அறிவது எக்காலம்*

**பத்திரகிரியார் - *122***

இப்பாடலில் இறைவனின் வடிவினை ஒளியில் ஒளியாக ஒன்றி இருக்கும் ஓர் உருவமாய் இருப்பது போல் இறைவன் வெளியிலும் ஒன்றி நிற்கும் நிலையை அறிவது எப்போது.

*பொன்னும்வெள் ளியும் பூண்ட பொற்பதத்தை உள்ளமைத்து*
*மின்னும் ஒளிவெளியே விட்டடைப்ப தெக்காலம்*

**பத்திரகிரியார் - *167***

இப்பாடலில் பொன்னும் வெள்ளியும் ஆகிய
அணிகலன்களைப்பூண்டணிந்த இறைவனின் திருவடிகளை உள்ளத்தில்
வைத்து வணங்குவதும் பற்றிக் கூறியுள்ளார்.

இவர் தொடக்க பாடலும் முடியும் பாடலும் விநாயகரைத் துதித்து
பாடியுள்ளார்.

**அகத்தியர்**

**சமயம்**

வழிபாடு மக்களை இறைவனிடம் இணைக்கும் நிலையாகும் மக்கள் வழிபாடு செய்வதன் மூலம் இறைவனைக் காணும் நிலையையும் அடைகிறான். அது மட்டும் அல்லாமல் மக்களின் தீய எண்ணம் பொய், களவு, கொலை இவற்றை மறந்து புண்ணியத்தையும் இறைவனைக் காணும் நிலையிலே மக்களின் மனம் அமைகிறது. சான்றாக,

*மோட்சமது பெறுவதற்குச் சூட்சம் சொன்னேன்*
*மோகமுடன் பொய்களவு கொலை செய்யாதே*
*காய்ச்சலுடன் கோபத்தைத் தள்ளிப் போடு*
*காசினியிற் புண்ணியத்தைக் கருதிக் கொள்ளு*
*பாய்ச்சலது பாயாதே பாழ்போ காதே*
*பலவேத சாத்திரமும் பாரு பாரு*

*ஏச்சலில்லா தவர்பிழைக்கச் செய்த மார்க்கம்*
*என்மக்கா ளெண்ணியெண்ணிப் பாரீர் நீரே*
*அகத்தியர் - 2*

இப்பாடலில் மக்களுக்கு அறிவுரையாக பாடலை அமைத்துள்ளார். பொய், களவு, கொலை செய்யாதே புண்ணியம் செய், கோபம் படாதே, பாழ்வழில் செல்லாதே இவற்றை விட்டு சாத்திர நூல்களைப் படித்துப் பயன்அடைவாய் என்கிறார்.

**இறைவனைக் காணும் நிலை**

இறைவனைக் காணும் நிலையை அகத்தியர் பின் வரும் பாடலில் விளக்கியுள்ளார். அவை,

***ஒண்ணானஉச்சிவெளிதாண்டிநின்று***
***உமையவளுங்கணபதியுமுத்தியாகி***
***விண்ணொளியாம்அம்பரம்ஓம்அவ்வும்உவ்வும்***
***விதித்தபரம்ஒருவருக்கும்எட்டாதப்பா***
***பண்ணானஉன்னுயிர்தான்சிவமதாச்சு***
***பாற்கடலில்பள்ளிகொண்டான்விண்டுவாச்சு***
***கண்ணானகணபதியைக்கண்ணில்கண்டால்***
***கலந்துருகியாடுமடாஞானம்முற்றே***
***அகத்தியர் - ஞா:2-3***

இப்பாடலின் மூலம் மனதை ஒருமுகப்படுத்தி உச்சிவெளி தாண்டி நிலை நிறுத்த வேண்டும். அப்போது ஓம், அ, உ என்னும் எழுத்தை உச்சரிக்க வேண்டும். அதில் உயிராக சிவனையும் மூலதாரத்தில் உமையாளும், கணபதியும், மணிபூரகத்தில் விஷ்ணுவையும் காணலாம்.

**கூடப்பா துரியமென்ற வாலை வீடு**
**கூறரிய நாதர்கேச் சுரியே யென்பார்**
**நாடப்பா அவள்தனையே பூசை பண்ணு**
**நந்திசொல்லுஞ் சிங்காரத் தோன்றுந் தோன்றும்**

**ஊடப்பா சிகாரவரை யெல்லாந் தோன்றும்**
**ஊமையென்ற அமிர்த வெள்ளம் ஊறலாகும்**
**தேடப்பா இதுதெரு காரிய மாகும்**
**செகத்திலே இதுவல்லோ சித்தி யாமே**

அகத்தியர் – ஞா:**5-2**

இப்பாடலில் வழிபாடு செய்வதன் மூலம் மகேஸ்வரன் மகேஸ்வரியும் காணலாம்.

**கருவூரார்**

**வழிபாடு**

**பாரேது புனலேது அனலு மேது**
**பாங்கான காலேது வெளியு மாகும்**
**நாரேது பூவேது வாச மேது**
**நல்ல புட்பந்தானேது பூசை யேது**
**ஊரேது பேரேது இனமு மேது**
**ஓகோகோ அதியந்தா னென்ன சொல்வேன்**
**ஆறேது குளமேது கோயி லேது**
**ஆதிவத்தை யறிவதான யறிய லாமே**

**கருவூரார் -10**

இப்பாடலில் வழிபாடு செய்ய வேண்டும் என்றால் மலர், மலர்நார், இலை வேண்டும்.

இப்படி பூசை செய்ய பொருட்கள் கிடைக்க வில்லை என்றாலும் ஆதியான பரம் பொருளை மனதால் நினைத்துப் பூசை செய்தால் போதும் அவரை அறியலாம் என்பது இப்பாடலால் அறியமுடிகின்றது.

***ஆமெனவும் ஊமெனவும் இரண்டுங் கூட்டி***
***அப்பனே ஓமென்ற மூன்று மொன்றாய்***
***நாமெனவுந் தாமெனவும் மொன்றே யாகும்***
***நல்லர்க ளறிவார்கள் காமி காணான்***

*வாமம் வைத்துப் பூசைபண்ண இந்த மார்க்க*
*வந்தவர்க்குச் சத்திசிறு பிள்ளை வாலை*
*சோமநதி யமுதமுண்ண வாவா வெண்பாள்*
*சுகமுனக்குப் பரமசுகம் அருள் செய்வாளே*

**கருவூரார் - 11**

இப்பாடலில் ஆம், ஊம் என்ற இரண்டுடன் ஓம் சேர்த்து மந்திரத்தைச் சொன்னால் நாம் வேறு கடவுள் வேறு இல்லாமல் ஒன்றேயாகும். நல்லவர்களால் மட்டுமே இறைவனைக் காண முடியும். இறைவரைப் பூசைப் பண்ண வந்தவர்களுக்கு இறைவனில் இடப்பக்கம் இருக்கும் பராசக்தியைக் காணலாம்.

வழிபாடு எவ்வாறு செய்ய வேண்டும் என்றும் வழிபடும் போது மனம் அங்கும் இங்கும் என அலையாது ஒருநிலைப் படுத்தி இறைவனை வழிபாடு செய்ய வேண்டும். சான்று,

*சடச்சமற்றுப் பார்க்கயிலே இருள்போல் மூடும்*
*கொள்ளி கொண்டு கொளுத்தியதை வெளிச்சம் போட்டு*
*வாய்சமர்த்துப் பேசாதே மவுனத் தூண்று*
*வாவாவென் றேநீயும் வருந்திக் கூவச்*
*சூட்சமது விருந்தவிடஞ் சொல்ல லாமோ*
*சொல்லுதற்கு வாய்விட்டுச் சொல்ல லாமோ*
*தாய்ச்சமர்த்துப் பாராதே தாயைப் போற்று*
*சற்குருபோ லுற்பனத்தைத் தாய் சொல் வாளே*

**கருவூரார் - 14**

இறைவனைக் காணும்போது இருள் போல் மூடும். ஆனால் அதைக் கொள்ளியால் ஒளியால் இருளை நீக்குவது போல் நினைத்துக்கொள். அப்போது வாய் பேசாமல் மவுனமாய் இருக்க வேண்டும். அவள் உன்னைச் சோதிப்பாள்; தியானத்தில் ஊன்றி இரு. அவளை மனமுருகிப் போற்று அப்போது அவள் தாய் போல் அருள் செய்வாள்.

கருவூரார் பாடல் முழுவதும் சக்தியின் வழிபாட்டை முன்னிறுத்திப்பாடியுள்ளார். சில பாடலில் சிவனின் வழிபாட்டைக் கூறியுள்ளார்.

**வான்மீகர்**

**சமயநோக்கு**

சமயம் உருவழிபாடு இறைபக்தி உயிர், ஆன்மா மூடநம்பிக்கை இவற்றை விளக்குவதே சமய நோக்கு ஆகும்.

**உருவ வழிபாடு**

**இருள் வெளியாய் நின்றசிவ பாதம் போற்றி**

**வான்மீகர் -1.1**

இப்பாடலின் மூலம் இருளாகவும் வெளியாகவும் நிற்பவர் சிவபெருமான். இவரின் பாதத்தைப் போற்றி என்று தொடங்கும் பாடலின் மூலம் வால்மீகரின் இறைவனிடத்தில் உள்ள பக்தியை அறியமுடிகின்றது. இறைவனை மட்டும் போற்றாமல் அவரின் உருவத்தையும் பின் வரும் அடியில் விளக்கியுள்ளார். அவை,

***திருவுருவாய் ரவிமதியாய் நின்ற ரூபம்***
***சிவசக்தி திருமாலின் ரூப மாகும்***
***வருமுருவே சிவசக்தி வடிவ மாகும்***
***வந்ததிலும் போனதிலும் மனத்தை வையே***

**வான்மீகர் -1.3,4**

இப்பாடலின் சூரிய சந்திர உருவத்தை சிவன் சக்தி திருமால் என மூவரின் வடிவமாகும் மூவரின் வடிவத்தை எல்லாம் சிவசக்தியின் வடிவங்களாகக் குறிப்பிடுகிறார்.

**மூடநம்பிக்கை**

மூடநம்பிக்கை என்பது அறிவில்லாத நம்பிக்கை, அறிவில்லாத விருப்பம் அறிவில்லா து ஏற்றுக்கொள்ளுதல் என இவை மூடநம்பிக்கையாகும். எந்த ஒரு பொருளையும் ஆராய்ந்து அறியும் அறிவைச் செலுத்தா து கண்மூடித்தனமாக ஒன்றை அப்படியே ஏற்றுக்கொள்ளுதலும், அவ்வாறு கண்மூடித்தனமாக ஏற்று காலங்காலமாக மாற்றமின்றிப் பின்பற்றுதலே மூடநம்பிக்கையாகும்.

மூடநம்பிக்கைக்கு உதாரணமாக விளக்கை அவி அல்லது நிறுத்து என்று கூறுவது அமங்கலம் என்றும் விளக்கை அமர் த்து, குளிரவை முதலான சொற்களால் குறிப்பர். விளக்கில் திருமகளின் பொலிவு என்றும் விளக்கினைப் போற்றும் என்றும் நம்பிக்கை இருந்தன. விளக்கை அவி அல்லது நிறுத்து என்னும் சொற்களை க் கூறும்போது திருமகளின் அருள் நீங்குமோ அல்லது வறுமை வந்திடு மோ என்ற அச்சத்தின் காரணமாகவே விளக்கினை அமர்த்து , குளிரவை என்று கூறி இங்கு நம்பிக்கை மூடநம்பிக்கையாக அமைகின்றன.

பகுத்தறிவிற்கும் நல்ல நம்பிக்கைக்கும் எதிரானது மூடநம்பிக்கை ஆகும். தன்மையின் முனை முற்றாக மழுங்கிய நிலையே மூடநம்பிக்கையாகும். நல்ல நம்பிக்கை என்பது போதுமான ஆதாரத்தைக் கொண்டதாக இருக்க வேண்டும் இல்லையேல் அது வெறும் மூடநம்பிக்கைதான்.

சித்தர் பாடல்களில் இறைவன் மீது நம்பிக்கை கொண்டு இறைவனை அடையும் நிலைக்கும் யோகமும், அக ப் பூசையும், செய்கிறார்கள். ஆனால் மக்கள் இறைவன் மீது புறப்பூசையை ச் செய்கிறார்கள். மக்கள் புற ப்பூசையைச் செய்வது அச்சம் பயம் பேராசையின் காரணமாகவே பூசையைச் செய்கிறார்கள்.

சித்தர் பாடல்களில் மக்கள் செய்யும் பூசையை மூடநம்பிக்கை என்று அவர்கள் மூடர்கள் அறிவில்லாதவர் என்று வெளிப்படையாக கூறியுள்ளனர்.

சித்தர்கள் நம்பிக்கை உடையவர்கள் மூடநம்பிக்கைக்கு எதிரானவர்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[6]

**மூடநம்பிக்கை**

*ஆசானு ஈசானு மொன்றே யாகும்*
*அவனவளு மொன்றாகும் அதுதா னாகும்*
*பேசாத மந்திரமு மிதுவே யாகும்*
*பேரொளியின் வடிவாகும் பேரு மாகும்*
*நேசாருங் கலைகளெலாந் தானே யாகும்*
*நிலையான ஓங்கார பீட மாகும்*
*ஈசனை ஆசானாய்க் காணும் பேர்க்கிங்*
*கின்பமுடன் கயிலாச மெய்த லாமே*

*திருமூலர் - 6*

என்னும் ஆசானாகிய மனிதனும், ஈசானாகிய கடவுளும் ஒன்றே ஆவார். அவன் அவள் இருவரும் ஒருவரே. அனைத்து, களைகளுக்கும் நிலையான ஓங்கார பீடம் ஆகும். ஈசனை ஆசானாகக் காண்பவர் கயிலாயத்தை அடையலாம்.

மனிதனும் இறைவனும்ஒருவரே, அவன் அவள் என இறைவனின் உடலில் பராசக்திக்குப் பாதி இடத்தை அளித்துள்ளதால் இருவரும் ஒருவரே அதே போல் இறைவனை மனிதனாக காண்பவர் இறைவனின் இடமான கயிலாயத்திற்குச்செல்லாம் எனக் கூறியுள்ளார்.

*காண்பதுதான் பேரொளியின் காட்சி யாகும்*
*காணரிய பொருளாகுங் காட்டும் போதே*
*ஆண்பெண்ணாய் அலியாகி அடியு மாகி*
*அப்பாலைக் கப்பாலாய் அமர்ந்த சோதி*
*வீண்பயிலும் வேதமெல்லாந் தேடிக் காணா*
*வெறும்பாழ தாகியே மேவி நின்றார்*
*சேண்பயிலும் செகசோதி மூலந் தன்னைத்*
*தேடரிய பாத மென்றே தெளிந்து நோக்கே*

*திருமூலர் - 8*

இப்பாடலில் வேதங்களினால் இறைவனைக் காண முடியாது. வெளியில் இறைவனைத் தேடுவது வீணாகும். இவ்வாறு தேடிக் கிடைக்காத இறைவனாகிய செகசோதியை மூலாதார ஒளியையே (உடலில்) இறைவனின் பாதம் என தெளிந்து நோக்கு.

*மேவியதோர் சற்குருவின் பாதந் தன்னை*
*மெய்ஞ்ஞான மென்றதனை மேவிக் கொண்டு*
*ஆவியுடல் காயமெல்லா மறிந்து பார்த்தே*
*அத்தணார் வடிவமென்றே அறிந்து கொண்டு*
*பாவனையு ளானவெல்லாம் விட்டு நீங்கிப்*
*பகலிரவு மற்றிடத்தே கருத்தை வைத்துச்*
*சீவனையுஞ் சிவந்தனையும் ஒன்றாய்த் தானே*
*திருமூலர் பாதமொன்றித் திடமாய்க் காணே*

*திருமூலர் - 11*

இப்பாடலில்,

*தொகுப்பதாம் மந்திரங்கள் கருவி நூல்கள்*
*சொல்லரிய தத்துவங்கள் தம்மை யெல்லாம்*
*வகுத்துடனே யிவற்றை யெலாங் கண்டு நீங்கி*
*வாகான உடலுயிரை வகையாற் கண்டு*
*பகுப்புடனே சேராமற் பாதந் தன்னைப்*
*பரகதிக்கும் வழியெனவே பற்றிக் கொண்டு*
*விகற்பமிலா மூலமதில் நின்ற சோதி*
*மேலான பாதமென்றே மேவி நில்லே*

*திருமூலர் - 10*

கொங்கணச் சித்தர் மூடநம்பிக்கையைச் சில பாடல்களிலே விளக்கியுள்ளார்.

*"இந்த விதத்திலே தேகத்திலே தெய்வம்*
*இருக்கையில் புத்திக்க ரிக்கையினால்*

*சந்தோட வாலையைப் பாராமல் மனிதர்*
*சாகிற தேதடி வாலைப்பெண்ணே”*

**கொ. 39**

இப்பாடலில் உடம்புக்குள்ளே தெய்வம் இருக்கையில் அதை அறியாமல் வெளியில் தேடிச் சாவதும் கொங்கணச் சித்தர் மக்களின் மூடநம்பிக்கையை விளக்கியுள்ளார்.

**போலி வேடம் புனைவர்கள் :**

தவவொடுக்கம் என்ற பெயரில் பொய் வேடம் பூண்டலையும், பொய்மைத் துறவியரைக் கண்டிப்பதைச் சித்தர் பாடல்களில் அறியமுடிகின்றன. அவை,

*“எல்லா மறிந்தவ ரென்றுசொல் லியிந்தப்*
*பூமியி லேமுழு ஞானி யென்றே*
*உல்லாச மாக வயிறு பிழைக்கவே*
*ஓடித் திரிகிறார் வாலைப்பெண்ணே”*

**கொ. 103**

இப்பாடலில் இவ்வுலகில் சில தாம் எல்லாவற்றையும் உணர்ந்தவர் என்றும் முழு ஞானி என்றும் சொல்லிக் கொண்டு திரிகிறார்கள் என்று போலி வேடத்துடன் பல சித்தர்கள் என்ற பெயரில் இருந்தனர் என்று அறியமுடிகின்றன.

**மூடநம்பிக்கை**

*“வீடானமூலச் சுழிநாத வீட்டில் விளங்கும் விந்து*
*நீடாழிலோகந் தழைத்துப் பெருகியு நின்றிலகுந்*
*தோடதழித்த பொருளான பொக்கிடந் தேடியென்ன*
*காடானநாடு சுடுகாடு சேர்வதுங் கண்டிலரே”*

**திருவள்ளுவர் –5**

இப்பாடலில் அழியக் கூடிய பொருட்களைப் பல நாடுகளில் தேடிச் சென்று குவியலாகக் குவிப்பது என்ன பயன் அவை இறுதி வரை நம்முடன் வராது. கடைசியாகப் போகும் போது நாடு சுடுகாடு ஆகும்.

*"என்றுஇந் துப்பாகும் எண்சா ணுடலிருக்கக்*
*கண்டுமறி யாதென்ன காரணமோ என்று மதி*
*வாரி யமுயதை வன்னிவிட்டுக் காய்ச்சியபின்*
*வீரியமா யானுணரு மெய்"*

**திருவள்ளுவர் – 17**

**இப்பாடலின் மூலம் உடலுக்குள்ளே இருக்கும் உப்பை அறியாமல் வெளியில் தேடுகின்றனர். அமுரி என்பது உப்பின் கசடு உடலில் தோன்றும் உப்புநீர் இந்த அமுரியில் தான் இறைவன் உள்ளான். அமுரியை உண்டு குண்டலியை யோகம் செய்தால் உடலை அறியலாம்.**

**மூடநம்பிக்கை**

சிவவாக்கியர்,சடங்குகளையும்,மக்களின்அறியாமையையும்,
மூடநம்பிக்கையையும் பாடல்களில் நேரடியாகப் பாடியுள்ளார்.

"*நெருப்பை மூட்டி நெய்யைவிட்டு நித்தம் நித்தம் நீரிலே*
*விருப்பமொடு நீர்குளிக்கும் வேதவாக்கியம் கேளுமின்*
*நெருப்பும்நீரும் உம்முளே நினைத்துக்கூற வல்லீரேல்*
*சுருக்கம் அற்ற சோதியைத் தொடர்ந்துகூடல் ஆகுமே*"

**சிவவாக்கியர் - 31**

இப்பாடலின் மூலம் நாள்தோறும் யாகம் செய்தாலும், தினமும் நீரிலே மூழ்கி வேதவாக்கியமான மந்திரங்கள் என்னும் புறச் சடங்குகள் செய்தாலும் இவை இறைவனிடம் சென்று சேராது இந்த இரண்டு வரியில் மக்கள் செய்யும் சடங்குகளை எடுத்துக் கூறி அடுத்த இரண்டு வரிகளில் மூடநம்பிக்கையை உடைத்தும் மனதினை யாகம் எழுப்பும் இடமாக்கு.

அங்கே நீரில் முழுகியும் அவற்றிற்கான மந்திரங்களைச் சொல்லி சரியாக செய்தால் சோதி வடிவில் இறைவனைக் காணலாம்.

இறைவன் தனியாக இல்லை, நமது உடலில்தான் உள்ளார். இறைவனின் இடம், கடவுளைத் தேடி எங்கும் அலைய தேவையில்லை உடலிலே இறைவனை அறியலாம் என்பதைச் சிவவாக்கியார் பாடல் மூலம் அறியமுடிகின்றன.

*"மாறுபட்ட மணிதுலக்கி வண்டின்எச்சில் கொண்டுபோய்*

*ஊறுபட்ட கல்லின்மீதே ஊற்றுகின்ற மூடரே*

*மாறுபட்ட தேவரும் அறிந்துநோக்கும் என்னையும்*

*கூறுபட்டு தீர்க்கவோ குருக்கள்பாதம் வைத்ததே"*

**சிவவாக்கியர் -34**

நவரத்தினங்களைத் தூய்மை செய்து நகையாக இறைவனுக்கு அணிவித்தும், (வண்டின்) தேனீக்கள் சேகரிக்கும் 'எச்சிலாகிய' தேனைக் கொண்டு கற்சிலையின் மீது திருமஞ்சனம் செய்தும் வழிபடும் மூடர்களே என்றும், விண் உலகத் தேவரும் என்னை அறிவர். அவர்கள் என்னை விரும்பி நோக்குகிறார்கள். அப்படி என்னையும் கூட கொண்டாடும் நீங்கள் குருக்களின் பாதம் தீர்த்துவிடுமே. என்று இப்பாடலின் மூலம் வழிபாட்டினையும், புறச்சடங்குகளையும் செய்பவர்களை 'மூடரே' என்று வெளிப்படையாக மூடநம்பிக்கையைச் சாடியுள்ளார்.

*"கோயிலானது ஏதடா குளங்களாவது ஏதடா*
*கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே*
*கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே*
*ஆவதும் அழிவதும் இல்லைஇல்லை இல்லையே"*

**சிவவாக்கியர் - 35**

இப்பாடலில் கோயில்கள், குளங்கள், தீர்த்தம் எவையும் தேவையில்லை. இவை இரண்டும் மனத்திற்குள்ளே உள்ளன.

இறைவன் செங்கல், கருங்கல், செம்பு இவற்றில் இறைவன் இருக்கிறார். என்றும் அவரை அங்கு இங்கு எங்கும் உள்ளார் என்று வெளியில் தேடும் மக்களை உமக்குள்ளே இருக்கும் இறைவனை அறிந்து அங்கு பூசையைச் செய் என்கிறார் சிவவாக்கியார் இதனைப் பின்வரும் பாடல் மூலம் அறியலாம். அவை,

"***செங்கல் கருங்கலும் சிவந்தசாதி லிங்கமும்***
***செம்பிலும் தராவிலுஞ் சிவனிருப்பன் என்கிறீர்***
***உம்பதம் அறிந்துநீர் உம்மைநீர் அறிந்தபின்***
***அம்பலம் நிறைந்தநாதர் ஆடல்பாடல் ஆகுமே***"

***சிவவாக்கியர் - 36***

இப்பாடலின் மூலம் உலோகங்களில் செய்த வடிவங்களை சிவன் இருப்பிடம் என்று கூறுகிறீர்கள். மதத்தை அறிந்து இவ்வாறு கொண்டாடும் நீங்கள் முதலில் உங்களை நீங்கள் அறிந்து, உங்களுக்குள் இருக்கும் இறைவனை அறிந்து கொள்ளுங்கள் என்றும் புறப்பூசையை விட்டு அகப்பூசையின் வழி நடந்தால் அங்கு இறைவன் இருப்பதை அறியலாம்.

**இறந்தவர்கள் மீண்டும் பிறப்பது இல்லை:**

சிவவாக்கியார் பாடலில் மறுபிறப்பு கொள்கையே இல்லை இல்லவே இல்லை எனக் கூறியுள்ளார். அதற்கான சான்று,

"***கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணெய் மோர்புகா***
***உடைந்துபோன சங்கினோசை உயிர்களும் உடற்புகா***
***விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டும்போய் மரம்புகா***
***இறந்தவர் பிறப்பதுஇல்லை இல்லையில்லை இல்லையே***"

**சிவவாக்கியர் - 48**

இப்பாடலின் மூலம் கறந்தபால் மீண்டும் முலைக்காம்பில் புகுவதில்லை கடைந்த வெண்ணெய் மீண்டும் மோரில் போய்ச் சேருவது இல்லை, சங்கில் எழுப்பப்பட்ட ஓசை மீண்டும் சங்கில் புகுவதில்லை உயிர்கள் நீங்கிய பின்பு அதே உடலில் போய்ச் சேருவதில்லை விரிந்த பூவும் உதிர்ந்த காயும் மீண்டும் போய் மரத்தில் புகுவதில்லை. இதைப் போல் இறந்தவர் மீண்டும் அதே உடலில் பிறப்பது இல்லை. பூமியில் பிறப்பது இல்லை என்று இல்லவே இல்லை என்று மூடநம்பிக்கையை உடைத்துக் கூறியுள்ளார்.

***பிறந்தபோது கோவணம் இலங்குநூல் குடுமியும்***
***பிறந்ததுடன் பிறந்ததோ பிறங்குநாள் சடங்கெலாம்***
***மறந்தநாலு வேதமும் மனத்துளே உதித்ததோ***
***நிலம்பிளந்து வான்இடிந்து நின்றதென்ன வல்லிரே***

**சிவவாக்கியர் - 194**

பிறக்கும் போது யாரும் கோவணம், பூணூல், குடுமி என்ற கோலத்துடன் பிறக்கவில்லை. பிறந்தவுடன் கூடவே பிறந்ததோ சடங்குகளும், அப்படி சடங்குகள் மறந்தாலும் நாலுவேதம் மந்திரங்களும் மனதினுள் உதித்துத் தோன்றியதோ. அவ்வாறு தோன்றவில்லை, என்றால் நிலம் பிளந்து வான் இடிந்து நின்றதா இல்லை. பிறக்கும்போது யாரும் சடங்குகளும், நாலு வேத மந்திரங்களும் உடன் பிறக்கவில்லை. வளரும்போது இவற்றைக் கற்றுக் கொள்கிறோம், என்று சிவவாக்கியார் குறிப்பிட்டுள்ளார்.

**புறப்பூசையை விட்டு அகப்பூசையை ஆதரிக்கிறார் சிவவாக்கியார்**

இறைவனின் பெயரால் மக்கள் செய்யும் வழிபாட்டினை, பல விலங்குகளைப் பலி கொடுத்தும் இவற்றைச் செய்து இறைவனின் அருளும் அவரைக்காணும் நிலையையும் அடையமுடியுமா என்று

மக்களின் மனதில் உள்ள மூடநம்பிக்கைகளைப் பின்வரும் பாடல் மூலம் விளக்குகிறார். அவை,

*வேடமிட்டு மணிதுலக்கி மிக்கதூப தீபமாய்*
*ஆடுஅறுத்து கூறுபோட்டு அவர்கள் போலும் பண்ணுறீர்*
*தேடிவைத்த செம்பெலாம் திரள்படப் பரப்பியே*
*போடுகின்ற புட்பபூசை பூசையென்ன பூசையே*

**சிவவாக்கியர் - 196**

இப்பாடலின் மூலம் திருநீறு பூசிய வேடத்துடன் மணி ஒலித்தும் தீபதூபம் காட்டி, ஆட்டையும் பலி கொடுத்து பூசை என்று செய்கிறீர்கள் இதுமட்டுமா செம்புப் பாத்திரத்தில் நீரை நிரப்பிப் பூவை எடுத்து போடுகின்ற பூசை பூசையல்ல. புறப்பூசையைச் செய்வது எல்லாம் பூசையல்ல; அகப்பூசையே இறைவனை அடையும் பூசையாகும்.

*நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே*
*சுற்றிவந்து மொணமொணென்று சொல்லும் மந்திரமேதடா*
*நட்டகல்லும் பேசுமோ நாதனுள் இருக்கையில்*
*சுட்டசட்டி சுட்டுவம் கறிச்சுவை அறியுமோ*

**சிவவாக்கியர் - 520**

நட்டு வைத்த ஒரு கல்லைத் தெய்வமாக என்று கூறிகிறீர் ஆனால் அதனுள் தெய்வம் இல்லை ஆனால் ஒவ்வொரு மனிதருக்குள்ளே இருக்கும் தெய்வத்தை அறியவில்லை. என்று சிவவாக்கியார் கறியைச் சுடவைக்கு சட்டியும், சுட்டுவமும் அந்தக் கறியின் சுவையை அறியாதது போல உனக்குள் உள்ள நாதனை அறியவில்லை.

*கல்லுவெள்ளி செம்பிரும்பு காய்ந்திடும் தராக்களில்*
*வல்லதேவ ரூபபேதம் அங்கமைத்து போற்றிடில்*
*தொல்லைஅற் றிடப்பெரும் சுகந்தருமோ சொல்லுவீர்*
*இல்லைஇல்லை இல்லைஇல்லை ஈசன்ஆணை இல்லையே*

**சிவவாக்கியர் - 507**

கல், வெள்ளி, செம்பு, இரும்பு கொண்டு தராக்களில் காய்ச்சி தேவர்களை பலரையும் பல வடிவங்களில் செய்து போற்றி வழிபடும் மக்களைப் பற்றி சிவவாக்கியார் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது.

கடவுளின் பெயரால் மக்கள் செய்யும் உருவவழிப்பாட்டினை சிவவாக்கியார் சித்தர் தம் பாடல்களில் நேரடியாக கண்டித்துப் பாடியுள்ளார். சித்தர்கள் தெய்வம் ஒருவரே அவர் உருவம் இல்லாத சோதியானவர் என்கிறார். அவரவர் விருப்பத்தின் படி இறைவனை உருவப்படுத்தி தனக்கென ஒரு தெய்வம், மதம் எனப் பிரிவினை உருவாக்கிக் கொண்டு சடங்குகளும், வழிபாட்டுமுறையையும் பின்பற்றி வருகின்றனர். இவ்வாறு வழிபாட்டினைச் செய்யும் மக்களின் துன்பத்தைப் போக்கி இன்பத்தைத் தருமோ என்று சிவவாக்கியார் பாடலின் மூலம் வினா எழுப்புகிறார்.

**மூடநம்பிக்கை**

*உளியிட்ட கல்லும் உருப்பிடித்த செஞ்சாந்தும்*
*புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம்*

**பத்திரகிரியார்-*17***

கல் சந்தனம் செம்பு ஆகியவற்றால் செய்த கடவுள் உருவங்கள் இவற்றில் சக்தியுள்ள தெய்வமாக ஆவது எப்போது என்று பத்திரகிரியார் கூறியுள்ளார்.

பத்திரகிரியார் கல் சந்தனம் செம்பு இவற்றில் கடவுள் இல்லை என்றும் இதில் இறைவன் வந்து சேருவது எப்போது எனக் கேட்கிறார்.

*ஆசார நேய அனுட்டானமும் மறந்து*
*பேசாமெய்ஞ் ஞானநிலை பெற்றிருப்ப தெக்காலம்*

**பத்திரகிரியார்-*152***

இப்பாடலில் இறைவனை வணங்கும் நிலையில் இருந்து மறந்து மெய்ஞான நிலையன் “மவுன” நிலையில் இருப்பது எப்போது என்று கூறியுள்ளார்.

*சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்*
*சூத்திரத்தைக் கண்டு துயர்அறுப்ப தெக்காலம்*

**பத்திரகிரியார்-*17***

என்னும் பாடலில் நூல் அறிவை நீக்கி வேதங்களையும் பொய் எனக் கூறி இவர் கடவுளுக்கும், நமக்கும் உள்ள தொடர்பைக் கண்டு துயரத்தை நீக்குவது எந்தக்காலம் எனக் கூறியுள்ளார்.

**மூடநம்பிக்கை:**

*பாரப்பா நால்வேதம் நாலும் பாரு*
*பற்றாசை வைப்பதற்கே பிணையோகோடி*
*வீரப்பா ஒன்றொன்றுக்கு ஒன்றை மாறி*
*வீணிலே யவர்பிழைக்கச் செய்த மார்க்கம்*
*தேரப்பா தெருத்தெருவே புலம்பு வார்கள்*
*தெய்வநிலை ஒருவருமே காணார் காணார்*
*ஆரப்பா நிலைநிற்கப் போறா ரையோ*
*ஆச்சரியங் கோடியிலே யொருவன் தானே*

அகத்தியர் – ஞா: 1-3

இப்பாடலில் வயிற்றுப் பிழைப்பிற்காக ஒரு சில சாஸ்திரத்தை ஒன்றை வெவ்வேறாக மாறி கூறுவார். அவரவர் பிழைப்பிற்காக செய்தது மார்கமேயாகும் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

*மூச்சொடுங்கிப் போனவிடம் ஆருங் காணார்*
*மோட்சத்தின் நரகாதி யிருப்புங் காணார்*
*வாச்சென்றே வந்தவழி யேற்றங் காணார்*
*வளிமாறி நிற்குமணி வழியுங் காணார்*
*வீச்சப்பா வெட்டவெளி நின்றாய்ப் பாரு*

*வேதங்கள் சாத்திரங்கள் வெளியாய்ப் போச்சே*
*ஆச்சப்பா கருவுதனில் அமைந்தாற் போலாம்*
*அவனுக்கே தெரியுமல்லா லறிவாய்ப் பாரே*

அகத்தியர் – ஞா:1 -7

இப்பாடலில் மூச்சு போனஇடம் தெரியாது, மோட்சம், நரகம் எங்கு உள்ளது என்று அறியார். மூச்சுக் காற்றை மாற்றி விட்டு மூச்சின்றி நிற்கும் வழியையும் அறியார். இவற்றை அறிந்தவர் இறைவர் என்பது அறியப்படுகிறது.

**கதைகளை உருவாக்குவது**

*உத்தார மிப்படியே புராணங் காட்டி*
*உலகத்தில் பாரதம்போல் கதையுண் டாக்கிக்*
*சர்த்தாவைத் தானென்று தோண வொட்டாக்*
*கபடநா டகமாக மேதஞ் சேர்த்துச்*
*சத்தமாக வழியாகச் சேர்ந்தோர்க் கெல்லாஞ்*

அகத்தியர் – ஞா: **3-4**

என்னும் பாடலில் புராணம் வெறும் கதையே, மகாபாரதம் போல் பல கதைகளை உண்டாக்கி உலகில் கடவுள் தானே என்பதைக் கூறி கபடநாடகம் செய்வார்.

அகத்தியர் பாடல்களில் மக்களின் மூடநம்பிக்கையையும், சாதிவேறு பாட்டையும் பாடல்களில் வேதாந்தக் கருத்துக்களே மிகுதியாக அமைந்துள்ளது.

**மூடநம்பிக்கை**

*பூசையது செய்வாமென்று கூட்டங் கூடிப்*
*புத்திக்கெட்டுக் கைம்முறையின் போக்கை விட்டுப்*
*பாசையது மிகப்பேசிப் பாட்டும் பாடிப்*
*படிப்பார்கள் மந்திரத்தின் பயனைக் காணார்*
*ஆசையிலே பெண்ணாசை மயக்கத் தாலே*

*அங்கிருந்த வாமத்தைப் பங்கு போட்டுப்*
*பேசையிலே மனம்வேறாய் நினைப்பான் பாவி*
*புரட்டுருட்டாயி நினைவு தப்பிப் பேசுவானே*

இப்பாடலில் பூசை செய்ய வேண்டும் என்று கூட்டம் கூடி பூசை செய்யும் முறையை விட்டு, மந்திரத்தின் பயனை அறியாமல் வேறு மொழியில் பாடல்களைப் பாடிப் படிப்பார்கள். பெண்ணாசை மயக்கத்தால் பூசைக்குறியவளை வசம் செய்து புத்திக் கெட்டவர்கள் அவர்களின் மனம் தீய நினைவில் செல்லும். இவர்களைக் கருவூரார் பாவி புரட்டுகள் பலவற்றையும் மயக்க நிலையில் பேசுவார்கள் என்று கூறியுள்ளார்.

*பேச்சென்றால் வாய்ச்சமர்த்தாய்ப் பேசிப் பேசிப்*
*பின்னு முன்னும் பாராமல் மதமே மீறி*
*நீச் சென்றும் நினைப்பென்றும் ஏதுங் காணார்*
*நிர்மூட ரனேகவித காலங் கற்றே*
*ஆச்சென்றா லதனாலே வருவ தேது*
*ஆத்தாளைப் பூசித்தோன்அவனே சித்தன்*
*மூச்சென்ன செய்யுமடா நரகில் தள்ளும்*
*மோசமது போகாதே முக்கால் பாரே*

**கருவூரார்-18**

இப்பாடலில் எதையும் சிக்காமல் பேசுகிறவர்களைக் கருவூரார் மூடர்கள் என்றும் இவர்களை எல்லாம் அறிந்தவர்கள் போல் பலரின் முன் மாயம்காட்டி மயக்குவார்கள்.அவர்களால் ஒன்றும் செய்துவிடமுடியாது. தாயான சக்தியை வழிபடுபவன் சித்தன் ஆவான். அதிலும் வெறும் மூச்சுப் பயிற்சியால் பயனில்லை. நரகமே கிட்டும்.

மாய வித்தைகளைக் காட்டுபவர்களை நம்பி மோசம் போகாதே. பக்தி வழியில் நடந்தால் முக்காலத்தையும் பார்க்கலாம் என்று கருவூரார் கூறியுள்ளார்.

**போலிவேடம் புனைபவர்கள்**

**புகலுவார் வேதமெல்லாம் வந்ததென்று**
**பொய்ப்பேசி சாத்திரங்கள் மிகவும் கற்றே**
**அகலுவார் பெண்ணாசை விட்டோ மென்றே**
**அறிவுக்கெட்டே ஊர்தோறும் சுற்றிச் சுற்றிச்**
**சகலமும் வந்தவர்கள் போல் வேடம் பூண்டு**
**சடைமுடியுங் காசாயந் தன்னைச் சுற்றி**
**இகலுமான மடங்காமல் நினைவு வேறாய்**
**எண்ணமெல்லாம் பெண்ணாசை பூசை தானே**
**கருவூரார் -16**

என்னும் பாடலில் வேதங்கள் எல்லாம் தாமாகவே வந்தது. என்றும் பொய்பேசி பெண்ணாசையை விட்டு விட்டோம் பல சாத்திரங்கள் மிகவும் கற்றதாகக் கூறி அறிவு கெட்டு ஊர் ஊராகச் சுற்றிவருவார்கள். இவர்கள் அனைத்தையும் கண்டவர் போல் பல வேடம் புனைவார்கள். அவர்களின் உடையும் மாறாமல் பெண்ணாசையில் புத்திக் கெட்டு இருப்பார்கள்.

கருவூரார் மக்களின் பலர் உடலையும் உடையும் சித்தராகவும், பக்தராகவும் மாயவித்தைகள் செய்வர்களைப் போல் வேடமணிந்து ஊர்தோறும் சுற்றி வருபவர்களை அடையாளம் படுத்தியுள்ளார்.

**மூடநம்பிக்கை**

***ஆமப்பா உலகத்தில் பெருநூல் பார்த்தோர்***
***அவரவர் கண்டதையெல்லாம் சரிதை யென்பார்***
***ஓமப்பா கல்செம்பைத் தெய்வ மென்றே***
***உருகுவார் பூசிப்பார் கிரியை யென்பார்***
***வாமப்பா யோகமென்ற கனியகாய் தின்று***
***வாய்பேசா ஊமைப்போல் திரிகு வார்கள்***
***காமப்பா ஞானமென விண்டு மேலும்***
***காக்கை பித்தன் மிருகம் போல் சுற்றுவாரே***
**வான்மீகனார் -4**

என்னும் பாடலில் பெருநூல்களைப் பார்த்தவர்கள்,தாம் கண்டதை எல்லாம் சரித்திரம் என்றும், அனைத்திற்கும் முதல்வனான இறைவனை அறியாமல் கல்லையும், செம்பையும், தெய்வம் என்று எண்ணி அதையே உருகி வழிபடுகின்றனர். அவற்றையே கிரியை,யோகம் என்றும் கிரியை என்பது கடவுளை ஆகமவிதிப்படி வழிபடுதல் அகத்தும் புறத்தும் பூசித்தல் கிரியையாகும். யோகம் என்பது ஒன்றிலே நிலையாக தியானம் செய்வது யோகம் ஆகும். அவர்கள் காய் கனிகளைத் தின்று வாய்பேசாத ஊமைப்போல் திரிவார்கள். தமக்கு ஞானம் வந்துள்ளது என்று எண்ணி மிருகம் போல் சுற்றுவார்கள். இவர்களை ஞானம் உடையவர்கள் என்று வான்மீகனார் தமது பாடலில் மக்களின் வழிபாட்டில் உள்ள மூடநம்பிக்கையை விளக்கியுள்ளார்.

**போலி வேடம் புனையும் சித்தர்கள்**

வையகத்தில் எண்ணில் அடங்காத நிலையில் சித்தர்கள் பலர் இருந்தனர். அதில் சிலர் பிழைப்பதற்காகவே போலி வேடம் புனைந்து தன்னைச் சித்தர் என்றும் குருமார் என்றும் ஏன் கடவுளே தான்தான் என்றும் கூறிக்கொண்டு இருந்தனர் என்ற செய்தியை வான்மீகனார் தமது பாடலின் மூலம் விளக்கியுள்ளார். அவை,

***சுற்றுவார் பெருநூலைப் பார்த்துப் பார்த்துத்***
***துடிப்பா ருலகத்தில் சிற்சில் லோர்கள்***
***தெற்றவா ரவர் பிழைக்க அனேக வேடம்***
***தெகத்தி லணிந்துகொண்டு திரிகுவார்கள்***
***பற்றுவார் குருக்களென் பார்சீட ரென்பார்***
***வையவே தீட்சைப்பார் தீமை யென்பார்***
***கத்துவார் திரிமூர்த்தி தாமே யென்று***
***காரணத்தை யறியாத கசடர் தானே***

***வால்மீகி - 5***

என்ற பாடலில் சிலர் பிழைப்பிற்காக பல வேடம் புனைந்து திரிந்தனர். அவர்கள் தாமே குருக்கள் என்றும் தாம் ஞானியின் சீடர் என்று சொல்லித் தீட்சை தருவதாகக் கூறுவார்கள். நான் இந்தத் தீமையில்இருந்து மீண்டு வந்தேன் தாமே கடவுள் என்று கத்துவார்கள். இவர்கள் எந்தக் காரணத்தையும் அறியாத கசடர் என்று வான்மீகனார் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலின் மூலம் சித்தர்களிலும் சிறந்தவரைக் கண்டு குருவாக ஏற்று தீட்சை பெற வேண்டும் என்று வான்மீகனார் கூறியுள்ளார். இதே போன்ற கருத்தினைப் பின்வரும் பாடலிலும் அறியமுடிகின்றது. அஃதாவது,

***தானென்ற வுலகத்தில் சிற்சில லோர்கள்***
***சடை புலித்தோல் சாகாயம் தவவேடம் பூண்டு***
***ஊனென்ற வுடம்பெல்லாம் சாம்பல் பூசி***
***உலகத்தில் யோகியென்பார் ஞானியென்பார்***
***தேனென்ற சிவபூசை தீட்சை யென்பார்***
***திருமாலைக் கண்ணாலே கண்டே மென்பார்***
***கானென்ற காட்டுக்குள் அலைவார் கோடி***
***காரணத்தை யறியாமல் கதறுவாரே***

***வால்மீகி - 6***

இப்பாடலின் மூலம் தானே தலைசிறந்தவர் என்றும் சிலர் சடைவளர்த்தும், புலித்தோலில் அமர்ந்தும், காவியுடை அணிந்தும் உடம்பு எல்லாம் திருநீறு அணிந்தும் தாமே யோகி என்றும் ஞானி என்றும் திருமாலைத் தம் கண்ணால் நேரே கண்டேன் என்றும் காடுகளில் அலைந்து திரிகின்றனர். இவர்கள் போலியான வேடத்தில் சிவ வேடம் புனைவர்களை அடையாளம் காணும் நிலையையும், இதிலும் திருமாலைக் கண்ணாலே கண்டவர் என்று கூறுபவர்களையும் அவர்கள் காரணங்களையே அறியாமல் கதறுவார்கள் என்று குறிப்பிட்டுள்ளார்.

வான்மீகனார் சைவசமயத்தையும் வைணவசமயத்தையும் ஆதரித்து உள்ளார்.

வான்மீகனாரின் பாடல்களில் போலியான சித்தர்களை அடையாளமும் காட்டுகிறார். இந்த நூல் கிடைத்தால் பூவுலகில் பலரும் சித்தனாவர் என்ற சூக்குமத்தையும் வெளிப்படையாக சொன்னேன் என்று பதின்மூன்றாம் பாடலில் விளக்கியுள்ளார். அதாவது சித்தர்களை உருவாக்குவதற்கும் வழியினைக் கூறியுள்ளார்.இந்நூலில் தனது பாடலின் எண்ணிக்கையும் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

***தானவனாய் இருக்கவென்றால் வாசி வேணும்***
***தனக்குள்ளே தானிற்க இடமும் வேணும்***
***வானவனாய் நின்றவர் கட்கெல்லாஞ் சித்தி***
***வானுக்குள் மனமிருக்க மதிபோல் காணும்***
***தேனவனாஞ் சித்தருக்குத் தெவிட்டா மூலி***
***சிரசப்பா உடலுக்குப் பதியே யாகும்***
***கோனவனா யிருக்கவென்று குறியைச் சொன்னேன்***
***குவலயத்திடல் பதினாறுங் குறுகத் தானே***
***வால்மீகி -16***

என்று பாடலின் எண்ணிக்கையும் உலகில் பதினாறு பாடல்களும் வந்து சேரும் எனக் கூறியுள்ளார்.

இவ்வியலில் உயிர், நாடி, உருவவழிபாடு, மூடநம்பிக்கை என்ற அடிப்படையில் சித்தர்கள் திருமூலர், வால்மீகனார், கொங்கணர், திருவள்ளுவர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார், அகத்தியர், கருவூரார், நந்தீசர் முதலானவர் பாடல்களை உயிர் பற்றிக் கூறிய சித்தர்கள், நாடிபற்றிக் கூறிய சித்தர்கள், உருவவழிபாடு, மூடநம்பிக்கையைக் கூறிய சித்தர்கள் என தனித்தனியாக சித்தர்களின் பாடல்கள் மூலம் ஆராயப்பட்டு தொகுத்துக்கூறப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்பு

1. மு.இராசபாபு, சித்தர் இலக்கியம் – ஓர் ஆய்வு, ஆய்வேடு

2. சி.எஸ். முருகேசன், பதினெண் சித்தர்கள் வரலாறு, ப.66

3. பா. கமலக்கண்ணன், சித்தர் நூல்களில் அகத்தியர், திருவள்ளுவர் வரலாறு, ப.8

4. சி. எஸ் முருகேசன், பதினெண் சித்தர் வரலாறு, ப.15

5. த.கோவேந்தன், பூம்புகார் பிரசுரம், ப.303

6. தேவநேய பாவணர், தமிழ் இலக்கிய வரலாறு, ப.26

# நிறைவுரை

சித்தர் பாடல்கள் ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை) என்னும் ஆய்வின்வழி அறியப்பட்ட முடிவுகளை காணலாம்.

இவ்வாய்வில் முதன்மையாக அமைந்து இருப்பது சொல்லடைவும், அகராதி வடிவமைப்பும் ஆகும். இச்சொல்லடைவினைக் கொண்டு ஆய்வுச் செய்திகள் தொகுத்து ஆராயப்பட்டுள்ளன.

சித்தர்களின் வாழ்வும் வரலாறும் என்னும் இயலின் மூலம் ஒவ்வொரு சித்தர்களின் வரலாற்றினை அவர்கள் இயற்றிய நூல்கள் மூலமும், மற்றச் சித்தர்கள் இயற்றிய நூல்களில் இருந்தும், சித்தர் வரலாற்று நூல்களிலிருந்தும் அறியப்பட்டன.

சித்தர்களின் வரலாற்றின் மூலமும் பாடல்களில் இருந்தும் சித்தர்களின் நூற்றாண்டினை அறியமுடிகின்றன.

மொழிநோக்கு என்னும் இயலின் மூலம் சித்தர்களின் பாடல்களில் சொல்லின் இலக்கணம், அதன் வகைப்பாடுகள், சொல்லாக்கங்கள், இலக்கண அமைப்பும் ஆகியவற்றை அறியமுடிகின்றன. சொல்லடைவைக் கொண்டு சொற்கள் பெயர், வினை என்னும் இருநிலையில் ஆராயப்பட்டுள்ளன. பெயர்ச் செல்லை விட வினைச் சொல்குறைவாக அமைந்துள்ளன.

இலக்கிய நோக்கு என்னும் இயலின் மூலம்சித்தர் பாடல்களில் அமைந்துள்ள சந்தநயம், தொடைநயம், வருணணை, அணிகள், சொல்லாட்சி முதலிய இலக்கிய கூறுகள் அமைந்துள்ளன. சித்தர்கள் ஒவ்வொரு இலக்கிய நடையில் பாடிவுள்ளனர்.

சமயநோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடு என்னும் இயலில் உயிர், நாடி, உருவவழிபாடு, மூடநம்பிக்கை என்ற இதன் அடிப்படையில் சித்தர்களை உயிர்பற்றிக் கூறிய சித்தர்கள், நாடிபற்றிக் கூறியசித்தர்கள், உருவவழிபாடு, மூடநம்பிக்கையைக் கூறிய சித்தர்கள் என தனித்தனியாக சித்தர்களின் பாடல்கள் மூலம் ஆராயப்பட்டு தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

# துணைநூற்பட்டியல்

**முதன்மைஆதாரங்கள்**


அறிவொளி — சித்தர் பாடல் மூலமும் உரையும் இரண்டு தொகுதி, வர்தமான் பதிப்பகம், சென்னை - 17

கோவேந்தன்,த. — சித்தர் பாடல்கள் பூம்புகார் பதிப்பகம், பிராட்வே, சென்னை-108, 1976.

திருமுருகன்,இரா.(தொகு.ஆ) — சித்தர் பாடல்கள், சாகித்திய அகாதமி, புதுதில்லி, 2012.


**துணைமைஆதாரங்கள்**


அழகம்மை, முனைவர். கே.பி. பட்டினத்தார் ஒரு நகரத்தாரே ஓர் ஆய்வு, அண்ணாமலையார் பதிப்பகம், காரைக்குடி, 2002.

இராகவன், அ. — சித்தர்களின் பிரணவசூத்திரம் முப்பு -1, அழகுபதிப்பகம், வில்லிவாக்கம், சென்னை – 49, 2009.

இராகவன், ஆ. அகத்தியர் அருள் செய்த பன்னிரெண்டாயிரத்து சூத்திரமான பன்னிரு காண்டம் – 200 மூலமும் உரையும், சங்கர் பதிப்பகம்,வில்லிவாக்கம், சென்னை – 49.

இராமசந்திரன், எஸ்.பி. (ப.ஆ) அகத்தியர் 12000 என்னும் பெருநூல் காவியம், நான்காவது காண்டம்,தாமரை நூலகம் வடபழனி, சென்னை-26, 1999.

இராமசந்திரன், எஸ்.பி.(ப.ஆ) அகத்தியர் முப்பு சூத்திரங்கள், தாமரை நூலகம், சென்னை – 26. 1992.

இராமசந்திரன், எஸ்.பி.(ப.ஆ) கொங்கணர் வாதகாவியம், 3000- முதல் காண்டம், தாமரை நூலகம், சென்னை – 26, 2000.

இராஜசூரியன் சிவாக்கியர் பாடல்களில் சமுதாயச் சிந்தனைகள், தமிழ்மதி வெளியீடு, சைதாப்பேட்டை, சென்னை – 15 2004.

இளம்பூரணர்உரை — தொல்காப்பியம், சாரதா பதிப்பகம், சென்னை –14, மூ.ப. 2015.

ஈரோடுஆற்றலரசுகவிஞர் — சித்தர் வரலாறு, திருவரசு புத்தக நிலையம், தி.நகர், சென்னை – 17, 2005.

கணேசலிங்கன், சே. சித்தர்கள் சித்தாந்தமும் சூபிசமும் , குமரன் புத்தக இல்லம், வடபழனி, சென்னை – 26, 2004.

கமலக்கண்ணன், பா. — சித்தர் நூல்களில் அகத்தியர், திருவள்ளுவர் வரலாறு, வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை -17, 1993.

கன்னியப்பன், சிவ. புலவர் — சித்தர் பாடல்கள் திரட்டும் உரையும், முல்லை நிலையம், சென்னை – 17, மறு.ப. 2001.

குருபன் வெற்றிகளை அள்ளித்தரும் நந்திபகவான், காளிஸ்வரி பதிப்பகம், தி.நகர், சென்னை – 17, 2013.

| | |
|---|---|
| குருப்பிரியன் அர்த்தநாரீஸ்வரன் | சிந்தையில் வாசம் செய்யும் சித்தர்களின் சுவாசம்,<br>கடலங்குடி பப்ளிகேசன்ஸ்,<br>தி.நகர், சென்னை – 17,<br>2011. |
| கோவேந்தன், த. | சித்தர்களின் பூசாவிதிகள்,<br>சங்கர்பதிப்பகம், வில்லிவாக்கம்,<br>சென்னை – 49,<br>2001. |
| சண்முகவடிவு, ந. | சித்தர் காட்டும் சமுதாயம்,<br>இராமகிருஷ்ணா மகளிர் கலை அறிவியல் கல்லூரி,<br>கோவை – 641044,<br>2007. |
| சத்தியாசுரேஸ் | சிவனும் சித்தர்களும்,<br>கண்ணதாசன் பதிப்பகம்,<br>தியாகராயநகர், சென்னை – 17,<br>2016. |

சர்மாதிரு.கே.வி.எல்.என் — ஸ்ரீசக்ரமஹாமேரு ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகள் (18 சித்தர்கள் பிருந்தாவன சக்தி பீடம் மாடம் பாக்கம்), ஸ்த்குரு ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் பிருந்தாவன அறக்கட்டளை, சென்னை – 4, 2004.

சாமிசிதம்பரனார் — சித்தர்கள் கண்டவிஞ்ஞானம் தத்துவம், செண்பகா பதிப்பகம், தி.நகர், சென்னை – 17, 2001.

சாமிநாதன், பி. — சதுரகிரி யாத்திரை அனுபவங்கள், திரிசக்தி பதிப்பகம், அடையாறு, சென்னை – 20, 2011.

சுப்பிரமணியப்பிள்ளை,இ.மு. — இராமாயண ஆராய்ச்சி முதல் பாகம், பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம் வெளியீடு, சென்னை – 7, ஆறா.ப.2003.

சுப்புரெட்டியார், டாக்டர். ந. — பட்டினத்தடிகள் , கலைஞன் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17,

| | |
|---|---|
| சுனிதாபூபாலன் | நாம் போற்றும் சித்தர்கள்,<br>வானதி பதிப்பகம்,<br>தி.நகர், சென்னை –17,<br>இ.ப. 2008. |
| சோமு,மீ.ப. | சித்தர் இலக்கியம்-6 ஆய்வு நூல்,<br>அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,<br>அண்ணாமலை நகர்,<br>2009. |
| ஞானஜோதிசம்பங்கிஸ்ரீ | பத்திரகிரிச்சித்தர் பாடல்<br>(மெய்ஞானப் புலம்பல்) மூலமும்<br>உரையும், ஞானதீபம் பதிப்பகம்,<br>திண்டிவனம் வட்டம் – 604207,<br>2004. |
| திரு.வி.க | பட்டினத்தார்பாடல்கள்,<br>கங்கை புத்தக நிலையம்,<br>சென்னை – 17,<br>இர.ப. 2003. |
| தேவநேயப்பாவாணர்,ஞா. | பண்டைத் தமிழ் நாகரீகமும்<br>பண்பாடும்,<br>பூம்புகார் பதிப்பகம்,<br>பிராட்வே,  சென்னை – 108,<br>2009. |

நமச்சிவாயமுதலியார், க. அகத்தியர் ஆராய்ச்சி,
தமிழ்குடி அரசுப் பதிப்பகம்,
சேப்பாக்கம், சென்னை.5, 1931.

நிர்மலாதேவி, சூ.(ப.ஆ.) கருவூரார் பலதிரட்டு,
உலகத் தமிழ்ஆராய்சி நிறுவனம்,
சென்னை -113,1982.

பரமசிவம்,டாக்டர்.செ. நற்றமிழ் இலக்கணம்,
பட்டுப் பதிப்பகம்,
அண்ணா நகர்,சென்னை – 40,
ஒன்.ப.2008.

பொற்கோ, டாக்டர். இலக்கணக் கலைக்களஞ்சியம்,
பூம்பொழில் வெளியீடு,
சாஸ்திரிநகர், அடையாறு,
சென்னை – 20,
நா.ப. 2013.

மகேஸ்வரர் சுவாமி வாழவழி உரைத்தபதினெண்
சித்தர்கள்,
வள்ளியம்மை பதிப்பகம்,
வடபழனி, சென்னை – 26,
2009.

மகேஸ்வர் சித்தர்களின் வரலாறும் – அஷ்டமா சித்திகளும், காயத்திரிப ப்ளிகேசன்ஸ், அரும்பாக்கம், சென்னை – 106, 2012.

முரளிதர்,டாக்டர். சக்தி சிவம் சித்தர்கள் (பொருள் – சித்தர் வரலாறு மருத்துவம்), கல்பனா பதிப்பகம், ஈரோடு- 638001, 2003.

முருகேசன், சி.எஸ்.(ப.ஆ) நந்தீசர்நிகண்டு – 300, அழகுபதிப்பகம், வில்லிவாக்கம்,சென்னை – 49, 2001.

முருகேசன், சி.எஸ்.(ப.ஆ) பதினெண் சித்தர்கள் திருமந்திரங்கள், (அருமுக உரையுடன்) அழகு பதிப்பகம்,சென்னை- 49, 2004.

முருகேசன், சி.எஸ்.(ப.ஆ) பட்டினத்தார் பாடல்கள் , சங்கர் பதிப்பகம், வில்லிவாக்கம் சென்னை – 49, 2003.

முருகேசன்,சி.எஸ்.(ப.ஆ) பதினெண்சித்தர் வரலாறு,
குறிஞ்சி பதிப்பகம்,
வில்லிவாக்கம், சென்னை-49,
நா.ப 2004.

மோகன், ஆர்.சி.(ப.ஆ) கருவூரார் வாதகாவியம்,
தாமரை நூலகம், வடபழனி,
சென்னை – 26.
2005.

மோகன், ஆர்.சி.(ப.ஆ) போகர் 7000 1-ஆம் காண்டம்,
தாமரை நூலகம், வடபழனி,
சென்னை – 26,
மூ.ப.2012.

மோகன், ஆர்.சி.(ப.ஆ) போகர்ஜனனசாகரம்,
தாமரை நூலகம், வடபழனி,
சென்னை – 26,
2015.

மோகன்,ஆர்.சி. (ப.ஆ) கருவூரார் வாதகாவியம் ,
தாமரை நூலகம், வடபழனி,
சென்னை -26,
2005.

யோகிசைலாஷ்நபாட — சித்தர் புராணமும் பள்ளிப்படை ஆலயங்களும்,
கற்பகம் புத்தகாலயம்,
சென்னை – 17,
2012.

ராமச்சந்திரன் — சித்தர் உடல் தத்துவம்,
தாமரை நூலகம் வடபழனி,
சென்னை – 26,
மூ.ப. 2014.

வெங்கட்ராமன் — சித்தர்கள் பூஜிக்கும் முறைகள்,
விஜயா பதிப்பகம்,
கோயம்புத்தூர் – 641 001,
2013.

ஜெகதா — 108 சித்தர்கள் வாழ்வும் வாக்கும்,
முத்துசுந்தரி பதிப்பகம்,
தி.நகர், சென்னை – 17,
2013.

ஜெகதா செயல்கள் சாம்புசிவம் பிள்ளை — சிந்தையள்ளும் சித்தர் அருள்மொழிகள்,
ராஜமாணிக்கம்மாள் வெளியீடு,
இராயப்பேட்டை, சென்னை –14,
2007.

ஸ்ரீநிவாசஅய்யங்கார்.

ஸ்ரீ.உ.வே.சி.ஆர். ஸ்ரீமத்வால்மீகி இராமாயணம்பாகம் – 1 லிப்கோபப்ளிகேசன்ஸ்(பி) லிட்சி.ஐ.டி. நகர், சென்னை – 35. 2000.

**ஆய்வேடு**

இராசபாபு, மு. சித்தர் இலக்கியம் – ஓர் ஆய்வு, ஆய்வேடு, மாநிலக்கல்லூரி, சென்னை – 5, 2010.

ஜெயக்குமார் நா.சைவசித்தாந்தம் உணர்த்தும் உயிர் அதன் வீடுபேற்று கொள்கைகள், ஓர்ஆய்வு, விவேகானந்தாகல்லூரி, ஆய்வேடு.

.

**திருமூலர்**

அகண்டம் (2.1) திருமூலர் - எங்கும் பரவிய பொருள்

அகார (3.4) (4.1) திருமூலர் - “அ” என்னும் எழுத்து

அகாரமதே (2.4) திருமூலர் - அகாரமாய்

அடி (1.1) (1.4) (2.1) (4.3) (9.2) திருமூலர் - அண்டத்திற்கு கீழ் பகுதி

அண்டம் (2.4) திருமூலர் - உலகம்

அத்தனார் (11.2) திருமூலர் - சற்குரு

அப்பால்(1.1) (1.3) திருமூலர் - அடுத்தது

அப்பாலை (8.2) திருமூலர் - இதையும்

அம்மூலமே (2.4) திருமூலர் - அப்பரம்பொருளாம்

அவ்வெழுத்தை (3.4) திருமூலர் - ஆன்ம எழுத்து

அற்று (1.3) திருமூலர் - நீங்கி

அறிவு (4.1) திருமூலர் - ஞானம்

அனுதினமும் (5.4) திருமூலர் - நாள் தோறும்

ஆக்கம் (5.4) திருமூலர் - தோன்றும், உருவாக்கம்

ஆசானாமே (5.4) திருமூலர் - குருவாக

ஆசானாய் (6.4) திருமூலர் - குருவாய்

ஆசானு (6.1) திருமூலர் - மனிதன்

ஆதார (3.1) (5.2) திருமூலர் - “அ” என்னும் தாரகமாகிய ஒலியை

ஆலம் (3.4) திருமூலர் - விசம்

ஆவி (11.2) திருமூலர் - உயிர்

இருநேரம் (7.3) திருமூலர் - காலை, மாலை

இருசுடரும் (7.1) திருமூலர் - இருநாடி இடா, பிங்களா

இவ்வகையே (7.3) திருமூலர் - இப்படி

ஈசானை (6.4) திருமூலர் - ஈசனை, சிசன்

உகாரம் (4.1) திருமூலர் - உ என்னும் எழுத்து

உடல் (10.2) திருமூலர் - ஆக்கை

உதித்து (7.1) திருமூலர் - தோன்றி

உலகம் (4.2) திருமூலர் - பார்

ஒடுங்கும் (7.1) திருமூலர் - அடங்கி

ஒழியும் (7.2) திருமூலர் - அழிந்து போகும்

ஒன்றாகும் (6.1) திருமூலர் - இணைந்து

ஒன்றி (11.4) திருமூலர் - இணை

ஓங்கார (6.3) திருமூலர் - பிரணவநாதம், ஓம்

கண்டம் (3.4) திருமூலர் - கழுத்து

கம்பம் (7.2) திருமூலர் - நடுக்கம்

கயிலாசம் (6.4) திருமூலர் - சிவனின் இருப்பிடம்

கருவி (10.1) (4.2)திருமூலர் - பொருள்

காயம் (11.2) திருமூலர் - உடல்

கோலமுடன் (3.3)திருமூலர் - பலவகைக் அலங்காரம் கோலத்துடன்

சிற்பரத்தினூடே (5.1) திருமூலர் - பரம்பொருள்

சிற்பரம் (4.1) திருமூலர் - சித்தத்தது கடவுள்

சுழியினிலே (9.4) திருமூலர் - சுழுமுனையில்

ஞானம் (11.1) திருமூலர் - பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் இலக்கணங்களை அறிவிக்கும் ஞான நூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து

நிட்டை கூடல் தத்துவங்கள் (10.1) திருமூலர் 24, நாடி10, அவத்தை5, மலம்3, குணம்3, மண்டலம்3, பிணி3, விகாரம்8, ஆதாரம்6, தாது7, வாயு10, கோசம்5, வாயில்9 - (உடல்)96- ஆன்ம தத்துவம்

தற்பரமே (4.1) திருமூலர் - கடவுளாகிய சுழுமுனை ஸ்தானம்

திருமூலர் (11.4) திருமூலர் - சித்தர்

தேடரிய(8.4) திருமூலர் - தேடக்கிடைக்காத

நடமும் (3.2) திருமூலர் - திருநடம்

நாடி மூன்று(3.1) திருமூலர் - இடங்கலை, பிளங்கலை, சுழுமுனை

படி (1.3) (1.3) திருமூலர் - பூமி, பாதமாகி

படிக்கு (1.3) திருமூலர் - படி முறை

பதியும் (1.3) திருமூலர் - பரம் பொருளை, தலைவன்

பரசிவத்தின் (7.1) திருமூலர் - பரமசிவன்

பரஞ்சோதி (1.3) திருமூலர் - பரம்பொருள்

பல்லுயிர்கள் (2.2) திருமூலர் - எல்லாஉயிர்கள்

பாதம் (4.3) (5.1) (7.3) (1.1) (10.3) (10.4) (11.1) (11.4) (8.4) (9.1) திருமூலர் - திருவடியை

பார்த்து (5.2) திருமூலர் - உணரப்படுவதாம்

பாவனையுள் (11.3) திருமூலர் - மனத்தில் ஒரு பொருளை உருவகித்துக் கொள்ளுதல்

பாழ (8.3) திருமூலர் - பாழாக

புகலிடம் (2.2) திருமூலர் - அடைக்கலம்

புரிசடையோன் (5.3) திருமூலர் - இறைவன், சிவன், கடவுள்

பீடமாகும் (6.3) திருமூலர் - அமரும்இடம்

பொது (2.2) திருமூலர் - சபை

மணம் (2.3) திருமூலர் - வாசனை

மதிக்கஒண்ணா (2.3) திருமூலர் - மதிப்பிட முடியாதபடி

மது (2.3) திருமூலர் - கள், (பூவின் உள்ள தேன்)

மீசானும் (6.1) திருமூலர் - கடவுளும்

முச்சுடர் (9.3)திருமூலர் - இடங்கலை, பிளங்கலை, சுழுமுனை

முப்பாழ (1.3) திருமூலர் - விந்து, மோகினி, மான் ஆகிய மூன்று மாயை

**கொங்கணர்**

அக்காள் (1) கொ- 103:1 - காளி

அச்சங்கம் (1) கொ- 26:2 - வலம்புரிச்சங்கின் ஒலி

அட்சரம் (2) கொ- 18:1,41:1 - பிரணவம்

அட்டமா (1) கொ- 59:1 - அட்டமாசித்தி என்னும் உட்டு சக்தி

அடக்கம் (2) கொ- 8:2,36:2 - புவியை தனது கட்டுப்பாட்டில் வைத்தல் வாலைத் தெய்வமதில் அடக்கம்

அடி (17) கொ- 26:1,26:1,26:2,30:1,30:1,30:2, 30:2,33:2,38:2,41:1,48:2,51:2,52:2, 56:1,57:1,57:2,86:1 - கடுமையாக நடக்க வேண்டியது

அடியாரை (1) கொ- 88:1 - சிவனடியார்கள்

அடியுங்கடி (2) கொ- 13:2,69:2 - கும்மியடியுங்கடி

அண்ட (1) கொ- 106:1 - உலகம்

அண்டாது (1) கொ- 104:1 - அண்டாமல் செய்வாள்

அத்தியில் (1) கொ- 31:1 - அத்தி என்ற நாடி

அது (2) கொ- 46:2,48:2 - சுட்டுப்பெயர்

அந்தரி (1) கொ- 6:1 - ஆகாயவாணி என்ற அம்பிகை

அம்பலம் (1) கொ- 55:1 - வாசி

அம்பிகை (2) கொ- 5:1,6:1 - சக்தி

அம்புலி (1) கொ- 59:1 - இரண்டு சந்திரன்

அமிழ் (1) கொ- 25:1 - அமிர்தம்

அமுதம் (1) கொ- 64:1 - பால்

அரிக்கு (2) கொ- 11:1,11:1 - திருமால்

அல்ல (4) கொ- 68:1,68:2,101:2,103:2 - பொய் அல்ல நிரந்திரமன்று

அவ்வை (2) கொ- 70:2,100:1 - அவ்வைபாட்டி

அவி (1) கொ- 24:2 - அணை

அழிந்திட்டதும் (1) கொ- 50:1 - சாம்பலானது

அழிந்து (1) கொ- 46:1 - நீங்கியது

அற்றது (2) கொ- 100:1,100:2 - புரியாத காரணம்

அற்று (1) கொ- 76:2 - அல்ல

அறியான் (1) கொ- 101:1 - அறியாதவன்

அறிவார் (1) கொ- 20:1 - அறியமுயல்பவர்கள்

அன்னம் (3) கொ- 51:1,68:1,85:1 - சோறு, உணவு

அனுகூலம் (1) கொ- 35:1 - நன்மை பயக்கும்

ஆண்புலி (1) கொ- 51:1 - குண்டலினி

ஆண்டவன் (1) கொ- 5:2 - திருமால்

ஆத்தாளை (1) கொ- 77:2 - தாயாகிய வாலாம்பிகை

ஆதாரமாகிய (1) கொ- 64:2 - மூலாதாரம், சுவாதிடானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆதாரங்கள்

ஆதி (3) கொ- 4:1,12:1,103:1 - முதல்

ஆயனும் (1) கொ- 17:1 - திருமால்

ஆயுசு (1) கொ- 104:1 - ஆயுசு

ஆளவேணும் (1) கொ- 15:2 - பலனை பெறவேண்டும்

ஆற்றிலே (1) கொ- 57:1 - ஆறு எழுத்தாகிய ச.ர.வ.ண.ப.வ

ஆறு (3) கொ- 37:2,75:1,108:1 - ஆறு எழுத்து

இசைந்திடும் (1) கொ- 4:2 - உகந்தவன்

இடுகுது (1) கொ- 58:1 - இடுதல்

இரண்டு (9) கொ- 19:1,46:1,56:1, 57:1,58:2, 59:1,61:1,96:2,97:1 - அ.உ இரண்டு எழுத்து. இடங்கலை, பிங்கலை

இலை (1) கொ- 12:1 - காலம்

இறந்து (1) கொ- 43:2 - அழிந்து

ஈ (1) கொ- 47:2 - தேன் பூச்சி

ஈசன் (1) கொ- 50:2 - சிவன்

ஈனா (1) கொ- 66:1 - கருவுறாது ஈன்ற கன்னியாவாள்

உகம் (1) கொ- 14:2 - உலகம்

உகார (1) கொ- 39:2 - சக்தி

உற்பத்தி (1) கொ- 94:2 - தோன்றுதல்

உற்ற (1) கொ- 105:2 - உற்ற காலன்

உற்றது (2) கொ- 100:1,100:2 - நிகழ்ந்த உண்மை

உறை (1) கொ- 67:1 - கத்தி வைக்கும் உறை

ஊத்தை (2) கொ- 23:1,23:2 - அழுக்கு

ஊதும் (1) கொ- 26:2 - சங்கின் ஒலி கேட்கும்

ஊமை (2) கொ- 13:1,41:1 - ஊமை எழுத்தாகிய “சி ”

எட்டாத (1) கொ- 42:2 - ஞானயோகம்

எட்டாதே (1) கொ- 16:1 - எட்டாமலாட்டாள்

ஏய்க்கு (1) கொ- 19:1 - வஞ்சித்தல்

ஏழை (1) கொ- 85:1 - பொருளற்றவர்

ஐந்தாம் (4) கொ- 17:1,17:1,17:2,17:2 - ந.ம.சி. வ.ய என்ற ஐந்தெழுத்து

ஒட்ட (1) கொ- 42:1 - தெரியாது

ஒத்தாசையாய் (2) கொ- 26:1,55:1 - உதவியாக

கண்டவன் (2) கொ- 30:1,30:2 - அடைந்தவன்

கண்ணியர் (1) கொ- 66:2 - இளமைப்பெண்

கத (1) கொ- 54:1 - கதவு

கருவூரில் (1) கொ- 55:1 - கருவறை

கருவை (1) கொ- 22:2 - உட்பொருள்

கல்வி (1) கொ- 0:1 - முத்தி

கலசாவல் (1) கொ- 53:1 - மீன்கொத்திப்பறவைகள்

கழுகு (1) கொ- 56:2 - ஐம்புலன்கள் என்னும் கழுகு

காசார் (1) கொ- 92:1 - காவியனிந்த துறவிகள்

காட்சி (1) கொ- 78:2 - இறைவனின் அருள்

காண்டீபன் (1) கொ- 5:2 - அர்ச்சுனன்

காதலி (1) கொ- 0:1 - சிவனின் இடபக்கத்தில் அர்த்தநாரியாக இணைந்தவள்

காப்பது (1) கொ- 1:2,2:2,3:2,4:2,5:2,6:2,74:1 - காத்தல்

காயம் (1) கொ- 42:2 - உடல்

காயும் (1) கொ- 80:2 - காய்கள்

காரண (1) கொ- 101:2 - உண்மையை அறிந்தவன்

காரிய (3) கொ- 16:2,91:1,101:2 - காரியத்தைச் சாதிப்பவன்

கால் (7) கொ- 47:1,48:2,96:1,96:1,97:1,
97:2,100:1 - காற்று

காலன் (1) கொ- 84:2 - எமன்

காளையை (1) கொ- 42:1 - மனம் என்னம் அடங்காத காளை மாடு

கிணற்றுக்கு (2) கொ- 56:1,60:1 - மனம் என்னும் கிணறு நாபி என்று அழைக்கப்படும்

கிழ (1) கொ- 96:1 - வயதான

குட்டையன் (1) கொ- 47:1 - சுரோணித முட்டை

குதிரை (1) கொ- 98:2 - வாயில்லாத குதிரை எனப்படும் யாழ்

கும்பி (1) கொ- 55:1 - வயிறாகிய சபை

குருடன் (1) கொ- 57:2 - மூவாசை என்னும் மூன்று குருடர்கள்

குலம் (1) கொ- 45:1 - பெண்கள் குலம்

குள (1) கொ- 55:1 - வயிறாகிய சபை

குளத்தில் (1) கொ- 55:1 - குளம் போன்ற கருவறை

கூடு (1) கொ- 78:1 - உடம்பு

கூற்றுனும் (1) கொ- 57:2 - எமன்

கூனி (2) கொ- 96:1,96:2 - வயதான கூனி

கெண்டை (1) கொ- 56:1 - ஞானம், அஞ்சானம் என்ற கெண்டை மீன்கள்

கொங்கணர் (1) கொ- 109:1 - சித்தர்

கொடுஞ்சூலி (1) கொ- 66:1 - காளி

கொம்பாம் (1) கொ- 1:2 - ஒரு கொம்பினை உடைய

கொம்பை (1) கொ- 42:2 - ஞானமாகிய கொம்பு

கொழுந்தியும் (1) கொ- 64:2 - மனைவியின் தங்கை கொழுந்தி

கொற்றவன் (1) கொ- 108:2 - அரசன்

கோட்டை (3) கொ- 37:1,49:2,63:2 - உடல்

கோட்டையிலே (1) கொ- 49:1 - தொண்டைக்குழி

கோபுரம் (1) கொ- 61:2 - மூக்கு

கோழிக்கு (1) கொ- 96:1 - கோழி எனப்படும் விட்டில் பூச்சி

சடலம் (1) கொ- 23:1 - உடம்பு

சத்தி (3) கொ- 1:1,67:2,69:2 - சக்தி

சத்துரு (1) கொ- 105:2 - எதிரிகள்

சதாசிவம் (1) கொ- 31:2 - சிவபெருமான்

சதை (1) கொ- 69:1 - ஊண்

சந்தோட (1) கொ- 38:2 - மகிழ்ச்சி

சரசுவதி (1) கொ- 2:2 - கலைமகள்

சல்லாப (1) கொ- 7:2 - சரசமான ஆனந்த பாடல்

சவமடி (1) கொ- 84:2 - செத்த பிணம் ஆகின்றான்

சற்குரு (1) கொ- 3:2 - உண்மைக்குருவாகிய சிவபெருமான்

சாத்திரம் (3) கொ- 9:1,15:1,99:1 - வேத புராணங்கள்

சாவில் (1) கொ- 54:1 - சாவி

சித்தி (1) கொ- 1:2 - பூரணமாக

சிவசம்புவாம் (3) கொ- 3:2,73:1,88:1 - சிவபெருமான்

சீமையில் (1) கொ- 20:1 - வடநாடு

சீர்புல (1) கொ- 88:1 - மேன்மை பொருந்தியது

சுந்தரி (1) கொ- 6:1 - அழகு மங்கை என்னும் அம்பிகை

சூரர்தமை (1) கொ- 65:2 - மகிதா சூரன்

செகம் (1) கொ- 14:1 - உலகம்

செந்தணல் (1) கொ- 59:2 - உடல் அக்னி மீறியது

செல்வியின் (1) கொ- 0:2 - வாளாம்பிகை

தரிக்கு (1) கொ- 11:2 - திருமால்

தற்பரனை (1) கொ- 45:2 - முழு முதற் கடவுளான சிவனை குறித்தல்

தாய் (1) கொ- 30:2 - அன்னை பராசக்தி

திரிசூலி (1) கொ- 66:2 - காளி

திரு (1) கொ- 83:1 - கோவில்

தில்லையில் (1) கொ- 7:1 - நடராசர் பெருமான் கொண்டுள்ள கோயில்

துடுக்கம் (1) கொ- 26:1 - உடுக்கை

தேசாந்திரங்களும் (1) கொ- 92:2 - அன்னிய நாடுகள்

தேர் (1) கொ- 59:1 - சகஸ்ராரத்தில்

தேனும் (1) கொ- 53:2 - மாங்காய் பாலில் அமுதம்

தொத்தி (1) கொ- 49:1 - ஒட்டி

நகார (1) கொ- 39:1 - நகாரமாகிய பிரம்மா

நத்திய (1) கொ- 72:1 - உழைப்பவர்கள்

நந்த வனத்திலே (1) கொ- 72:1 - பூந்தோட்டமாகிய ஆக்ஞா

நந்தீசர் (1) கொ- 6:2 - சித்தர்

நாதமும் (1) கொ- 9:2 - பிரணவஒளி

நாதனின் (1) கொ- 0:3 - வேத நாயகனான சிவன்

நாதி (1) கொ- 103:2 - ஆதியில்

நாயகன் (1) கொ- 103:2 - சிவபெருமான்

நால் (1) கொ- 75:1 - நான்கெழுத்தாகிய பிரம்மம்

நாளாய் (1) கொ- 61:1 - நீண்டகாலம்

நிசம் (1) கொ- 18:2 - உண்மை

நித்திரை (1) கொ- 105:1 - தூக்கம்

நிலைக்கார (1) கொ- 37:1 - காவலர்கள்

நீரிழிவு (1) கொ- 104:1 - ஒரு வகை நோய்

நேசவான் (1) கொ- 107:2 - அன்புக்குரிய நண்பன்

பங்கய (1) கொ- 3:2 - சிவபெருமானின் தாமரை பொற்பாதம்

பஞ்சை (1) கொ- 86:1 - ஏழைகள்

பட்டாணி (1) கொ- 30:2 - யோகியாவாய்

பணி (1) கொ- 5:2 - தேரோட்டியாக பனி பூண்டவன்

பதம் (2) கொ- 2:2,110:2 - பாதங்கள்

பரகதி (1) கொ- 81:2 - நற்கதி

பரி (2) கொ- 29:1,30:2 - வாசி பழக்கம்

பரிக்கும் (1) கொ- 11:2 - மூச்சுக்குள் நின்றது

பரிகாரர்கள் (1) கொ- 37:2 - மருத்துவர்கள்

பழம் (1) கொ- 91:2 - புளிப்பழம்

பனாதி (2) கொ- 85:1,86:1 - ஏதும் அற்றோர்கள்

பாக்கியம் (1) கொ- 74:2 - ஆளுக்கு மேலான பாக்கியம் இல்லை

பாசம் (1) கொ- 57:2 - பாசவலை

பாண்டம் (1) கொ- 23:1 - உடல்

பாண்டி (1) கொ- 5:1 - பாண்டியநாடு

பாணியடி (1) கொ- 30:1 - மேல் மகன்

பாதம் (1) கொ- 0:4 - தாமரை பாதம்

பாரதி (1) கொ- 110:2 - துர்கை

பிண்டம் (1) கொ- 35:2 - உடம்பு

பிதா (1) கொ- 8:1 - தந்தை

பில்லி (1) கொ- 104:2 - மரணத்தை உண்டுபன்னக்கூடிய பில்லி

புவனமும் (1) கொ- 106:1 - உலகம்

புவி (1) கொ- 8:2 - உலகம்

பூரணம் (1) கொ- 101:1 - பூரணமாகிய முழுமை

போக்கியமும் (2) கொ- 82:1,82:1 - மக்களின் உணவு உபசரிப்பும்

மகார (1) கொ- 40:1 - மணிப்பூரகத்தில் இருக்கும் திருமால்

மண்டலம் (3) கொ- 27:1,28:1,60:1 - சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்னிமண்டலம்.

மலடி (1) கொ- 66:1 - பிள்ளைப் பெறாதவள்

மாடும் (1) கொ- 98:1 - ஆன்மா

மால் (1) கொ- 4:2 - திருமால்

முனி (1) கொ- 110:1 - முனிவர்கள்

மூடியதும் (1) கொ- 50:2 - பிடிக்கப்பட்டது

மூத்த (1) கொ- 44:2 - முதல்

மூர்த்தி (1) கொ- 106:1 - தலைமையான மூர்த்தி

மூல (2) கொ- 28:1,60:1 - மூலாதாரம்

மூன்று (4) கொ- 44:2,51:2,57:2,96:1 - மூன்று ஏழுத்து

மெத்தை (1) கொ- 84:1 - பஞ்சு மெத்தை

மெய்யடி (1) கொ- 75:2 - உண்மையடி

மெல்ல (1) கொ- 65:1 - மெதுவாக

மெல்லிய (1) கொ- 84:1 - மனைவி

மேய்ந்து (1) கொ- 53:1 - மீது

மைப்படும் (1) கொ- 66:2 - மைதீட்டிய

மோசம் (1) கொ- 58:1 - தீமை

மோர் (1) கொ- 94:2 - உணவுப்பொருள்

யார்க்கும் (1) கொ- 86:2 - எவரையும்

யுத்த (1) கொ- 84:2 - சண்டை

யூகம் (1) கொ- 93:2 - யுக்தி

ராசபாண்டி (2) கொ- 5:1,82:1 - அரசன்

ரிஷி (1) கொ- 110:1 - முனிகள்

ருத்திரன் (1) கொ- 33:2 - சிவபெருமாள்

வகார (2) கொ- 39:1,40:1 - மகேஸ்வரன்

வகை (2) கொ- 98:2,108:1 - பிரிவு

வலம்புரி (1) கொ- 26:2 - வலம்புரிசங்கு

வழி (3) கொ- 9:2,21:1,27:2 - வழி மாறுதல்

வள்ளி (1) கொ- 4:2 - வள்ளி என்னும் தெய்வம்

வளைக்க (1) கொ- 42:2 - கொம்பினை வளைத்தல்

வாசியும் (1) கொ- 27:2 - மூச்சு பயிற்சியும்

வாயி (2) கொ- 96:2,98:2 - பானையின் வாய்

**திருவள்ளுவர்**

அக்குண்டலி (3.3)

அகண்டம்(கா.1) திருவள்ளுவர் - விரிந்த பிரபஞ்சம், முழுமை

அகத்தியுனே(கா.2) திருவள்ளுவர் - சித்தர்

அகத்தே(2.2) திருவள்ளுவர் - வயிற்றின் உள்ளேயே

அசைவு(5.2) திருவள்ளுவர் - அசைய

அஞ்சு(19.1) (19.2)(19.2) திருவள்ளுவர் - ஐந்து

அண்டம்(கா.1) திருவள்ளுவர் - உலகம்

அண்டரண்டர் (4.1) திருவள்ளுவர் - உலகோர்

அதிசயம் (2.3) திருவள்ளுவர் - வியப்பு

அது(4.4) (5.4)(11.2) (13.4)(18.1)திருவள்ளுவர் - சுட்டு

அம்புவி(3.1) திருவள்ளுவர் - இவ்வுலகில்

அமிர்த(11.4) திருவள்ளுவர் - சிவசம்பு, அமுதரசம்

அமுரி (17.3) திருவள்ளுவர் - உப்பின் கசடு

அயன் (கா.1) திருவள்ளுவர் - பிரமன்

அரவம் (10.3) திருவள்ளுவர் - பாம்பு

அழித்தப்பொருள்(6.3) திருவள்ளுவர் - அழியத்தக்க பொருள்

அற்ப (10.3) திருவள்ளுவர் - சிறிதாய்

அன்னை(2.1) திருவள்ளுவர் - தாய்

அனித்தியமே(7.4) திருவள்ளுவர் - அழியும் தன்மையதே

அனுப்படி (8.1) (8.4) திருவள்ளுவர் - விதிப்படி
ஆகமம்(4.1) திருவள்ளுவர் - நூல்
ஆசை (9.1) திருவள்ளுவர் - விருப்பம்
ஆண்மையாய் (5.3) திருவள்ளுவர் - ஆண்மை வளங்க
ஆய்ந்தறி(3.1) திருவள்ளுவர் - தெரிந்து
இரவி(கா.2) திருவள்ளுவர் - சூரியன்
இலகும்(6.2) திருவள்ளுவர் - விளங்கும்
இல்லா (5.3) திருவள்ளுவர் - இல்லாது
ஈனர்க்கு (9.4) திருவள்ளுவர் - காமம் உடையவர்க்கு
உணரும் (17.4) திருவள்ளுவர் - உணர்க
உதிக்கும் (5.1) திருவள்ளுவர் - தோன்றும்
உதித்து(3.1) திருவள்ளுவர் - உதித்தேன்
உப்பின் (16.1) (18.1) திருவள்ளுவர் - காய சித்திக்காக மூப்பூ செய்யும்
உள்ளம் (16.4) திருவள்ளுவர் - உள்ளத்தால்
உன் (9.3) (16.4) (20.4) திருவள்ளுவர் - சிந்திக்க
உன்னல் (8.3)திருவள்ளுவர் - விதிப்படி
ஊழ் (14.1) திருவள்ளுவர் - விதி
எய்திடினும் (7.1) திருவள்ளுவர் - பிறந்தாலும்
எய்துமாறு (12.2) திருவள்ளுவர் - அடைய
ஏழு (7.1) திருவள்ளுவர் - ஏழு வகையான பிறவிகள்
ஒழித்தேன் (4.03) திருவள்ளுவர் - அழிவது
ஒழியாமல் (20.3) திருவள்ளுவர் - அழியாமல்
கசடுதான் (18.1) திருவள்ளுவர் - அழுரி
கண்டிதமா (4.2) திருவள்ளுவர் - தனித்துள்ள
கண்டிலரே (6.4) திருவள்ளுவர் - பார்ப்பாய்
கமலம்(கா.3) திருவள்ளுவர் - அதாரகமலம்
கழியக்கழிய (7.3)(7.3) திருவள்ளுவர் - வளரவளர
கற்பகத்தை (10.4) திருவள்ளுவர் - எல்லாம் அது தரும்
கன்ம(15.1) திருவள்ளுவர் - விதி
காண்கிலரே(2.4)(4.4) திருவள்ளுவர் - அறியவில்லை
காண்கிலனே(3.4) திருவள்ளுவர் - அறியவில்லை
காய்ச்சிய(17.3) திருவள்ளுவர் - செய்து
காயம் (4.2)(8.3)(9.3)(10.1)(11.3)(18.3)
திருவள்ளுவர் - உடல்
கும்பி தனிலேயு ழன்றும்(3.3) திருவள்ளுவர் - வயிற்றிலே கருவாய்த் துன்புற்றபின்
குழியில் (10.3) திருவள்ளுவர் - மூலத்தில்

சாரல் (20.2) திருவள்ளுவர் - சார்ந்து
சுன்னம் (18.2) திருவள்ளுவர் - முதல்நிலை
மதுரதமிழோதும்(கா.2) திருவள்ளுவர் - இனிய தமிழை ஓதும்
திங்களும் (2.2) திருவள்ளுவர் - மாதம்
தீ(14.3) திருவள்ளுவர் - நெருப்பு
நமன் (11.1)(12.3) திருவள்ளுவர் - எமன்
பஞ்ச பூதம்(19.1) திருவள்ளுவர் - நிலம் நீர் காற்று ஆகாயம் தீ
வான்புவி (4.1) திருவள்ளுவர் - நாம் வாழும் நிலம்

**சிவவாக்கியர்**

அக்கிடீர்(151:1) சிவவாக்கியர் - உருத்திராக்க மணி அணிய மாட்டீர்
அக்கு(76:3) சிவவாக்கியர் - எலும்பு
அக்கு(82.3) சிவவாக்கியர் - உத்திராட்சம்
அக்குமணி(414:3) சிவவாக்கியர் - உருத்திராக்க மணி
அகங்கை(199:1) சிவவாக்கியர் - உள்ளங்கை
அகண்டம்(2:1) சிவவாக்கியர் - முழுமை
அகத்துளும் (115:3) சிவவாக்கியர் - உடம்பின் உள்ளும்
அகஷரம்(73.1) சிவவாக்கியர் - அழியாதது
அங்கி(119:1) சிவவாக்கியர் - நெருப்பு
அங்கி(246:1) சிவவாக்கியர் - அக்கினி நெருப்பு
அங்கி(303:3) சிவவாக்கியர் - தீ
அசங்கு(39:1) சிவவாக்கியர் - அசை அசவை அசுபா என்னும் மந்திரம்
அஞ்சு வாசல் கதவு(186:3) - நிலம் நீர் காற்று ஆகாயம் தீ
அஞ்செழுத்து(2:1) சிவவாக்கியர் - ஐந்து எழுத்து சிவாயநம
அஞ்செழுத்து(23.3) சிவவாக்கியர் - நமசிவாய
அண்டர்(266:1) சிவவாக்கியர் - உலகோர்
அண்மி(398:4) சிவவாக்கியர் - அணுகி
அணியரங்கம்(146:2) சிவவாக்கியர் - அழகிய சிற்றம்பலம்
அத்தன்(149:4) சிவவாக்கியர் - தலைவன் கடவுள்.
அத்தியூரர்(286:4) சிவவாக்கியர் - பிள்ளையார்
அத்திலே(350:1) சிவவாக்கியர் - வழியிலே
அதீதம்(283:3) சிவவாக்கியர் - கடந்தது
அந்தம்(148:1) (406:1) சிவவாக்கியர் - முடிவு
அந்தனித்த சிவவாக்கியர் - அந்தத் தனித்த
அந்திசந்தி(201:4) சிவவாக்கியர் - இரவு பகல்
அநாதி(7:3) சிவவாக்கியர் - தொடக்கம் அற்றது

அப்பு (146:1) சிவவாக்கியர் - நீர்

அம்பத்தோன்றென் அக்கரங்கள்(66:1) சிவவாக்கியர் - ஐம்பத்தோரெழுத்துகள் ஆறாதாரத்துக்கும்

உரியவை மூலாதாரம்- 4, சுவாதிட்டானம்- 6, மணிப்பூரகம் – 10, அநாகதம்- 12, விசுத்தி – 16, ஆக்ஞேயம் – 3, ஆக 51 ஆகும் அம்பரம்(278:1) சிவவாக்கியர் - ஆகாயம்

- அம்பலம் வெளி
- நீர்
- சந்திரன்

அயன்(146:2) (225:1) சிவவாக்கியர் - பிரமன்

அரங்கன் பட்டணம்(98.4) சிவவாக்கியர் - திருமாலின் வைகுந்தம்

அரண்(146:2) சிவவாக்கியர் - சிவன்

அரி(225:1) சிவவாக்கியர் - ஹரி திருமால்

அருக்கன்(198:1) சிவவாக்கியர் - சூரியன் வலது கண்ணாகும்

அருக்கன்(186:1) (330:1) (352:1) சிவவாக்கியர் - சூரியன்

அரும்பில்லாத பூ(180:1) சிவவாக்கியர் - அரும்பில்லாத மலர்ந்த யோகத் தாமரை

அருவம்(224:1) சிவவாக்கியர் - உருவமற்றது

அலகிடும்(399:1) சிவவாக்கியர் - பெருக்கும்

அலங்கலாய்(251:1) சிவவாக்கியர் - மாலை யணிந்தவனே

- அல்லி மலர் போன்ற வடிவம் கொண்ட யோனி (சக்தி பரிணமிக்கும் கருவறை)
- வீணாக
- உலகம்

அளவதான மேருவும்(174:4) - அளவில் பெரிய மேருமலை

அறிந்துகொண்ம் சிவவாக்கியர் - அறிந்து கொள்ளும்

அன்று(427:2) சிவவாக்கியர் - நிறைந்து

- தோன்றிய காலம் அல்லது மறையும் காலம் முதலியன அறிய முடியாதவையே அனாதி ஆகும்
- எப்போது தோன்றியது என்று கண்டறிய முடியாத பொருள்

அனேக ரூபமாய்(206:2) சிவவாக்கியர் - பலப்பல வடிவங்களும்

- பசு
- உடம்பு
- நூல்கள்
- உடலின் தன்மை

- நாட்டிய அரங்கம்
- ஆடுதலை மேற்கொண்ட
- முதன்மை
- ஆதாரமாக

ஆதி(148:1) சிவவாக்கியர் - தோற்றம் ( முதல்)
ஆரிடமும் (115:3) சிவவாக்கியர் - அரிய இடங்கள்
ஆலம் (16.3) சிவவாக்கியர் - நஞ்சு
ஆலம் வித்தில்(95.1) சிவவாக்கியர் - ஆலம் விதை
ஆலம்உண்ட (155:2) சிவவாக்கியர் - ஆலகால நஞ்சை உண்ட
ஆவியார் (116:4) சிவவாக்கியர் - உயிர் உடலில் அடங்குவது
ஆழியாமல்(283:3) சிவவாக்கியர் - திருமால்
ஆழியோன்(50:2) சிவவாக்கியர் - சக்கரத்தை உடையவனாகிய திருமால்
ஆறு (174:1) சிவவாக்கியர் - சவாதிட்டானம்
ஆறு (187:1) சிவவாக்கியர் - நமோ குமாராய( ஆறெழுத்து மந்திரம்)
ஆறுபங்கயம்(217:4) சிவவாக்கியர் - ஆறு ஆதாரத் தாமரைகள்
ஆறும்(270:2) சிவவாக்கியர் - நமோ குமாராய அல்லது சரவண பவ
இடந்து(432:4) சிவவாக்கியர் - தோண்டி
இடுதல்(90.4) சிவவாக்கியர் - பணிந்து நிற்றல்
இடைந்திருக்கும்(465:1) சிவவாக்கியர் - சோர்ந்திருக்கும்
இத்ததை(89:4) சிவவாக்கியர் - இதனை
இந்தியம் சிவவாக்கியர் - இந்திரியம்
இபங்கள் எட்டு(283:1) சிவவாக்கியர் - திசை யாகைள் எட்டு
இபங்கள்(268:1) சிவவாக்கியர் - யானைகள்
இரசகந்தம் சிவவாக்கியர் - சுவையும் மனமும்
இரண்டு(174:2) சிவவாக்கியர் - ஆக்ஞை
இரண்டு(187:1) சிவவாக்கியர் - ஹரீம்
இரண்டு(270:2) சிவவாக்கியர் - ஐம்
இரிந்த்தே(353:4) சிவவாக்கியர் - விலகியதே
இருவினை(445:3) சிவவாக்கியர் - நல்வினை தீவினைகள்
இலங்குநூல்(194:1) சிவவாக்கியர் - பூனூல்
இலம் (114:4) சிவவாக்கியர் - இவ்வாறு
இலிங்கமாய் சிவவாக்கியர் - வடிவமாய்
இவர்ந்து(278:1) சிவவாக்கியர் - ஏறி
இளங்குரும்பை நீர்(162:2) சிவவாக்கியர் - இளநீர்
இனமதில்(510:4) சிவவாக்கியர் - நண்பர் இல்லாத
ஈதிர்(228:3) சிவவாக்கியர் - கொடுப்பீர்

ஈனும்(143:1) சிவவாக்கியர் - பெறும்

ஈனெருமை(153:1) சிவவாக்கியர் - எருமை

உக்கிலே(394:3) சிவவாக்கியர் - மெலிவிலே

உகந்து(470:2) சிவவாக்கியர் - விரும்பி

உடக்கினால்(388:2) சிவவாக்கியர் - மர்மத்தால்

உடுபதி(358:3) சிவவாக்கியர் - சந்திரன்

உதாரி(502:2) சிவவாக்கியர் - கொடைப்பன்பு உள்ளவன்

உதிரமான (150:1) சிவவாக்கியர் - இரத்தம்

உய்(57:4) சிவவாக்கியர் - பிழைத்துக்கொள்

உயங்கி(347:1) சிவவாக்கியர் - வருந்தி

உரம்(100:4) சிவவாக்கியர் - வலிமை

உழலும் வாசல்(69.1) சிவவாக்கியர் - கருவாசல்

உற்பனம்(223:3) சிவவாக்கியர் - தோற்றம்

உற்பனம்(238:3) சிவவாக்கியர் - உற்பத்தி

ஊனுமில்லை(230:1) சிவவாக்கியர் - சதை ஊன் இல்லாத உடம்பு

எட்டுதழுமாய்(255:3) சிவவாக்கியர் - எட்டித்தழ் தாமரை, உச்சந் தலையில் இருப்பது. இது சகஸ்ரமம்

எட்டுமாய்(270:2) சிவவாக்கியர் - ஓம் நமோ நாராயணாய

எய்த்துழலும் சிவவாக்கியர் - இளைத்து வருந்தும்

எருதிரண்டு கன்றைஈன்ற(292:2) சிவவாக்கியர் - திருமாலும் சிவனும் சேரந்து ஐயப் பனைய் பெற்றதையே எருதுகள் ஈன்று கன்று

எருது மூன்று(174:4)சிவவாக்கியர் - பிரம்மம் விஷ்ணு உருத்திரன்

எல்லை வாசல் (112:4) சிவவாக்கியர் - உச்சந்தலை நடுவாயில்

எல்லை(90.4) சிவவாக்கியர் - கபால உச்சியாம்

- சிவன், சக்ரதர்ன – சக்கரம் ஏந்தியவணாகிய திருமால்

என்படாத(108:2) சிவவாக்கியர் - கணக்கில்லாத

ஏக்கை(410:3) சிவவாக்கியர் - ஏக்கம்

ஏகன்(468:2) சிவவாக்கியர் - தனிமுதல்வன்

ஏலவட்டம்(199:4) சிவவாக்கியர் - இயலும் அல்லது இயங்கும் வட்டம்

லவார் குழவி(418:4) சிவவாக்கியர் - மணநெய் பூசிய கூந்தலை உடையவள்

ஏழும்(270:2) சிவவாக்கியர் - ரம் என ஏழு முறை கூறலாம்

ஏழுலகம்(283:2) சிவவாக்கியர் - ஏழு அடுக்குடைய பிரபஞ்சம்

ஏழை (12.2) சிவவாக்கியர் - அறிவு குறைந்தவர்

ஏன்ற(253:4) சிவவாக்கியர் - ஏற்ற

ஐந்து ஐந்தும்(269:1) சிவவாக்கியர் - முதல் ஐந்து மகாபூதம் – நிலம் நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் நுண்பூதம் –

சுவை, ஒளி, ஊறு ஓசை, நாற்றம்,
இரண்டாம் ஐந்து கர்மேந்திரியம் - மெய், வாய், கண், மூக்கு, செவி. ஐந்து

மூன்றும்(269:1) சிவவாக்கியர் - இரண்டாம் ஐந்து கர்மேந்திரியம் கை, கால், நீர்வாய், மலவாய், நாக்கு

ஐந்துமைந்துமாய்(270:1) சிவவாக்கியர் - 15 எழுத்துக்கள் – ஸ்ரீ வித்யா மந்திரம்

ஐந்தொதுக்கி(204:1 சிவவாக்கியர்) - ஐம்புலன்களும் ஒதுங்கி

ஐம்பத்தோர் எழுத்து(174:4) சிவவாக்கியர் - கடவுளின் மந்திரங்கள் அடங்கிய (வடமொழி)

ஐம்பொறி (69:2) சிவவாக்கியர் - மெய். வாய், கண் மூக்கு, செவி: ஐம்புலன்கள், ஊறு சுவை, ஒளி நாற்றம் ஓசை

ஒக்க(82.1) சிவவாக்கியர் - ஒன்றாக

ஒக்கிடீர் சிவவாக்கியர் - ஒத்துக் கொள் மாட்டீர்

ஒண்சுடர் (115:2) சிவவாக்கியர் - பரஞ்சுடர்

ஒருத்திலான்(319:2) சிவவாக்கியர் - மன ஒருமை கொண்டிலான்

ஒன்பதன் வாசல்(212:1) சிவவாக்கியர் - ஒன்பது துளைகள் கொண்ட உடம்பு (கண் துளைகள்- 2 காது துளைகள்2 மூக்குத்துளைகள்2 வாய் 1 சிறுநீர்த்துளை 1 மலவாய் – 1

ஒன்றி(401:4) சிவவாக்கியர் - நெருங்கி

ஒன்று(187:1)சிவவாக்கியர் - ஓம்

ஓக்கநீர் (150:1) சிவவாக்கியர் - அதற்கு ஏற்ப நீர்

ஓர் எழுத்துஊ(23.3) சிவவாக்கியர் - சீ

கட்டது(125:3) சிவவாக்கியர் - களையகன்றது

கட்டு அறுத்த(129:3) சிவவாக்கியர் - பந்தங்களையும் அறுத்தும்

கடைதிறந்து (129:3) சிவவாக்கியர் - யோகவாயில் திறக்கும்

கடைதிறந்து (129:3) சிவவாக்கியர் - யோக வாயில் திறக்கும்

கண்டம்(16.3) சிவவாக்கியர் - கழுத்து

கண்டவர்(155:2) சிவவாக்கியர் - கண்டத்தை உடையவர் ( கழுத்து)

கண்டித(312:3) சிவவாக்கியர் –கடியத்தக்க

கதாவு சிவவாக்கியர் - செல்லும்

கதிக்க(168:2) சிவவாக்கியர் - நடக்க

கதித்தெழுந்த(328:2) சிவவாக்கியர் - வெகுண்டெழுத்த

கந்தம் சிவவாக்கியர் - மணம்

கபாடம்(67:3) சிவவாக்கியர் - கதவு

கம்பம்(39:2) சிவவாக்கியர் - நடுக்கம்

கயங்கள்(344:2) சிவவாக்கியர் - யானைகள்

பேசா மெய்ஞானநிலை(152:1) பத்திர - மவுனம்

பேய்(7:2) பத்திர - குளியாமல் உடுத்தாமல் துங்காமல் அலங்கோலமாக இருப்பதைப் பேய் ஆகும்

பொம்மை(41:2) பத்திர - உடல்

பொற்பாதத்தை(156:1) பத்திர - பொன்னார் திருவடியை

பொறி(78:1) பத்திர - ஐம்பொறி

போக(61:2) பத்திர - அனுபவிக்க

மண்வளைந்த(67:1) பத்திர - மண் என்னும் பூதத்தின் உறுப்பாக உள்ள மூலாதாரத்தில் வளைந்து இருக்கும்

மாண்டு (25:2) பத்திர - மரணம்

மாமாமல்(47:1) பத்திர - மடியாமல்

மால் (31:1) பத்திர - திருமால்

மால்(9:2) பத்திர - மயக்கம்

மால்(9:2) பத்திர - மயக்கம்

மாளிகை(20:1) பத்திர - வீடு

மும்மலமும்(107:1) பத்திர - ஆணவம் கன்மம் மாயை

முனைக்கு மேல்(111:2) பத்திர - சுழுமுனைக்கு மேல்

மூன்று வளையமிட்டு முறைத் தொழூந்த கோணம்(69:1) - பத்திர

மூன்று வளையிட்டு(69:1) பத்திர - நெருப்பு என்னும் பூதத்திற்குரிய மூன்று வளையம்

மூன்றுவகைக்காட்சி(108:1) பத்திர - மனம், மொழி, மெய்யால்

யமன்(24:1) பத்திர - இயமன்

யவ்வெழுத்து(114:2) பத்திர - யகரம்

வட்ட வழி(71:1) பத்திர - விசுத்தி என்னும் ஆதாரம் ( இது தொண்டைக்குழியாம்)

வட்டவழி(71:1) பத்திர - ஆஞ்ஞை

வல்வெழுத்து(114:1) பத்திர - வகரம்

வாசி (92:2) பத்திர - பிராணாயமம்( மூச்சுப்பயிற்சி)

வாயுவறு கோணமதில்(70:1) பத்திர - வாயு என்னும் பூதத்திற்குரியது அறுகோண அடையாளம் உள்ள அநாகத ஆதாரம் (அதன் இடம் மார்பு நடு இடத்திற்குரிய இடம்)

வான்பொருள்(216:2) பத்திர - உயர்ந்த பரம் பொருள்

விட்னு(68:1) பத்திர - திருமாலை

வெகுளி(101:1) பத்திர - சினம்

வெம்பி(37:2) பத்திர - துன்புற்று

வெய்யோன்(229:1) பத்திர - சூரியன்

வெள்ளெலும்பாய்(22:1) பத்திர - வெந்த எலும்பாய்

| | |
|---|---|
| வேதா(67:1) பத்திர - | பிரமன் |
| வேதாவை(67:1) பத்திர - | பிரம்மனை |
| வேய் (169:2) பத்திர - | மூங்கில் |
| வேயில்(170:2) பத்திர - மூங்கில் | |

அகத்தியர்

| | |
|---|---|
| அகாரமென்ன பதி(44:2) அகத்தியர் | - அகாரம் என்ற கடவுள் |
| அஞ்சுவீடே(40:3) அகத்தியர் | - ஐந்து பஞ்சபூத வீடுகள் |
| அண்ணாக்கு(13:2) அகத்தியர் - | அண்ணத்தில் உள்ள உள்நாக்கே |
| அண்ணாக்குள்(28:3) அகத்தியர் | - உள்நாக்கில் |
| அணு(44:2) அகத்தியர் | - அனு என்பது( ஆன்மா) |
| அணுவெளி(8:3) அகத்தியர் | - அணுக்கள் பல உள்ள |
| அத்து வித்து துரியாட்டமாடி(43:3)அகத்தியர் - | அத்து வித்துமாக ஒன்றி |
| அமிர்த வெள்ளம்ஊறல்(37:3)அகத்தியர் - | அமிர்த வெள்ளம் |
| - | அமைக்கப்பட்ட வடிவம் |
| அரியெழுத்தை(39:4) அகத்தியர் - | ஓம் நமோ நாராயணாய |
| அருநரகிற்(48:3) - | அகத்தியர்கொடுமையான நரகம் |
| இரப்பன்(31:2) அகத்தியர் | - பிச்சை எடுத்து உண்பவன் இரத்தல் |
| இருநான்கு(27:2) அகத்தியர் | - தலையில் உள்ள எட்டு உச்சியாகும் |
| | - உச்சியில் தியானம் செய்தல் |
| உடலுயிரும் பூரணம்(32:1)அகத்தியர் | - உடல், உயிர்,பூரணம், உணர்வு உள்ளதாக அறிதல் |
| உதயத்தில் எழு(28:1) அகத்தியர் - | உதயகாலத்தில் |
| உமைபாகன்(48:1) அகத்தியர் - | உமைபாகம் |
| உயிரெழுத்தைவுயர வாங்கி(11:1) அகத்தியர் - | உயிர் எழுத்து |
| உலகமூடர்(25:1) அகத்தியர் - | உலகில் நடப்பதை உள்ளேதான் உறுத்தல் தோன்றும் |
| ஊவெழுத்து(45:2) அகத்தியர் | - உ எனும் எழுத்தின் ஊற்றெடுத்தல் |
| எட்டும்(28:4) அகத்தியர் | - எட்டு ( தலை உச்சி) |
| எந்திரமாம்(14:4) அகத்தியர் | - இயந்திரத்தில் எழுத்துக்கள் எழுப்பி வாசியை ஏற்றல் எழுப்புதல் என்பது புருவமாகிய அகண்ட வீதியாம் என்பவர் அட்டமாசித்தி பெற்றவராதலால் தெய்வமென்றார் என்ற அரியின் எழுத்தை ஊன்றிப் பார்த்தல் |
| ஏய்ச்சலது(6:2) அகத்தியர் | - ஏய்கின்ற ஒப்பனை செய்து |
| ஓங்கார வட்டம்(43:1) அகத்தியர் | - ஓங்காரம் செல்லும் |
| கண்ணினிலே கடுப்பு(43:1) அகத்தியர் | - கண்களில் கடு கடுப்பு |
| கணுவென்ன(44:3) அகத்தியர் | - இடைப்பகுதி( கணு) |
| கத்தியதோர்(9:4) அகத்தியர் | - கத்திய தர்க்கம் செய்யாதே |
| கதிர்தான் முற்றே(9:4) அகத்தியர் - - ` | கதிர்போல் மனம் |
| கயிலாயம்(44:3) அகத்தியர் | - பரத்தின் வீடே கயிலாயம்(தலைஉச்சி) |
| கர்மியென்று(9:4) அகத்தியர் | - கருமியாக ( பணப்பற்றாளனாக) |
| கருப்பிடித்து(5:2) அகத்தியர் | - கருவில் தோன்றி |
| கருவறியா (15:3) அகத்தியர் | - கருவின் நிலை அறியாத கலைகள் ஆறு என்பர் |

கலையான பதினாறு(21:2) அகத்தியர் - பதினாறு கலைகள் – சந்திரனுக்குரியவை- பிரதமை முதல் பவுர்ணமி முதல் 15 திதிகள் சூன்யமான அமாவாசை சேர பதினாறு ஆகும். மேலும் அகரம், மகரம், உகரம், விந்து, அர்த்சந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியர்பினி, வியோமரூபமணி, அனந்தை, அனாதை, அனாசிசருதை, சமனை,- உன்மனை என்பது

கள்ளரப்பா(4:3) அகத்தியர் - கள்ளத்தனமானவரே

கற்செம்மை(25:3) அகத்தியர் - கல்லாலும் செம்பாலும்

கற்பமென்ன(36:1) அகத்தியர் - காயகல் மருந்து

கனலெழுப்பி(43:1) அகத்தியர் - குண்டலினிக் கனலை

காமிகள்(15:4) அகத்தியர் - காமம் உடையோர்கள்

காய்ச்சலுடன்கோபம்(2:2) அகத்தியர் - மிகுந்த கோபம்

காயசித்தி(42:1) அகத்தியர் - உடல் நீடுவாழ்தல்

கீழ்மூலம்(41:1) அகத்தியர் - முதுகின் கீழ்ப்பக்கம்

குணவிய(8:4) அகத்தியர் - குணம் மிக்கவர்

குருபாதம்(26:3) அகத்தியர் - உச்சியில் உள்ள எட்டு

கூடழிந்த(6:2) அகத்தியர் - உடல் அழிந்த கூறிய உபதேசம் சிங்காரம் தோன்றுதல் கொண்டு அவற்றில் முளைத்து - எழுத்து விளங்கி நிற்கும் ஓம் எனும் எழுத்து

சகலசித்தும்(14:4) அகத்தியர் - சகலவிதமான சித்துக்கள்

சண்டாளம்(9:1) அகத்தியர் - சண்டாளத்தனம் செய்தல்

சத்தியே (1:1) அகத்தியர் - சத்தியம்

சதியுடனே வெகுதர்க்கம்(18:3)அகத்தியர் - அறிவார்ந்த தர்க்கம் பல பேசி சதி செய்வர்

சந்திரனிற்பார்(38:1) அகத்தியர் - சந்திர மண்டலத்தில் உணர்ந்து பார்

சாகாதகால்(36:1) அகத்தியர் - சாகாத காலம் திரண்டு

சாத்திரங்களாறு(17:3) அகத்தியர் - ஆறுவிதமான சாத்திரம்

சாலமுடன் (14:2) அகத்தியர் - முறையாக

சிகாரவரை(37:3) அகத்தியர் - சிகாரம் என்பது மார்பு

சிங்காரம்(37:2) அகத்தியர் - நந்தியெம் பெருமான்

சீருண்டேவூணிப்பாரே(40:1)அகத்தியர் - சீருடமே ஊன்றியறிதல்

சீரெழுத்து(46:3) அகத்தியர் - சீரெழுத்து மூலமந்திரத்தை

சுருதிசொன்ன(36:4) அகத்தியர் - வேதம் சொன்ன - சுழுமுனையாம்

சூட்சஞ்சூட்சம்(1:4) அகத்தியர் - சூக்குமமான நிலை

சூத்திரமீரெட்டு(36:1) அகத்தியர் - சூத்திரத்தில் பதினாறு

சூரியன்றன் நெருப்பு(44:4) அகத்தியர் - சூரிய நாழியல்

செகமுழுவதும்(30:4) அகத்தியர் - உலகம் முழுவதும்

செவியோடு பரிசமெட்டும்(33:3)அகத்தியர் - காதுத் துளை வழியே - சென்று நடுவே போய் ஒளியைக் காண்பதும் உச்சியில் எட்டிதழ்தாமரையை உணர்வால் பரிசிப்பது.

சோதியப்பா(19:1) அகத்தியர் - ஒரு விதமான சோதியால்
ஞானமாமே(29:2) அகத்தியர் - ஞானமாகாது
தயான பூரணத்தை(23:1) அகத்தியர் - தாயாகிய ( வாலையை) அறிந்து
தாழ்வான குடிதோறும்(31:2)அகத்தியர் - தாழ்ந்த குடிசைகள் தோறும்
திண்டாடுமனம்(29:4) அகத்தியர் - பலவகையில் திண்டாடும்
திருநடனம்(45:4) அகத்தியர் - இறைவன் நடனம்
துரியமென்ற(37:1) அகத்தியர் - துரியம் என்னும் நிலை வாலை
தெய்வத்தின் வீடேயாகும்
தூணென்ற பிடரியிலே(44:4) அகத்தியர் - தூண் போன் ஆரியன்
நடுமூலம்(41:2) அகத்தியர் - நடுவில் உள்ள சுழுமுனை நடுவாகும்
நரகாதி(7:1) அகத்தியர் - நரகம்
நழுவாதே(30:3) அகத்தியர் - கைவிடாதே
நாட்டாமல்(29:2) அகத்தியர் - நாட்டமில்லாதவர்
நாடப்பா(37:2) அகத்தியர் - நாடுபவர் – நாடிப் பூசை செய்
நாதர் மகேச்சுரியே(37:1) அகத்தியர் - மகேஸ்வரன் மகேஸ்வரி
நான்கும்(28:4) அகத்தியர் - நான்கு ( மூலாதாரம்) நிற்கும் காற்று
பசப்புவார் (4:4) அகத்தியர் - பசப்பி, பசப்புதல்
- படைவீரர் அணி
பண்ணான(12:3) அகத்தியர் - பண்பட்ட
பத்தாகச் சைவ(18:4) அகத்தியர் - பத்துவிதமான சைவம்
- ஆதி, அநாதி, மகர, பேத, அபேத, அந்தர, குண, நிர்க்குண, அத்துவா, யோக சைவம் என்பனவாம்
பதறாமல்(28:1) அகத்தியர் - பரபரப்பு இல்லாமல்
பதி(33:1) அகத்தியர் - பதி என்று சொன்னது சுழுமுனை நாடியாகிய குருவை சொன்னது
பதி(34:4) அகத்தியர் - கடவுள்
பதினாறு(28:4) அகத்தியர் - பதினாறு( விசுத்தி)
பதினெண்பேர்(22:1) அகத்தியர் - பதினெட்டுச் சித்தர்கள்
பரம்பொருளோடும்(43:2) அகத்தியர் - பம்பரம் போல் இடைகலையில் ஓம் அசைவு ஆடும்
பராபரையும்(27:4) அகத்தியர் - பராசக்தியும் சிவமும்
பரிதி மதியிரண்டு(28:2) அகத்தியர் - இடா, பிங்களா நாடிகள்
பரிபாடையறியார்(25:2) அகத்தியர் - வேற்றுமொழியை அறிய மாட்டார்கள்
பழித்த பேர்கள்(48:3) அகத்தியர் - பழித்தவர்கள்
பற்றாசை(3:1) அகத்தியர் - பற்று, ஆசை வைப்பது
பாழ்த்த பிணம்(15:1) அகத்தியர் - உடலைவிட்டுச் சீவன்
- பாழ் வழியில் போகாது
பாழாகப்பாவிகள்(31:3) அகத்தியர் - பாழாகப் போகச் செய்யும் பாவிகள்
பாழிலே(1:3) அகத்தியர் - பாழானவற்றில்
பாளையந்தான்(6:4) அகத்தியர் - கூச்சலிட்டுப்பலரும்
- பாளையம் எனப்படும்,
பிணையோ கோடி(3:1) அகத்தியர் - - பிணைப்பதும் கோடி
பிதற்றுவார்(6:3) அகத்தியர் - பிதற்றுபவர்
- பிரிந்தால் பிணம் என்பர்
பிறவிகோடி(8:1) அகத்தியர் - பல பிறவிகளில் உலகில் பிறப்பது

புண்ணியோர்கள்(1:2) அகத்தியர் - புண்ணியர்கள்

புலத்தியன்னே(13:3) அகத்தியர் - புலத்தியன்

பூர்ணஞ்சுழுமுனை(38:1) அகத்தியர் - பூரணம் என்பது

பூரணமே(29:1) அகத்தியர் - பூரணமான கடவுள்

பொல்லாத தேகம்(43:2) அகத்தியர் - ஒழுங்கில்லாத உடல்

மண்ணூழி(11:4) அகத்தியர் - மண்ணில் ஊழிக்காலம்

மறலிகையில்(11:4) அகத்தியர் - யமன் கையில்

- மனம் உடையவர்

மனை(44:2) அகத்தியர் - சிவன் தான் உடம்பின்

மாய்கை(6:3) அகத்தியர் - மாயை

மாலயனும் (45:4) அகத்தியர் - திருமால், பிரம்மன்

மூலமதையறிந்த (14:1) அகத்தியர் - (மூலாதாரம்) மூலத்தை அறிவது

மூவெழுத்து(45:1) அகத்தியர் - ஹரீம், ஓம், என்னும் மூலாதாரம்

மேல் மூலம்(41:1) அகத்தியர் - தலைஉச்சி

யோகசித்தி(42:2) அகத்தியர் - யோக சித்தி உண்டாகுதல்

ரூபம் (25:3) அகத்தியர் - வடிவம்

- வட்டங்கள்

வாச்சென்ற(7:2) அகத்தியர் - வாய்பாக

வாலைவீடு(37:1) அகத்தியர் - வாலைத் தெய்வத்தின்

விஞ்ஞானம்(26:2) அகத்தியர் - ஆத்மாவை அறியும்

விண்டு(12:3) அகத்தியர் - விஷ்னு

விண்ணான அண்ணாக்கு(33:2)அகத்தியர் - விண் பகுதியான

- விந்துவின் நிலையை உணர்தல்

வீரப்பா(3:2) அகத்தியர் - வீராப்பு

- வெளியில்

வேடம்பூண்டு(31:1) அகத்தியர் - துறவிவேடம் முதலிய

வேரெழுத்து(46:2) அகத்தியர் - வேராகவும் வித்த

10, கோசம் – 5, வாயில் - 10,அவத்தை

- 5, மலம் – 3, 9, ஆக மொத்தம் 96 கருவூரார்

அபயம்(27:4) கருவூரார் - ஆதரவு

அரவு விடம் (12:3) கருவூரார் - பாம்பின் நஞ்சு அருளல் என்னும் ஐந்து அல்லது 36 தத்துவம் 60 அவன் கடவுளே ஆவான அழித்தல், மறைத்தல்,

அறிந்தாலும்(2:3) கருவூரார் - அறிந்தபின்

அறிந்து குறியடையாளம்(20:1) கருவூரார் - அறிந்து கொண்டவர்கள்

அனேகசாலம் கற்று(18:2) கருவூரார் - பல மாயம் கற்ற படி

ஆசுகவி(25:4) கருவூரார் - சொன்னதும் பாடும்

ஆதவனுமம்புலியும்(6:2) கருவூரார் - சூரிய சந்திர நாடிகள்

ஆதியந்தம் (1:1) கருவூரார் - தொடக்கமும் முடிவும்

- ஆற்றல்

ஆறுதெரு(1:3) கருவூரார் - ஆறு ஆதாரங்கள்

இட்டகுறி (23:1) கருவூரார் - யோகம் குறிகளாகிய

இயலறியா(23:1) கருவூரார் - இயலாமல்

ஈடழிந்தேன்(29:1) கருவூரார் - எதுவும் இல்லாது அழிதல்

உள்வீட்டுக்குள்ளிருந்து(3:2) கருவூரார் - உடம்பிற்குள் உள்ள வழியின் மூலம்

- உள்ள காற்று வந்து

உற்பனம்(30:4) கருவூரார் - உண்டாவது

ஐவரை(7:3) கருவூரார் - ஐந்து வகைக் கடவுள் –

ஓர்நிலையில் நிறுத்தி(7:3) கருவூரார் - ஒரு நிலையில் கலங்காது தீவிரமாய்ச்

- கன்னிப் பெண்ணைத் காக்கும் வாசல் காட்டி மயக்குபவர்கள்

காணரிது(2:2) கருவூரார் - காணமுடியாதது

காமிவெகு (2:2) கருவூரார் - காம வடிவம்

காய்ச்சுதடா(8:4) கருவூரார் - மரம் காய்ந்து

காலுமுன்னி (19:3) கருவூரார் - காற்றை உள்வாங்கி

குடிகோடி சத்துரு(28:2) கருவூரார் - குடிகேடி பகைவர் போல் கூச்சலிட்டாள்

- குணம் – 3, மண்டலம் – 3,

குறுமதி(26:4) கருவூரார் - குறுகிய மதியாம்

கூச்சம்மற்றுப்பார்க்கையில்(14:1) கருவூரார் - கூசாமல் பார்க்கும் போது

கூடுகிற முக்கோணம்(26:4) கருவூரார் - முக்கோணங்கள் பலவும் பல

கெணத்திலே(0:1) கருவூரார் - ஒரு கணத்தில்

கோடியிடிமின்(9:1) கருவூரார் - கோடி மின்னல் ஒரு சேர

சகலமுமே(16:3) கருவூரார் - எல்லாமும்

சத்திசிறு பிள்ளை(11:3) கருவூரார் - சத்தியானவள் சிறு பிள்ளை

சந்திரனை(21:2) கருவூரார் - சந்திர ( இடா) நாடி

சமர்த்தறிந்தாலவன் சாமி(19:2)கருவூரார் - திறத்தை அறிந்தால்

சாமி சிவகாமி ரூபி(2:2) கருவூரார் - சாமியாகிய சிவத்துடன் உள்ள சிவகாமி

- எனும் வடிவம்

செகசாலவித்தை(5:2) கருவூரார் - மாயமாக்கும் நிலை

செத்தசவம்(27:2) கருவூரார் - செத்தபிணம்

செந்தீயில்(21:2) கருவூரார் - குண்டலினித் தீயுடன்

செபிக்க(27:2) கருவூரார் - உணர்வு இன்றி மனம்

- செபித்தல்

சோமநதியமுதமுண்ண(11:4)கருவூரார் - சோம பானமாகிய யோக

தக்காமற்போன(19:2) கருவூரார் - மனதில் தைக்காமல்

- தத்துவங்கள்- ஆன்மா

- தத்துவம் ஆகும். தத்துவம்,- 24, நாடிகள் –

- தலையான வாசல் தாத்விகம் சேர்ந்ததும் 96

- தாமரையுள்ள மூலாதாரம் திறக்காமல்

- அடைத்து திறக்கும்) திறமை

தூங்கினேன்(29:2) கருவூரார் - தியானம் செய்தேன்

- தெய்வங்கள் தெய்வமாகப் பாவித்து,

தெளிவு தரு மருளும்(0:1) கருவூரார் - பிறர்க்கு தெளிவு

தேளுருவாய்(24:3) கருவூரார் - தேள் போன்ற உருவம்

தேனென்ற மொழிச்சியிவள்(4:3) கருவூரார் - தோனாகப் பேசி உபதேசிப்பவள்

தொண்ணூற்றாறு(6:4) கருவூரார் - தொண்ணூற்றாறு தொழில்கள் செய்வும்

நடுவீடு பீடம்(1:2) கருவூரார் - நடு நாடிக்கு பீடமாய்

நடுவுமாகி(4:4) கருவூரார் - உடல் நடுவே

நாணமில்லா(5:1) கருவூரார் - நாணம் இல்லாமை நாதம், விந்து

நாலுபேர்கள்(6:3) கருவூரார் - நான்கு மார்க்கம்

நிர்மூடரனே(18:2) கருவூரார் - பல மூடர்கள்

நிலைத்த வீடு(25:1) கருவூரார் - என்றும் மாறாது நிலையாய் இருக்கும்

- நிற்கும் போது நிற்கும் வாயில் நிற்பது

நிறைந்தமதி(20:4) கருவூரார் - நிறைந்த அறிவு

நீச்சு(18:2) கருவூரார் - முடிவு

பஞ்சவண்ணமாகி(5:3) கருவூரார் - ஐந்து நிறங்களாகி படியான வாயில்

- படைத்தல்- காத்தல்,

பன்னிருவர் காக்கும் வாசல்(26:2)கருவூரார் - பன்னிரண்டு விரல் தூரம்

பாசையது(17:2) கருவூரார் - வேறு மொழிகள்

பாதிமதிசூடியே(1:4) கருவூரார் - பாதி நிலைவைச் சூடிய சிவன்

- பிணி – 3, விகாரம் – 8,

பின்னு முன்னும் பாராமல்(18:1)கருவூரார் - முன்பின் சிந்திக்காமல்

புத்திகெட்ட லோபிகள்(15:4)கருவூரார் - புல்லர்களும், புத்தியற்றவர்களும்

புரட்டுருட்டாய்(17:4) கருவூரார் - புரட்டுகள் பலவற்றை பூசையில் அமர்த்தி

பூரணத்தின் மகிமை(6:1) கருவூரார் - பூரணமாகிய கடவுள்

பெண்ணரசு(3:1) கருவூரார் - - பெண்ணரசியாகத் தோன்றும்

பெண்ணரவம்(12:2) கருவூரார் - பெண்ணாசைப் பாம்பு

பெருகுமதி (26:4) கருவூரார் - பெரிய மதி பேசுதல்

பொறியைந்து(7:4) கருவூரார் - ஐந்து பொறிகள் போனவர்கள் மகிமை

மவுனத்தூன்று(9:4) கருவூரார் - மவுனத்தில் ஊன்றி

மவுனமுதற் கருவு(30:3) கருவூரார் - மவுனமே எல்லாம் என்னும் கருவையும்

- சொல்லுதல்

மனமாய்கை(8:1) கருவூரார் - மனம் மாய்ந்து போதல்

மனமாய்தல்லாம்(23:3) கருவூரார் - மனம் அழிவதன்றி மிளர்வது

மூவரும்(26:2) கருவூரார் - மும் மூர்த்திகள் மூன்று மண்டலமும்

- மேல் உலகிற்குப் போகும்

மேல் வாசல்(26:1) கருவூரார் - உச்சந்தலையில் உள்ளது

வகாரம்(22:2) கருவூரார் - அறியாத மூடர்கள்

வணங்கும் வாசல்(26:2) கருவூரார் - மும்மூர்த்திகள் வணங்கும் வழிபடும் மதம்)

வாசல் நாடு(6:3) கருவூரார் - நான்கு இதழ்த்

வாதம்(22:1) கருவூரார் - வாத நோய்

வாமத்தை(17:3) கருவூரார் - வாமாச்சார சமயம் ( ஒரு

- வாமாச்சாரம் பேசுவர்

வாய்ச்சமர்ததாய்(18:1) கருவூரார் - வாய்பேச்சுப் பேசும் வாயில்

வாலைப்பெண்ணாதி(0:1) கருவூரார் - வாலைப்பெண்ணாகிய இந்த ஆதி

- வாலையாக

வாலையிவள் ரூபம்(4:1) கருவூரார் - வாலைப்பெண் வடிவம்

விடக்கெடுத்து(27:2) கருவூரார் - விடக்கு – தசை விளங்காமையாக இருப்பது

வீடுமது தலைவாசல்(26:1) கருவூரார் - மூலாதாரமாகிய வீடுதான்

வீதி(1:3) கருவூரார் - யோக வீதி

வெளியான சுழிக்கதவு(26:1) கருவூரார் - வெளியில் கலக்கும்

வேணதெல்லாம் (15:3) கருவூரார் - வேண்டுமளவு வேறில்லை

**<u>வால்மீகி சித்தர்</u>**

அணிந்து (5.2) வால்மீகி - புனைந்து

அலைவார் கோடி (6.4) வால்மீகி - திரிவர் பலர்

அவமாகி போகாமல் (11.3) வால்மீகி - தவம் கெட்டு அவமாகாதிருக்க

அவனவன் (3.4) வால்மீகி - சிவன்

அழிவில்லா (9.1) வால்மீகி - பிரியாது

அனேக வேடம் (5.2) வால்மீகி - பலவேடம்

அனேகம் (8.4) வால்மீகி - பற்பல

ஆச்சரியம் (10.2) வால்மீகி - வியப்பு

ஆத்துமத்து (15.3) வால்மீகி - ஆத்மா

இருமூன்றாக (8.2) வால்மீகி - ஆறு அங்கம்

இருவாசம் (13.1) வால்மீகி - இரு மூக்கினாலும் மூச்சை இழுத்து

உலகுக்காக (11.3) வால்மீகி - உலகினர்க்காக

ஊமையை (4.3) வால்மீகி - வாய் பேசாதவர்

ஊனென்ற (6.2) வால்மீகி - உடம்பு

எடுத்தால் (9.2) வால்மீகி - பெற்றால்

ஏற்கையுடன் (15.2) வால்மீகி - ஏற்குமளவு

ஓது (12.2) வால்மீகி - ஓதுக, சொல்லுதல்

ஓம் (4.2) வால்மீகி - மந்திரம்

கசடர் (5.4) வால்மீகி - குற்றமுள்ளவர்

கண்டோர் (10.4) வால்மீகி - இருப்பதை

கதறுவாரே (6.4) வால்மீகி - கதறுபவர்கள்
காசாயம் (6.1) வால்மீகி - காவியுடை
காப்பே (14.4) வால்மீகி - காப்பதாக
கும்பகமே (3.1) வால்மீகி - மூச்சை அடக்குவது
குய்யம் (12.1) வால்மீகி - மூலாதாரம்
குவலயத்தில் (16.4) வால்மீகி - உலகில்
குறியை (16.4) வால்மீகி - குறிப்பை
கேளு (15.1) வால்மீகி - கேள்
கொஞ்சம் (7.1) (7.1) வால்மீகி - மிகச் சிலர்
கோடா கோடி (7.1) வால்மீகி - மிகப் பலர்
கோள் சொன்னார் (11.2) வால்மீகி - குறை கூறியது
கோனவானா (16.4) வால்மீகி - தலைவனாக
சக்தி (13.3) வால்மீகி - பாராசக்தி
சடை (6.1) வால்மீகி - சிவனின் தலை முடி
சந்தேகம் (14.2) வால்மீகி - ஐயம்
சரிதை (4.1) வால்மீகி - சரித்திரம்
சரியை (3.1) வால்மீகி
சாத்திரங்கள் (8.2) வால்மீகி
சாம்பல் (6.2) வால்மீகி - திருநீறு
சித்தன் (2.2) (2.2) (3.4) (13.2) வால்மீகி - சிவனின் அருள் பெற்றவன்
சிதறிடாமல் (7.4) வால்மீகி - சிதறிஓடாமல்
சிதறுகின்ற (7.4) வால்மீகி - சிதறியது
சிரசு (16.3) வால்மீகி - தலை
சிவசக்தி (7.4) வால்மீகி - சிவனும் பாராசக்தியும் இருவரும் ஒருவராக இருப்பது
சிற்சில்லோர்கள் (6.1) (5.1) வால்மீகி - சிலர்சிறந்தவர்
சினந்தான்(11.2) வால்மீகி - கோபம் கொண்டவன்
சீடர் (5.3) வால்மீகி - - மாணவர்
சுருக்கம் (7.2) வால்மீகி - மிகவும் குறைவு
செகம் (2.2) வால்மீகி - படைப்பு
தந்திமுகன் (2.4) வால்மீகி - யானை முகமான விநாயகர்
தன் பெருமை (9.1) வால்மீகி - தற்பெருமை
தாயாரை (12.2) வால்மீகி - பாராசக்தியை
தானவனா (161) வால்மீகி - செல்வனாக
திரிகுவார்கள் (4.3) (5.2) வால்மீகி - திரிவார்கள்
திருக்கூத்தின் (14.4) வால்மீகி - தாண்டவம்
திருமூர்த்தி (5.4) வால்மீகி - கடவுள்

திறந்து சொன்னேன் (11.3) வால்மீகி - வெளிப்படையாக

திறவு கோல் (11.1) வால்மீகி - திறந்து காட்டும் சாவி

தின்று (4.3) வால்மீகி - உணவு உண்டு

தீர்க்கமுடன்(15.4) வால்மீகி - உறுதியாக

தூல தேகம் (2.3) வால்மீகி - புற உடம்பு

தெவிட்டா (16.3) வால்மீகி - தளர்வில்லாத

தேகத்தில் (5.2) வால்மீகி - உடலில்

தொடுத்தார்கள் (8.4) வால்மீகி - தொகுத்து

நடக்கை (14.4) வால்மீகி - நடக்க

நந்தி (2.3) வால்மீகி - நந்தி வாகனம்

நவக்கிரகம் (11.4) வால்மீகி - ஒன்பது கிரகம்

நவமான (11.4) வால்மீகி - ஒன்பது

நாக்கு(11.4) (12.1) வால்மீகி - ஐந்து பொறிகளில் ஒன்று

நாசி (10.4) வால்மீகி - மூக்கின்

நாதன் (11.2) வால்மீகி - இறைவன், சிவன்

நான்முகனே (2.3) வால்மீகி - பிரமன்

நித்யகர்மம் (15.3) வால்மீகி - நாள்தோறும் செய்யும் செய்கைகள் தவராமல்

நில் (8.1) வால்மீகி - நிற்கட்டும்

நில்லே (7.4) வால்மீகி - நிற்பீராக

நின்று (7.2) வால்மீகி - இருப்பது

நீடு (8.1) வால்மீகி - தீயவை

பஞ்சரசம் (15.1) வால்மீகி - பஞ்சகவ்யம்

பதறுகின்ற (7.2) வால்மீகி - பதறும் பலரும்

பதினாறாகும் (11.1) வால்மீகி - வால்மீகன் சித்தர் பாடலின் எண்ணிக்கை

பதினெட்டாக (8.2) வால்மீகி - பதினெட்டுச்சித்தர்களின் எண்ணிக்கை

பரமான்னங்கள் (15.1) வால்மீகி - பரமனுக்குரிய உணவுகள்

பாடை (8.1) (9.2) (9.4) (10.1) (10.1) வால்மீகி - மொழிகளை

பாடைதனை (10.1) வால்மீகி - ஒருமித்த மொழியை

பாடையாலே (8.3) வால்மீகி - மொழிகளால்

பாராய் (15.2) வால்மீகி - பார்ப்பாயாக

பிசகாமல் (3.2) வால்மீகி - எதிலும் பிசகு இல்லாது

பிழைக்கத்தானே (8.4) வால்மீகி - பிழைப்பு நடத்தினர்

புக்கு (12.4) வால்மீகி - உடன்

பூசி (6.2) வால்மீகி - அணிந்து

பூசித்து (12.2) வால்மீகி - வணங்கி

பூரகமே (3.1) வால்மீகி - மூச்சிழுத்தல்

| | | |
|---|---|---|
| பூலோக (13.2) வால்மீகி | - | பூமி |
| போகா (14.1) வால்மீகி | - | முடியாது |
| மதி (1.3) (2.4) வால்மீகி | - | சந்திரன் |
| மதிபோல் (16.2) வால்மீகி | - | நிலவுபோல் ஒளி |
| மருட்டி (10.3) வால்மீகி | - | மருள |
| மவுனம் (12.3) வால்மீகி | - | தவம் |
| மூலி (16.3) வால்மீகி | - | மூலிகை |
| வாக்கு (12.3) வால்மீகி | - | வாக்கும் |
| வாசி (16.1) (10.3) (12.3) (14.1) (15.4) வால்மீகி | - | மூச்சுப்பயிற்சி |
| வாசியாகும் (2.1) (2.1) வால்மீகி | - | மூச்சாகும் |
| வால்மீகன் (11.1) வால்மீகி | - | சித்த |

# களஆய்வு புகைப்படங்கள்

1. பட்டினத்தார் கோயில்
2. பதினெண் சித்தர் கோயில்
3. சதுரகிரி  மலை




பட்டினத்தார் கோயிலின் முகப்புத் தோற்றம்




**பட்டினத்தார் கோயிலின் பழைய தோற்றம் (புதுப்பிப்பதற்கு முன்பு)**



**பட்டினத்தார் கோயிலின் தற்போதைய தோற்றம்**




**கோயிலில் பதிக்கப்பட்டுள்ள பட்டினத்தார் பாடலின் வரி**




**கோயிலில் காணப்படும் பட்டினத்தார் முழுத்தோற்றம்**




**பட்டினத்தார் கோயிலின் மாலைநேர தோற்றம்**




**பட்டினத்தார் அருளிய பே கரும்பு (கோயிலின் உள்ளபகுதியில் அமைந்துள்ளது)**




**பதினெண் சித்தர் கோயில் நுழைவாயில்**




**கருவூரார் குடில்**




**பட்டினத்தார் குடில்**




**போகர் குடில்**



**போகர் உள்புறத்தோற்றம்**




**சிவவாக்கியர் குடில்**



**சிவவாக்கியர் உள்புறத்தோற்றம்**




**கருவூரார் குடில்**



கருவூரார் உள்புறத்தோற்றம்




சதுரகிரி மலைப்பாதையின் நுழைவாயில் (தாணிப்பாறை)



மலைப்பயணத்தை இங்கிருந்து தான் தொடங்கவேண்டும்( விநாயகர் சந்நிதி)



மலையில் கிடைக்கூடிய வாசனைப் பொருட்கள் விற்பனை செய்யும் இடம்

(மலையடிவாரம்)



**கரடுமுரடான மலைப்பாதை**



**கோரக்கர் குகைக்குச் செல்லும் வழி (மலைபாதையில் இருந்து எடுக்கப்பட்ட காட்சி)**



**மலையில் காணப்படும் அடர்ந்த காட்டுப்பகுதி**



**மலைப்பாதையில் அமைந்துள்ள  இரட்டை மகாலிங்கம்**



சதுரகிரி மலையில் காணப்படும் நாவல் ஊற்று







மலையேறும் பக்தர்களுக்காக அமைக்கப்பட்டுள்ள

சோதனைச் சாவடி




மலைமீது அமைந்துள்ள சந்தனமகாலிங்கர் கோயிலின் தோற்றம்



சுந்தரமகாலிங்கர் கோயிலின் எதிர்புறத்தில் அமைந்துள்ள காணிக்கைமரம்



மலைப்பாதையில் பக்தர்கள் செல்லும் போது குரங்குகளின் அட்டகாசம்



ஆய்வாளர் மலைப்பயணத்தின் போது எடுக்கப்பட்ட காட்சி



சந்தனமகாலிங்கர் கோயிலின் மேல் பகுதியில்

அமைந்துள்ள பெரியமகாலிங்கர்

# பட்டினத்தார் கோயில்

## பட்டினத்தார் கோயிலின் தோற்றம்

பட்டினத்தார் கோயில்சென்னையை அடுத்துள்ள திருவொற்றியூரில் வடிவுடையம்மன் கோயிலிலிருந்து கிழக்கில் சுமார் 2கிமீ தொலைவில் கடற்கரையோரத்தில் கோயில் அமைந்துள்ளது. அழகான முகப்பு வாயிலுடன் கோயில் காட்சியளிக்கிறது. கோயிலின் நுழைவாயிலில் கடற்கரையின் மணல் கோயில் முழுவதும் பரவியுள்ளது.

## நந்த வனம்

கோயிலின் இடப்பக்கம் விற்பனைக்கூடமும், வலப்பக்கம் நந்தவனமும் அமைந்துள்ளது. நந்தவனத்தில் பல விதமான மரங்கள் வேப்பமரம், மாமரம், அரிய வகையானசீமைபுளியமரம் மற்றும் பலவிதமான வண்ணமலர்களும் மூலிகை தாவரங்களும் நந்தவனத்தில் அமைந்துள்ளன. சிறந்த முறையில் வளர்க்கப்பட்டு, பாதுகாத்து வருவதைக் காணமுடிகின்றது.

## மூலப்பிரகாரம்

நந்த வனத்தை அடுத்து கிழக்கு நோக்கி நடந்தால் வலது பக்கத்தில் பட்டினத்தாரின் மூலப்பிரகாரம் அமைந்துள்ளது. கோயிலின் உள்ளே நுழைந்தவுடன் மூலப்பிரகாரத்திற்கு எதிரே நந்தி பகவான் காட்சியளிக்கிறார். மூலப்பிரகாரத்தில் இலிங்கம் அமைந்துள்ளது. அதில் பட்டினத்தார் கோயிலின் கோபுரத்தில் பட்டினத்தாரின் வரலாற்றுக் குறிப்புகளை அறியும் விதமாக சிற்பங்களாக அமைத்துள்ளனர். மற்ற கோயில்களில் உள்ளது போன்ற சிற்பங்கள் அங்கு கிடையாது பட்டினத்தார் மற்றும் வரலாற்றோடு தொடர்புடைய சிற்பங்கள் மட்டுமே செதுக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

## ‘பே’ கரும்பு

மூலப்பிரகாரத்தில் ஆலயத்திற்குப் பின்புறத்தில் ‘பே’ கரும்பு அமைந்துள்ளது. ‘பே’ கரும்பு என்பது கசப்புத் தன்மை கொண்டது. அதை உடைத்து எடுக்கமுடியாது, எடுத்துக்கொண்டும் வரக்கூடாது, வேலியைக் கொண்டு பாதுகாக்கப்படுகிறது. வரலாற்றில் பட்டினத்தார் கையில் உள்ள கரும்பும் கோயிலில் அமைக்கப்பட்டுள்ள பே’ கரும்பும் ஒன்றாகும். மேலும் தனிப்பட்ட முறையில் அங்கு உள்ளவர்களிடம் கேள்விகள் கேட்டால் அவர்கள் சொல்வது கிடையாது.

# பதினெண் சித்தர் கோயில்

## அமைவிடமும் தோற்றமும்

தமிழகத்தில் பதினெண் சித்தர்களுக்கென்று ஒன்றாக அமைந்த கோயில்கள் எங்கும் கிடையாது. ஆனால் சென்னையை அடுத்துள்ள தாம்பரத்திற்கு அருகே மாடம்பாக்கத்தில் அமைந்துள்ளது. இக்கோயில் சென்னை தாம்பரம் சானடோரியத்திலிருந்து இடது பக்கமாக திரும்பி நேராக சுமார் 7 கி.மீ. தொலைவில் உள்ள அஸ்தினாபுரம் பகுதியை அடுத்து மாடம்பாக்கம் என்னும் கிராமத்தில் அமைந்துள்ளது. ஆரம்பக்காலகட்டத்தில் இக்கோயிலில் சித்தர்களுக்கென தனித்தனிக் குடிசைகள் அமைக்கப்பட்டிருந்தன. பின்பு பாறைகளான தனித்தனிக் குடில்களாக அமைக்கப்பட்டன. 29.06.2009 அன்று இக்கோயிலுக்குக் குடமுழுக்கு செய்யப்பட்டது.

மேலும் இக்கோயிலுக்கு உள்ளே செல்லும்முன் வாயிலின் அருகே சதுரமாக பாத்தி போல் அமைக்கப்பட்டு அதில் தண்ணீர் ஊற்றி வைத்துள்ளார்கள். பக்தர்கள் உள்ளே போகும் முன் அந்த, தண்ணீரில் பாதங்களை நனைத்துக் கொண்டுதான் செல்லவேண்டும்.

## உட்புறத்தோற்றம்

கோயிலின் வாயில் பகுதியை அடுத்து உள்ளே செல்லும்முன் இடப்பக்கத்தில் இராமஆஞ்சநேயர் சந்நிதி உள்ளது. அவரைத் தொடர்ந்து சென்றால் கோசாலை அமைக்கப்பட்டிருந்தது. நேர் எதிரில் செல்லும்போது நந்திசிலையைக் கடந்துசென்றால் மூலப்பிரகாரம் அமைந்துள்ளது. மூலப்பிரகார சந்நிதியில் சிவன் சக்தி சிலை வடிவமாக இல்லாமல், அரூபமாக அமைக்கப்பட்டிருக்கிறது. சக்ர மகாமேருவாக பச்சைக்கருங்கல்லில் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார்கள். மூலப்பிரகாரத்தின் வடக்குப்பகுதியில் சேஷாத்திரி சுவாமிகளின் சந்நிதியும், இடப்பக்கம் கிருட்டிணன் சந்நிதியும், காணப்படும். மூலப்பிரகாரத்தின் இடப் பக்கத்திலிருந்த பதினெட்டு சித்தர்களின் தனித்தனி பாறைகளான குடில்களும் அமைக்கப்பட்டுள்ளன.

## சித்தர் குடில்களின் தோற்றம்

மூலப்பிரகாரத்தின் இடப் பக்கம் ஆரம்பித்து அதனைச் சுற்றி வலப் பக்கம் உள்ள கிருட்டிணன் கோயில் வரை பதினெண் சித்தர்கள் குடில்கள் வளைவுபோல் அமைக்கப்பட்டுள்ளது. இடப் பக்கத்தில் முதலில் திரு

சிவவாக்கியர்சித்தரின் சிலை, கம்பளிசட்டைமுனிசித்தரின் சிலை தெற்கு நோக்கி அமர்ந்தவண்ணம் அமைக்கப்பட்டுள்ளது. மகாபோகர்சிலை கிழக்கு நோக்கியும் காகபுசுண்டர் சிலை வடக்கு நோக்கியும்அமைக்கப்பட்டுள்ளன. புலிப்பாணிசிலை மேற்கு நோக்கியும், சட்டைமுனிசிலை கிழக்கு நோக்கியும் அமைந்துள்ளன.

புலிப்பாணி மற்றும் சட்டைமுனி சிலைகள் எதிரெதிர் திசையில் அமைக்கப்பட்டுள்ளன. அகப்பேய்சித்தர், அழுகணிசித்தர், குதம்பை, வள்ளலார், இடைக்காடர், பட்டினத்தார், கடுவெளி, அனைவரின் சிலை கிழக்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளன.

கஞ்சமலை சித்தர், சென்னிமலைசித்தர் இவர்களின் சிலைகளும் சட்டைமுனி புலிப்பாணிபோன்றே எதிரெதிர் திசையில் அமைக்கப்பட்டடுள்ளன.

கபிலர் கிழக்கு நோக்கியும், கருவூரார் கிழக்கு நோக்கியும், பாம்பாட்டிசித்தர் தெற்குநோக்கியும், சித்தர் குடில்களின் முடிவில் துலாபாரமும் அமைக்கப்பட்டு உள்ளது.

இங்கு அய்யப்பனுக்குத் தனி சந்நிதி அமைந்துள்ளது. மூலப்பிரகாரத்தோடு இணைந்து தட்சிணாமூர்த்தி, நால்வர், மகாவிஷ்ணு, ராஜகாளியம்மன், குருவாயூரப்பன்,சந்நிதியும் பிருந்தாவனமும் அமைந்துள்ளன.

உள்ளே புகைப்படம் எடுக்க அனுமதிப்பதில்லை, சித்தர்கள் பிறந்த நட்சத்திரத்தின் அடிப்படையில் அவரவர்களுக்கு தனித்தனியே பூசை நடைபெறுகின்றது. ஒவ்வொரு சித்தருக்கு ஏற்றார்போல் பூசை வழிபாடு மாறுபடும். வழிபாட்டின் போது சிலருக்கு புளிசாதம், எலுமிச்சை சாதம்,எள்ளுச்சோறு, தேங்காய், பழம், சுண்டல், சர்க்கரைப்பொங்கல், வைத்து வழிபாடுஇயற்றப்படுகின்றது. பக்தர்கள் தனித்தனியாகவும், தனிநபராகவும் வழிபாடு நடத்த அனுமதிக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு சித்தருக்கும் பூசை, வழிபாடு கட்டணம் வேறுபடுகிறது..

## சதுரகிரிகளஆய்வு

சதுரகிரி மலையைச்சுற்றி நான்கு பக்கங்களிலும் ஒவ்வொரு பக்கத்திற்கும் நான்கு மலை கள் வீதம் பதினாறு மலைகள் அதாவது கிரிகள் சதுரமாகச் சூழ்ந்துள்ளதால் இது சதுரகிரியாகும். இம்மலையில் சுந்தரமகாலிங்கம், சந்தனமகாலிங்கம், பெரியமகாலிங்கம், இரட்டைமகாலிங்கம், என மகாலிங்கங்கள் தலைமைத் தெய்வங்கள் இருப்பதனால் “மகாலிங்கமலை“ என்று கூறுவர். சதுரகிரியில் எண்ணற்ற சித்தர்களும் முனிவர்களும் தவம்புரிந்து கொண்டிருப்பதால் இதற்கு “சாமியார்மலை” என்ற பெயரும் உண்டு.

சென்னை கோயம்பேடு புறநகர் பேருந்து நிலையத்திலிருந்து சதுரகிரிமலைக்குச் செல்வதற்கு மதுரைவழியாக செங்கோட்டைசெல்லும் பேருந்தில் ஏறி திருவில்லிபுத்தூர் முன்பாகவே கிருஸ்ணன் கோயில் என்ற நிறுத்தத்தில் இறங்க வேண்டும். அங்கிருந்து சுமார் 10 கி.மி தொலைவில் அமைந்துள்ளது தான்தானிப்பாறை. தானிப்பாறை என்பது சதுரகிரி மலையை ஏறுவதற்கு முன்பு இந்த இடத்தைத் தான் கடந்து செல்லவேண்டும். இங்கு மேலே செல்வதற்கு நுழைவுச் சீட்டு வழங்குவர். நாம் எடுத்து செல்லும் பொருட்களைச் சோதனைச் செய்வார்கள். தானிப்பாறை இடத்தைச் சுற்றிலும் மலையில் கிடைக்கக் கூடிய வாசனைப் பொருட்கள் விற்பனை செய்யப்படும்.

### கோயில்அமைவிடம்

மலையின் உச்சிப் பகுதிக்குச் சென்றவுடன் இடது பக்கமாக சென்றால் அருள்மிகு சுந்தரமகாலிங்க ஆலயம் தோரணவாயில் காணப்படும். வலதுபக்கம் திரும்பினால் சந்தனமகாலிங்க ஆலயத்தின்

தோரணவாயில் காணப்படும். மலைகளில் இருபுறங்களிலும் பாலிதின்பைகளால் ஆனகூடாரம் அமைக்கப்பட்டு இருக்கும். அங்குமலையில் கிடைக்கும் வாசனைப் பொருட்கள், மருந்து பொருட்கள் சுக்குகசாயம், சித்தர்கள் பற்றிய புகைப்படங்கள் போன்றவை விற்பனை செய்யப்படும்.

**சதுரகிரிக்குச்செல்லஏற்பட்டஆர்வம்**

சித்தர்களின் பாடல்களை ஆய்வு செய்தபோதும் இவர்களின் வரலாற்றினைப் படிக்கும் போதும் சித்தர்களின் கோயில்கள், தவம் செய்த இடம், சமாதியான இடங்களைப் பற்றி அறிந்து அங்குச் செல்ல வேண்டும் என்ற நிலைக்கு மனம் சென்றது. இதனால் முதலில் பட்டினத்தார் கோயிலுக்குச் சென்று அவரின் அருளைப் பெற்று அப்போதே சதுரகிரிக்குச்செல்லவேண்டும்என்றஎண்ணம்உருவாகியது.

சதுரகிரிக்குச் செல்ல வேண்டும் என்றால் முதலில் சித்தர்களின் அருள் இருந்தால் மட்டுமே சதுரகிரிக்குச் செல்ல முடியும். அதனால் முதலில் சென்னைதாம் பரம் அடுத்துள்ள மாடம் பாக்கத்தில் அமைந்துள்ள பதினெண் சித்தர்களின் கோயிலுக்குச் சென்றேன்.

சதுரகிரிக்குச் செல்லும் முன் ஆய்வாளர் கோயிலின் தலைமை செயலளார் அவர்களைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு சதுரகிரிக்கு வருவதற்கான முறைகள் மற்றும் மற்ற நிலைமைகளைக் கேட்டுக் கொண்டோம்.

**தலைமைச் செயலாளர்:**

சதுரகிரிக்குச் சென்னையிலிருந்து பேருந்தின் மூலமாகவும் வரலாம், தொடர்வண்டி(இரயில்) மூலமாகவும் வரலாம்.

**தலைமைச் செயலளார்:**

பேருந்தின் மூலமாக வந்தால் மதுரை வழியாக வந்துடி. கல்லுப்பட்டி வழியாக கிருட்டிணன் கோயில் நிறுத்தத்தில் இறங்கி அங்கிருந்து ஆட்டோ மூலமாக செல்லலாம். பிறகு இரயில் மூலமாக வந்தால் திருவில்லிப்புத்தூர் இறங்கி அங்கிருந்து நேரடி பேருந்தின் மூலமாக சதுரகிரியை அடையலாம் என்றார்.

சதுரகிரிக்கு ஆடி அமாவாசை, தைஅமாவாசை, சித்திரா பௌர்ணமி, அமாவாசை, பௌர்ணமி, பிரதோசம் காலங்களில் மலையில் செல்ல அனுமதிக்கப்படுவார்கள். மற்ற நாட்களில் சென்றால் ஆட்கள்யாரும் வரமாட்டார்கள், காட்டுப் பகுதி என்பதனால் குழுக்களாக வந்தால் செல்லலாம் என்றார்.

**ஆய்வாளர்சதுரகிரிக்குச்செல்லஉதவியாகஇருந்தவர்கள்**

ஆய்வாளர் சதுரகிரிக்குச் செல்ல உதவியாக இருந்தவர் சகோதரர் திரு. தினகரன் அவர்கள் ஆவார். மற்றும் சகஆய்வாளரான கூ.லதா அவர்களின் தாய் ஆகும் மொத்தம் நாங்கள் நான்கு பேர் சென்றோம்.

**சதுரகிரிக்குச்செல்லகிடைத்தகடைசிவாய்ப்பு**

சதுரகிரிக்குச் செல்லவேண்டும் என மூன்று மாதத்திற்கு முன்பேதிட்டமிட்டோம். ஆனால் நாட்கள் சரியாக அமையவில்லை சித்தர்களின் அருளும் இல்லை என்று எண்ணியிருந்தோம். எனது

சகோதரர் திரு. தினகரன் அவர்கள் அடிப்படையில் நாத்திகவாதி கடவுள் நம்பிக்கை அற்றவர். ஆனால் அவர் தான் எங்களைச் சதுரகிரிக்கு அழைத்துச் செல்ல திட்டமிட்டவர்.

பேருந்தில் பயணம் செய்வதற்கு முன்பதிவு செய்யசென்ற நேரத்தில் கடைசி நான்கு இருக்கைகள் தான் முன்பதிவிற்கு இருந்தது அதைப்பதிவு செய்தோம். ஏனென்றால் சென்னையிலிருந்து இரவு 8.மணிக்குப் புறப்படும் பேருந்து மட்டும் தான் மதுரை மாவட்டம் டிகல்லுப் பட்டி வழியாக சென்று கிருட்டிணன் கோயில் நிறுத்தத்தில் நின்று பின்பு திருவில்லிபுத்தூர் வழியாக தென்காசி சென்று அங்கிருந்து செங்கோட்டை செல்லும். மற்ற பேருந்துகள் மதுரை வழியாக திருநெல்வேலி சென்று அங்கிருந்து சங்கரன் கோயில் வழியாக தென்காசி செல்லும். அதனால் தான் நாங்கள் சென்ற பேருந்தில் நான்கு இருக்கைகள் இருந்தன.

**மலைப்பாதை**

சதுரகிரி மலைப் பாதை சாதாரன மலைப்பாதை போன்ற அமைப்பை கொண்டிருக்காது வழியெங்கும் பாறைகள் அடர்ந்தகாட்டுப் பகுதி அபாயகரமான வளைவுகள் மேல் நோக்கி செங்குத்தாக வளைந்து அமைந்திருக்கும். பாறைகளின் மீதுநடந்து செல்ல வேண்டும் வழிகள் கிடையாது கரடு முரடாக காணப்படும். மலையேறுவதற்கு முன்பு பெரியவர்கள் ஆனாலும் சிறியவர்கள் ஆனாலும் கையில் நீண்ட தடியை எடுத்துக் கொண்டு தான் மேலே செல்ல வேண்டும். அப்போது தான்நாம் ஊன்றி நடப்பதற்குத் துணையாக இருக்கும்.

**உணவு**

மலையேறும் முன்பு நாம் உணவு சாப்பிட்டுவிட்டு ஏறினால் களைப்பு தெரியாது செரிமாணம் ஆகிவிடும். இல்லையென்றால் ஒரு சிலருக்குக்கு மட்டல், வாந்தி, மயக்கம் போன்ற தொல்லைகள் ஏற்படும். கையில் தண்ணீர்க்கு வளை (பாட்டில்) வைத்துக் கொண்டு தான் செல்லவேண்டும். மேலே செல்ல செல்லதாகம் அதிகமாக எடுக்கும். மலைப் பாதையில் இடை இடையே சிறு சிறு கடைகள் போடப்பட்டு இருக்கும். அங்குசுக்கு காபி, வெல்லம் கலந்தகசாயம், மரவள்ளிக் கிழங்கு, கேழ்வரகு அடை, பருத்திப்பால், பனங்கற் கண்டுபால் போன்ற இயற்கை சார்ந்த உணவுகள் கிடைக்கும். இதை உண்பதால் நமக்கு எந்த விதத் தொல்லைகள் ஏற்படாது.

**விலங்குகள்**

நாம் செல்லும் மலைப் பாதையில் பல்வேறு வகையான குரங்குகள் காணப்படும். குரங்குகள் நம்மிடம் வந்து உண்ண உணவு கேட்கும். அப்போது நாம் நம்மிடம் உள்ள சிறு உணவைக் கொடுத்து விட்டால் அது நம் அருகிலேயே அமர்ந்து சாப்பிடும். இல்லையென்றால் நம்மிடம் உள்ள பொருட்களைப் பலவந்தமாக பறித்துச் சென்று விடும்.

**அன்னதானக் கூடம்**

சதுரகிரி மலையின் உச்சில் அன்னதானக் கூடம் அமைந்துள்ளது. இங்கு இலவசமாக சுடச்சுட உணவு பரிமாறப்படுகின்றது. யார்வேண்டுமானாலும் சென்று சாப்பிடலாம். அங்கு அடுக்கிவைக்கப்பட்டுள்ள தட்டை எடுத்து சாப்பிட்டு விட்டு கழுவி அங்கே யேவைத்து விட வேண்டும்.

**சதுரகிரியில் ஆய்வாளருக்கு ஏற்பட்ட அனுபவம்**

சதுரகிரி மலையை ஏறுவதற்கு முன்பு தாணிப்பாறை என்ற இடத்தைக் கடக்க வேண்டும் அங்கு உள்ள ஆசிர்வாத விநாயகரை வழிபட்டு விட்டு மலை ஏற ஆரம்பித் தோம். முதலில் நடக்கும் போது மிகவும் சுறுசுறுப்பாக இருந்தது. ஒருமணி நேரம் கடந்த உடன் எனக்கு தலை சுற்றல் ஏற்பட்டது. மற்றும் குமட்டல் ஏற்பட்டது. இது போன்ற மலையேற்ற பழக்கம் இல்லை. மலையில் நடக்கும் போது மலைப் பாதையைப் பார்த்தவாறு நடந்து செல்ல வேண்டும். ஆனால் நான்சுற்றுமுற்றும் பார்த்தும் மேலே பார்த்தும் நடந்ததால் எனக்கு தலைச்சுற்றல் குமட்டல் போன்றவை ஏற்பட்டது.

சிறிது தூரம் கடந்த பிறகு நடக்க முடியவில்லை. கால்கள் அடுத்த அடிஎடுத்துவைக்க முடியாமல் தடுமாறினேன். பிறகு ஒருமரத்தின் அடியில் உட்கார்ந்துவிட்டேன். உடன் வந்த எனது சகோதரர் எங்களது உடைமைகளை வாங்கிக் கொண்டு அவர் முன்னே சென்று விட்டார். நீங்கள் ஓய்வு எடுத்து விட்டு வாருங்கள் என்று கூறிமுன்னே சென்றுவிட்டார். ஆனால் ஓய்வெடுத்த பிறகும் என்னால் முடியவில்லை. சக ஆய்வாளரானல தாவையும் அவரது அம்மைாவையும் முன்னே செல்லுங்கள் நான் வருகின்றேன் என்றேன். ஆனால் அவர்களும் என்னுடன் அமர்ந்திருந்தார்கள். நாங்கள் காலதாமாக வருகிறோம் என்ற தகவலை எனது சகோதருக்குத் தெரிவிக்க முடியாமல் போனது. ஏனென்றால் மலையில் அலைபேசி தொடர்புகிடையாது.

## ஆய்வாளரின் வேண்டுதலும் சித்தர்களின் அருளும்

சிறிது நேரத்தில் நான் கீழே இறங்கிவிடலாம் என நினைத்தேன். சிறிது நேரம் கண்களை மூடி சித்தர்கள் நாங்கள் உங்களைக் காணபல் வேறு இன்னல்களைக் கடந்துவந்துள்ளோம் தற்போது மட்டும் என்னால் மலையேற முடியவில்லை என்ன செய்யவது என்றேன். எனது உடலில் மாற்றம் நிகழ்ந்தது என்னால் எழுந்து நடக்கமுடிந்தது. சகஆய்வாளரை அடைந்தேன் உன் முகத்தில் புத்துணர்வு ஏற்பட்டுள்ளது என்றார். ஆம் என்றேன் அவர்களுடன் சேர்ந்து நடந்துச் சென்று கொண்டிருந்தோம். அப்போது சக ஆய்வாளரிடம் எனது சகோதரர் தமது உடமைகளை எடுத்துச் சென்று விட்டார் அதில் இனிப்பு உள்ளது சாப்பிட்டால் நமக்குப்புத் துணர்வு கிடைக்கும் என்றேன். நடந்து கொண்டிருந்தோம் உடனே என்னிடம் ஒருவர் இனிப்புகள் அடங்கிய பெட்டியைக் கொடுத்து எடுத்துக் கொள்ளுங்கள் என்றார். நானும் ஆச்சரியத்துடன் எடுத்துக் கொண்டேன். அந்த இனிப்புகளைச் சாப்பிட்டவுடன் புத்துணர்வு ஏற்பட்டு நாங்கள்வேகமாக நடக்க ஆரம்பித்தோம்.

## சதுரகிரிமலை

மலை ஏறும் போது என்னுடன் நடந்து வந்தவர்கள் என்னுடைய சோர்வைக் கண்டு குளிர்ச்சியானப் பொருட்களை வாங்கி சாப்பிடுங்க அது உதவியாக இருக்கும் என்றார்கள். அதையும் நாங்கள் வாங்கி சாப்பிட்டுக் கொண்டு சென்றோம். மலை ஏறும்போது இறங்குபவரிடம் கேட்டோம்; இன்னும் எவ்வளவு தூரம் உள்ளது என்று அதற்கு அவர்கள் நெடுந்தூரம் செல்ல வேண்டும் என்று சொல்லாமல் இன்னும் சற்றுதூரத்தில் சென்றால் வந்து விடும் செல்லுங்கள் என்றார்கள்.

**மலையில் நிகழ்ந்த அற்புதம்**

மலை ஏறும் சோர்வு ஒருபுறம் இருந்தாலும் சுந்தரமூர்த்தி சுவாமியைக் கண்டு விடலாம் என்ற நிலையில் நடந்து கொண்டிருந்தோம். நானும் சக ஆய்வாளரும் பேசிக் கொண்டு சென்றோம். வெய்யிலின் தாக்கம் அதிகமாக இருக்கின்றது. மழைபொழிந்தால் நன்றாக இருக்கும் குளிர்ச்சியாகவும் இருக்கும் என்றேன். உடனேநாங்கள் இருக்கும் பகுதியில் மட்டும் எங்கள் மீது தண்ணீர் ஊற்றினால் போலதெளித்தது. நாங்கள் அங்கேயே நின்று விட்டோம் சற்றும் எதிர் பாராத நிகழ்வாக அமைந்தது. பின்புநாங்கள் நடந்ததை ஆச்சரியமாக நினைத்து நடந்து சென்றோம். பிறகு வெய்யிலின் தாக்கம் சற்றுக் குறைந்து காணப்பட்டது

**மலையில் அமைந்துள்ள தெய்வங்கள்**

தாணிப்பாறை அடிவாரத்தில் கருப்பண்ண சுவாமி, பேச்சியம்மன், ராஜயோக காளியம்மன், ஆசிர்வாதவிநாயகர், போன்ற தெய்வங்களை தரிசித்தோம். மலைப் பகுதியில் குதிரை ஊத்து, கோரக்கர் குகை, அருவிகள், இரட்டைலிங்கம், பிலவாடிகருவப்பர், இவற்றைக் கடந்த பின்பு தான் சதுரகிரி மலையின் உச்சியை அடைய முடியும். அங்கு சுந்தர மகாலிங்கம், சந்தன மகாலிங்கம்போன்றவர்களைத் தரிசித்தோம்.

**இரட்டை இலிங்கம்**

இரட்டை லிங்கம் என்னும் இடத்தில் ஒரு பூசாரி அமர்ந்து கொண்டு லிங்கத்தைத் தரிசிக்க வருபவருக் குவிபூதியைக் கொடுத்துக் கொண்டு இருந்தார். இரட்டை லிங்கத்தைத் தரிசித்துவிட்டு அங்கிருந்து நடந்து சென்றோம். பிறகு நாவல் ஊற்று என்ற இடம் அடைந்தோம். அங்கு நாவல் மரத்தின் வேர்ப் பகுதியில் நீர்தேங்கி இருந்தது. அந்தநீரை எடுத்து

நாங்கள் குடித்தோம். அந்த ஊற்றின் அருகில் இந்த நீரைக் குடித்தால் நீரிழிவு நோய்குணமாகும் என்று பலகையில் எழுதப்பட்டிருந்தது.

**சிவனடியார் சந்திப்பு**

நாவல் ஊற்றைக் கடந்து நாங்கள் சென்று கொண்டிருந்தோம். வழியில் சிவனடியார்களைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. அவர் என்னை நோக்கி என்ன படித்துக் கொண்டிருக்கிறாய் என்றார். நான்பி எச்.டி,படித்துக் கொண்டிருக்கிறேன் என்றேன். அதற்கு இந்த ஆண்டுக்குள் ஆய்வேட்டை முடித்து விடுவீர்கள் என்றார். உங்கள் ஆய்வு சிறந்ததாக இருக்கும், விரைவிலே திருமணம் நடக்கும், நிறைய நீர்ச்சத்துள்ள காய்கறிகளை நீங்கள் சாப்பிட வேண்டும்என்றார். நாங்கள் அவரிடம் ஆசிர்வாதம் வாங்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தோம்.

**பிலாவடிகருப்பர்சன்னதி**

சிவனடியாரைச் சந்தித்து விட்டுநடந்து கொண்டிருந்தோம் வழியில் பிலாவடி கருப்பர் சன்னதியை அடைந்தோம். அங்கு தரிசனம் செய்தோம். அங்குள் ஒரு பலாமரத் தடியில் கருப்பன்ன சாமியின் சிலைகாணப்பட்டது. சற்று தொலைவில் ஒரு கிணறு காணப்பட்டது. அந்தக்கிணற்றை ஒட்டி ஒருகைபம்பு ஒன்று காணப்பட்டது. அதில் தண்ணீர் குடித்தோம் பின்பு நடக்க ஆரம்பித்தோம்.

**தற்காலிககடைகள்**

சதுரகிரி மலையில் வருகின்ற மக்களுக்காக ஆங்காங்கே பாலிதின் கொண்டுதற்காலிகக் கடைகள் அமைக்கப்பட்டிருந்தன. அந்தமலையில் கிடைக்கக் கூடிய அரிய வகையான வாசனை சாம்பிராணி, சித்தர்களின்

புகைப்படங்கள், மூலிகைப் பொருட்கள், மூலிகைக் கசாயம் போன்றவை விற்பனை செய்யப்பட்டன. இயற்கை சார்ந்த உணவு பொருட்கள் மட்டுமே விற்பனை செய்யப்பட்டன.

**சுந்தரமகாலிங்கம்**

கடைகளைக் கடந்துச் சென்றால் இடப்பக்கம் சுந்தரமகாலிங்க தோரணைவாயிலை அடைந்தோம். பின்பு சுந்தரமகாலிங்கத்தைத் தரிசனம் செய்துவிட்டு வந்துகொண்டிருந்தோம். சென்னையில் இருந்து கிளம்பி எந்த நோக்கத்திற்காக சதுரகிரி சென்றதற்கான இன்பத்தை அடைந்தாற் போல் உணர்வு ஏற்பட்டது. நாங்கள் சென்னையிலே திரும்பவருவதற்கான முன்பதிவு செய்துவிட்டோம் அதானால் நேரத்தைக் கணக்கில் கொண்டு சந்தனம காலிங்கரையும், பெரிய மகாலிங்கரையும் சந்திக்க முடியவில்லை. நாங்கள் முன்பதிவு செய்தபேருந்து திருவில்லிப்புத்தூரில் இருந்து இரவு 8.மணிக்கு சென்னை நோக்கிசெல்லும். அதனால் நாங்கள் உடனடியாக மலையில் இருந்து இறங்க ஆரம்பித்தோம்.

இருள் நெருங்க நெருங்க மிகவும் சிரமமாக இருந்தது ஏனென்றால் பேருந்து தவறவிட்டால் அடுத்தநாள் இரவுதான் சென்னைக்குப் பேருந்து இல்லை யென்றால். அங்கிருந்து மதுரைக்கு வந்துபின்பு சென்னைக்குப் பேருந்தில் செல்லவேண்டும். உடனடியாக எனதுச கோதரரை அழைத்து நீங்கள் திருவில்லிப்புத்தூர் சென்று பேருந்தில் வந்து கொண்டிருங்கள் நாங்கள் அதற்குள் கிருட்டிணன் கோயில் நிறுத்ததில் வந்துவிடுகின்றோம் என்றோம். எங்களால் வேகமாக இறங்க முடியவில்லை. இரவு 7.45க்கு இறங்கி வந்தோம். அங்கிருந்து கிருட்டிணன் கோயில் நிறுத்தம்

செல்ல குறைந்தபட்சம் 45 நிமிடம்பிடிக்கும். பேருந்தைத் தவறவிட்டு விடுவோம் என்று நினைத்தோம். ஆனால் எனது சகோதரர் ஓட்டுநரிடமும் நடத்து நரிடமும் நிலைமையை எடுத்துக் கூறி அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. இப்படியெல்லாம் வழியில் பேருந்தை நிறுத்த முடியாது. சரி பெண்கள் என்பதால் சுமார் பத்து நிமிடம் நிறுத்துகின்றோம் என்றார். வண்டி கிருட்டிணன் கோயில் நிறுத்தம் வந்து நின்றது. நாங்கள் ஆட்டோவில்வந்து கொண்டிருந்தோம். 8 மணியையும் கடந்தோம்.பேருந்து ஓட்டுநர் இதற்கு மேல் இங்கு அரசு பேருந்தை நிறுத்தினால் பிரச்சினை வரும் நீங்கள் வேறு பேருந்தில் வாருங்கள் என்று கூறிவிட்டு எனது சகோதரரை இறக்கி விட்டு விட்டு பேருந்தை இயங்க நகர ஆரம்பித்தது. நாங்கள் வந்த “ஆட்டோ” பேருந்தை முந்திக் கொண்டு முன்நின்றது. நாங்கள் பேருந்தில் ஏறிய பிறகு தான் புதுஉணர்வு கிடைத்தது. இதில் சிறப்பு என்னவென்றால் தாணிப் பாறையில் இருந்து கிருட்டிணன் கோயில் செல்ல ஆட்டோவில் சுமார் 45 நிமிடம் ஆகும். ஆனால் ஆட்டோ ஓட்டுநரின் சாதுரியமான திறமையால் நாங்கள் 20 நிமிடத்தில் வந்து சேர்ந்தோம். அப்போது தான் நினைத்தோம், சித்தர்களின் அருள் இருந்ததினால் தான் நாங்கள் நல்ல நிலையில் திரும்பிவந்தோம் என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டோம்.

# சித்தர் பாடல்கள்- ஆய்வும் அகராதி வடிவமைப்பும்

# (6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை)

**முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக**

**சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு**

**அளிக்கப் பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**த.ஜெயந்தி., பி.லிட்.,எம்.ஏ.,எம்..ஃ.பில்.,**

**முழுநேரமுனைவர்பட்டஆய்வாளர்**

**மேற்பார்வையாளர்**

**முனைவர் வ.ச.அபிராமவல்லி., எம்.ஏ., எம்..ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி.,**

**இணைப்பேராசிரியர்,தமிழ்த்துறை**

**தமிழ்த்துறை**

**எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை– 600 008.**


**ஜனவரி - 2019**

# நிறைவுரை

சித்தர் பாடல்கள் ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (6ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை) என்னும் ஆய்வின்வழி அறியப்பட்ட முடிவுகளை காணலாம்.

இவ்வாய்வில் முதன்மையாக அமைந்து இருப்பது சொல்லடைவும், அகராதி வடிவமைப்பும் ஆகும். இச்சொல்லடைவினைக் கொண்டு ஆய்வுச் செய்திகள் தொகுத்து ஆராயப்பட்டுள்ளன.

சித்தர்களின் வாழ்வும் வரலாறும் என்னும் இயலின் மூலம் ஒவ்வொரு சித்தர்களின் வரலாற்றினை அவர்கள் இயற்றிய நூல்கள் மூலமும், மற்றச் சித்தர்கள் இயற்றிய நூல்களில் இருந்தும், சித்தர் வரலாற்று நூல்களிலிருந்தும் அறியப்பட்டன.

சித்தர்களின் வரலாற்றின் மூலமும் பாடல்களில் இருந்தும் சித்தர்களின் நூற்றாண்டினை அறியமுடிகின்றன.

மொழிநோக்கு என்னும் இயலின் மூலம் சித்தர்களின் பாடல்களில் சொல்லின் இலக்கணம், அதன் வகைப்பாடுகள், சொல்லாக்கங்கள், இலக்கண அமைப்பும் ஆகியவற்றை அறியமுடிகின்றன. சொல்லடைவைக் கொண்டு சொற்கள் பெயர், வினை என்னும் இருநிலையில் ஆராயப்பட்டுள்ளன. பெயர்ச் செல்லை விட வினைச் சொல்குறைவாக அமைந்துள்ளன.

இலக்கிய நோக்கு என்னும் இயலின் மூலம்சித்தர் பாடல்களில் அமைந்துள்ள சந்தநயம், தொடைநயம், வருணணை, அணிகள், சொல்லாட்சி முதலிய இலக்கிய கூறுகள் அமைந்துள்ளன. சித்தர்கள் ஒவ்வொரு இலக்கிய நடையில் பாடிவுள்ளனர்.

சமயநோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடு என்னும் இயலில் உயிர், நாடி, உருவவழிபாடு, மூடநம்பிக்கை என்ற இதன் அடிப்படையில் சித்தர்களை உயிர்பற்றிக் கூறிய சித்தர்கள், நாடிபற்றிக் கூறியசித்தர்கள், உருவவழிபாடு, மூடநம்பிக்கையைக் கூறிய சித்தர்கள் என தனித்தனியாக சித்தர்களின் பாடல்கள் மூலம் ஆராயப்பட்டு தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.